சா. கணேசன்




# நிர்மாணத் திட்டம்

மகாத்மா காந்தி
ராஜேந்திரப் பிரசாத்

நவஜீவன் காரியாலயத்தாரின் அநுமதியுடன்
சென்னை கவர்ன்மெண்ட் அச்சுக்கூட சூப்பரின்டெண்டெண்டால்
அச்சிடப்பெற்றது
1949

விலை, அணா 14.




# நிர்மாணத் திட்டம்

மகாத்மா காந்தி
ராஜேந்திரப் பிரசாத்

மொழிபெயர்த்தவர்
**மு. அருணுசலம்**

நவஜிவன் காரியாலயத்தாரின் அநுமதியுடன்
சென்னை கவர்ன்மெண்ட் அச்சுக்கூட சூப்பரின்டெண்டென்டால்
அச்சிடப்பெற்றது
1949

# பதிப்புரை

நிர்மாண வேதம் என்று சொல்லத்தகும் இப்புத்தகம் கிராம அபிவிருத்தியில் ஆர்வமுள்ள அனைவருக்கும், முக்கிய மாக காந்தியடிகள் காண விரும்பிய சர்வோதய சமுதாயம் ஏற்பட வேலைசெய்யும் நிர்மாண ஊழியர்களுக்கு, பெரிதும் பயனுள்ளதாயிருக்குமென்று நம்புகிறோம்.

இப் புத்தகத்தை வெளியிட அன்புடன் அனுமதியளித்த நவஜீவன் காரியாலயத்தாருக்கும் நல்ல தமிழில் மொழி பெயர்த்துதவிய அன்பர் மு. அருணசலம் அவர்களுக்கும் எங்கள் நன்றி உரியது.

பிர்க்கா அபிவிருத்தி இலாகா

செயின்ட் ஜார்ஜ் கோட்டை,
சென்னை,
1949ஆு மார்ச்சுமீ 6வ.

# பொருளடக்கம்

## மொழிபெயர்ப்பின் முகவுரை

காந்தியடிகளின் நிர்மாணத் திட்டமானது முதன்முதலில் கட்டுரை யுருவத்தில் ஹரிஜன் பத்திரிகையில் 1940ஆம்ஸு ஆகஸ்ட்டுமீ 18 தேதி வெளியாயிற்று; பின்னர் இது தனிப் புத்தகமாக 1941ஆம்ஸு வெளிவந்தது. அக்காலம், இரண்டாவது உலக யுத்தம் நடந்துவந்த காலம். தனிப்பட்டோர் சத்தியாக்கிரகத்தை நிறுத்தி, புதிய பாரதத்தைச் சிருஷ்டிக்கும் வேலையாகிய நிர்மாண வேலையில் எல்லோர் மனத்தையும் செலுத்த எண்ணிய காந்தியடிகள் அப்போது இந்த நிர்மாணத் திட்டத்தை வகுத்துக் கொடுத்தார். அவரே கூறுகிறபடி, இதில் புதிதாக ஒன்றும் இல்லை. இந்திய சுயராஜ்யப் போராட்டத்தில், சத்தியம் அன்பு என்ற அடிப்படையில், அவர் தம் வாழ்க்கையில் நெடுங்காலமாய்க் கடைப்பிடித்துச் செய்துவந்த சில திட்டங்களைச் சகல ஊழியரும் செய்யவேண்டுமென்ற கருத்தோடு அவற்றை முறைப்படுத்தி வெளியிட்டதே இந்தப் புத்தகம்.

இந்த நிர்மாணத் திட்டத்தில் அப்போது பதின்மூன்று அம்சங்கள் இருந்தன. ஆனால், புதிய பாரத சமுதாயத்தை நிருமாணிப்பதற்கான துறைகள் பதின்மூன்றுதான் என்று வரையறுப்பதற்கில்லை; இவை எத்தனையோ பல. முதற் பதிப்பாய்த் திருத்தி வெளியிட்டபோது, காந்தியடிகள் வேறு சில புது அம்சங்களைச் சேர்த்து மொத்தம் பதினெட்டாக்கி வெளியிட்டார். இப் பதினெட்டு அம்சங்களே 'காந்தியடிகளின் பதினெட்டு அம்சங்கள்' எனப் பின்னர் பிரசித்தமாக வழங்கலாயின. இவையடங்கிய இரண்டாம் பதிப்பு 1945ஆம் வருஷக் கடைசியில் வெளியாயிற்று. அப்பதிப்பின் மொழிபெயர்ப்பே இத் தமிழ்ப் புத்தகத்தின் முதற் பகுதி.

காந்தியடிகளுடைய பதின்மூன்று அம்ச நிர்மாணத் திட்டம் முதற் பதிப்பு 1941 இல் வெளியானபின், "நிர்மாணத் திட்டம்—சில யோசனைகள்" என்ற பெயரோடு பாபு ராஜேந்திரப் பிரசாத் ஒரு சிறு புத்தகம் எழுதினர். இது 1942 இல் வெளியாயிற்று. காந்தியடிகளுடைய புத்தகத்தில், விவசாயிகள் தொழிலாளர் மாணவர் ஆகிய இவர்களின் அமைப்புப்

பற்றிய குறிப்பும் இருந்தது. ராஜேன் பாபு 13 திட்டங்களையும் பற்றி விளக்கமான யோசனைகள் கூறி முடித்தபின், தம் புத்தகத்தில் இந்த மூவர் பற்றியும் தனித்தனித் தலைப்புக்கள் கொடுத்து, இவர்களைத் தேச நிர்மாணத்துக்கேற்ற முறையில் திரட்டி அமைப்பதற்கான யோசனைகளையும் குறிப்பிட்டிருந்தார். காந்தியடிகளுடைய புத்தகத்துக்கு விளக்கமாய் அமைந்த இச் சிறு நூல் தொண்டர்களுக்கும் ஊழியர்களுக்கும் வழிகாட்டியாகவும் பேருதவியாகவும் அமைந்துள்ளது.

காந்தியடிகளுடைய இரண்டாம் பதிப்பில், 13 திட்டங்களோடு இம் மூவர் பற்றிய திட்டங்களையும் சேர்த்து 16 ஆக்கி, இவற்றோடு ஆதிவாசிகள், குஷ்டரோக நிவாரணம் என்ற இரண்டு புதுத் திட்டங்களையும் சேர்த்து 18 ஆக்கினர். ஆதிவாசிகள் என்பது இந்த நாட்டின் பழங்குடிகளாகிய நாகரிக வாழ்க்கை யில்லாத ஆதிக் குடிகளைக் குறிக்கும். இவர்கள் முன்னேற்றத்துக்காக நாம் உழைப்பது அவசியம் என்பதை அவர் ஹரிஜன் பத்திரிகையில் எடுத்துச் சொல்லி நிர்மாணத் திட்டத்தில் இது பதினன்காவது அங்கமாகச் சேர்க்கத் தக்கது என்று அவரே குறிப்பிட்டிருந்தார். ராஜேன் பாபு எழுதிய புத்தகத்தில் தீண்டாமை என்ற தலைப்பில் ஆதிக்குடிகள் பற்றிய குறிப்பும் சேர்த்திருக்கிறார். அக் குறிப்பு இத் தமிழ்ப் புத்தகத்தில் தனியே பிரித்துச் சொல்லப் பட்டுள்ளது.

குஷ்ட ரோக நிவாரணம், காந்தியடிகள் மனத்துக்குவந்த சேவையாதலினல், அதுவும் பின்னர் நிர்மாணத் திட்டத்தில் ஓர் அங்கமாக இடம் பெற்றிருக்கிறது.

இப் புத்தகத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் சம்பந்தமாக, அரசியல் நிலைமையை நாம் ஞாபகத்தில் வைத்திருக்கவேண்டும். நிர்மாணத்திட்ட நிறைவேற்றமே பூரணசுயராஜ்யம் என்று காந்தியடிகள் இதைக் குறிப்பிட்டபோது, அன்னிய ஆட்சியை அதிகாரத்திலிருந்து வெளியேற்றுவதே பெருங்காரியமாயிருந்தது. ஆனல் 1947-ஆம் ஆண்டு ஆகஸ்ட்மீ 15 தேதியில் இந்திய நாடு சுதந்திரம் பெற்றுவிட்டது. ஆதலால், இந்தச் சந்தர்ப்பத்தில், அன்று கூறிய திட்டங்கள் பலவற்றுக்கு நாம் புதுப் பொருள் கொள்ள வேண்டும். ‘விடுதலை’ என்ற சுருங்கிய பொருளில் அவற்றைக் கருத இப்போது அவசியமில்லை.

எனினும் காந்தியடிகள், தாம் லக்ஷயமாய்க் கொண்டிருந்த பூரண சுயராஜ்யம் இன்னும் வரவில்லையென்றும், அந்தச் சுயராஜ்யம் வருவதற்கு எல்லோரும் பாடுபடவேண்டுமென்றும் அடிக்கடி கூறிவந்தமையை நாம் மறக்கமுடியாது. அரசியல் சுதந்திரம் பெற்ற இந்திய நாடு இன்னும் பொருளாதார சுதந்திரமோ, சமூக சுதந்திரமோ பெறவில்லை. அன்பு வாழ்க்கையோ, சத்திய வாழ்க்கையோ ஏற்படவில்லை. ஆகவே, இவை கைகூடும் பொருட்டு நிர்மாண ஊழியர் அயராது உழைக்க வேண்டியவர்கள். இவ்விதம் உழைக்க இப்புத்தகம் இன்னும் தூண்டுகோலாகவும் வழிகாட்டியாகவும் இருக்கும் என்பது உறுதி.

காலப் போக்கில் அனேக வகையில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. நம் மாகாணத்தவர் இதுபற்றிப் பெருமைகொள்ள இடமிருக்கிறது. இங்கு ஏற்பட்டுள்ள மதுவிலக்கும், சட்டபூர்வமான தீண்டாமை ஒழிப்பும், மகாத்மா காந்தியின் மனத்துக்கு ஓரளவு சாந்தியளிக்கக்கூடிய நல்ல காரியங்கள் என்பதில் தடையில்லை. அப்படியே ராஜேன் பாபு, பெண்ணுரிமை என்ற தலைப்பில் ‘பல தார மணம் கூடாது’ என்று கூறியுள்ள கருத்து சட்டபூர்வமாக நிறைவேறி வருகிறது. இவை யாவும் பெரிய வெற்றிகள். இவை சம்பந்தமாக இப்புத்தகத்தில் கூறப்பட்டுள்ள சில வேலைத் திட்டங்கள் இனி அவசியமில்லாமற் போகும். இந்த அளவுக்கு நிர்மாணம் ஏற்பட்டது என்றே பொருளாகிறது.

இவைபோல, இங்குக் கூறப்பட்டுள்ள எல்லாத் திட்டங்களும் பூரணமாக நிறைவேறிவிடுமானால், எத்தகையதொரு லக்ஷிய சமுதாயத்தில் நாம் வாழ்வோம்! உதாரணமாக, கதர்த் திட்டமும், ஆதாரக் கல்வித் திட்டமும் உண்மையாகவும் பூரணமாகவும் நிறைவேறுமானால், பிறகு நாம் விரும்புவதற்கு வேறு என்ன இருக்கிறது? அந்த நிலைமையை வருவிப்பது நிர்மாண ஊழியர் கடமை. ஓயாது இக் கடமையைச் சுட்டிக் காட்டுவதே இப்புத்தகத்தின் வேலை.

மகாத்மா காந்தியின் மறைவுக்குப்பின் 1948ஆம்வருஷ மார்ச்சுமீ சேவாகிராமத்தில் கூடிய நிர்மாண ஊழியர்கள் ஒரு சர்வோதய சமாஜம் வகுத்து, அதற்குரிய வேலைத் திட்டமாக 18 நிர்மாணத் திட்டங்களோடு பின்னும் நான்கு திட்டங்களைச் சேர்த்தார்கள். அவையாவன: 19 பசுபாலனம், 20 இயற்கை

வைத்தியம், 21 துக்க நிவாரணமும் ஆபத்தில் உதவியும், 22 மற்றவை. இவற்றையும் இப்புத்தகத்தில் சேர்ப்பது பொருத்த மென்று தோற்றியமையால், இவை பற்றி அவ்வப்போது காந்தி யடிகள் முன்னமே வெளியிட்டிருந்த சில கருத்துக்களை மட்டும் தொகுத்து இப் புத்தகத்தில் அனுபந்தமாகச் சேர்த்திருக்கிறேன்.

திட்டங்கள் 21, 22 பற்றிச் சேர்த்தற்குரிய அனேகக் கருத்துக் கள் அவகாசமின்மையால் இப்போது தொகுத்துச் சேர்க்கப் பெறவில்லை. அடுத்த பதிப்பில் அவற்றைச் சேர்க்கக்கூடும்.

இப் புத்தகத்தை மொழிபெயர்ப்பதில் எனக்கு உதவியாயி ருந்தவர் இன்று ஆதாரக் கல்வி அதிகாரியாயுள்ள ரா. வே. ருத்ரப்பசாமி அவர்கள். அவருக்கு என் நன்றியைத் தெரிவித் துக்கொள்ளுகிறேன்.

மு. அருணாசலம்

## காந்தியடிகளின் முகவுரை

நிர்மாணத்திட்டம் என்ற புத்தகத்தை முதன்முதல் 1941ஆம் வருஷத்தில் எழுதினேன். இப்போது வெளியாகும் பதிப்பு, அதை முழுமையும் பரிசோதித்துத் திருத்தி எழுதிய புத்தகமாகும். இதில் அடங்கியுள்ள பகுதிகளை எந்த வரிசைக் கிரமத்திலும் இங்குத் தொகுத்து வைக்கவில்லை; முதலில் வரும் பகுதிகள் முக்கியமானவை, மற்றவை அவ்வளவு முக்கியமில்லாதவை என்று இவற்றை யாரும் கொள்ளலாகாது. வாசகரொருவர், குறித்த ஒரு விஷயம் இந்நாட்டின் சுதந்திரத்துக்கு ஆதாரமானது என்று கருதக்கூடும்; அந்த விஷயத்தைப்பற்றி இந்தத் திட்டத்தில் எதுவும் கூறாமலே இருக்கலாம்; இப்படி இருக்கக் கண்டால், அவ்விஷயம் ஏதோ தற்செயலாய் இங்கு விடுபட்டது என்றே அவர் எண்ணவேண்டும். இங்குக் கொடுத்துள்ள திட்டத்தின் பகுதிகளில் ஒன்றாக அதையும் சேர்த்துக் கொண்டு, இதுபற்றி எனக்குத் தெரிவிக்கவேண்டும். குறிப்பிடத்தக்க விஷயங்கள் எல்லாவற்றையும் இங்குக் குறிப்பிட்டு முடித்ததாக நான் எண்ணவில்லை. இங்குள்ள பகுதிகள் சில முக்கிய விஷயங்களை விளக்கவந்த உதாரணங்களேயாகும். வாசகரொவ்வொருவர் மனத்திலும், இதில் சேர்க்கத்தக்க முக்கியமான புதிய விஷயங்கள் பல தோன்றக்கூடும்.

பூரண சுயராஜ்யம் அடைவதற்கு நிர்மாணத் திட்டந்தான் சத்தியமும் அஹிம்சையும் பொருந்திய வழியாகும்; வாசகர் யாவரும், நிர்மாண ஊழியர் அல்லது தொண்டராயினும் சரி மற்றோராயினும்சரி, இதைத் திட்டமாக உணர்தல்வேண்டும். நிர்மாணத் திட்டம் அனைத்தையும் நிறைவேற்றுவதே பூரண சுயராஜ்யமாகும். மிகவும் தாழ்ந்த நிலையில் தொடங்கி மிக உயர்ந்த நிலையில் பாரத சமுதாயத்தைக் கொண்டுவந்து நிறுத்துவதற்கென்றே இந்தத் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. இந்த நாட்டிலுள்ள நாற்பது கோடி மக்களும் இந்த நிர்மாணத் திட்டத்தை ஏற்று இது முழுமையும் செயலில் கொண்டுவருகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அன்னிய ஆதிக்கத்தை ஒழிப்பதையும் சேர்த்து, பூரண சுயராஜ்யம் என்ற தொடரில் எத்தனைக் கருத்துக்கள் அடங்கக்கூடுமோ அத்தனையும் பொருந்திய பூரண சுயராஜ்யம் கைகூடுமென்பதுதான் நிர்மாணத் திட்டத்தைச் செயலில் கொண்டு வருவதன் பொருள். இதை யாரேனும் மறுக்க முடியுமா? இதில் குறை

காணுவோர் இருக்கலாம்; நான் கூறுவதைக் கேட்டு அவர்கள் சிரிக்கவும் செய்யலாம். அவர்கள் கருத்து, இந்தத் திட்டத்தை நாற்பது கோடி மக்களும் ஒருகாலத்திலும் ஒருமித்து நிறை வேற்றப்போவதில்லை என்பதேயாகும். அவர்கள் இப்படிப் பழிப்பதில் ஓரளவு உண்மை இருக்கிறதென்பதில் சந்தேகமில்லை. எனினும், இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முயல்வது பயனு டையதென்றே நான் மறுமொழி கூறுகிறேன். உற்சாகத்தோடு உழைக்கக்கூடிய ஊழியர் சிலரேனும் இதற்கு வேண்டும்; அவர் களிடத்து, சிறிதும் அசைக்க முடியாத மனவுறுதி அமைதல் வேண்டும். இது அமையுமானால், வேறெந்தத் திட்டத்தையும் போல இந்தத் திட்டத்தையும் செயலில் கொண்டுவர முடியும்; வேறெத்தனையோ திட்டங்களைவிட இதை வெற்றிகரமாகவே நடத்தமுடியும். எப்படியாயினும், நமது திட்டம் அஹிம்சை யைக் கொண்டு நடைபெறவேண்டுமானால், நிர்மாணத் திட்டத்தைவிட வேறு வழி எனக்குப் புலப்படவில்லை.

சட்டமறுப்பு, தனிப்பட்டோரும் செய்யலாம், பொது மக்கள் அனைவரும் திரளாகவும் செய்யலாம்; பொதுவாக இது நிர்மாண வேலைக்கு உதவுவதாகும். ஆயுதமேந்திப் புரட்சி செய்வதற்குப் பதிலாக, எல்லா விதத்திலும் கைக்கொள்ளத்தக்கது சட்ட மறுப்பே ஆகும். ஆயுதமேந்திப் போரிடுவதற்கு எவ்வளவோ பயிற்சி வேண்டும். சட்டமறுப்புக்கும் அவ்வளவு பயிற்சி வேண் டியதே. இரண்டுக்கும் பயிற்சி முறைகள் வித்தியாசமானவை. இரண்டிலும், சந்தர்ப்பம் நேர்ந்தால்தான் செயலில் இறங்க வேண்டி வரும். ஆயுதமேந்திப் போரிடுவதற்குப் பயிற்சி தருதல் என்றால், ஆயுதங்களை உபயோகிக்கப் பழகுதல் என்று பொருள் படும்; இது, நாம் இன்று கண்டபடி, ஒரு வேளை அணுக்குண் டில் போய் முடிந்தாலும் முடியலாம். சட்டமறுப்புக்குப் பயிற்சி தருதல் என்பது நிர்மாணத் திட்டம் என்றே பொருள்படும். ஆகவே, சட்டமறுப்புச் செய்வதற்குச் சந்தர்ப்பம் வரட்டு மென்று ஊழியர் ஒரு போதும் காத்துக்கொண்டிருக்க மாட்டார் கள். நிர்மாண வேலைக்கு இடையூறு எங்கேனும் ஏற்படுமென்று தோன்றினால் அங்கே இவர்கள் சட்டமறுப்புக்குச் சித்தமாயிருப் பார்கள். எந்தச் சந்தர்ப்பத்தில் சட்டமறுப்புச் செய்யலாம், எந் தச் சந்தர்ப்பத்தில் சட்டமறுப்புச் செய்யமுடியாது என்பது இரண் டோர் உதாரணங்களால் விளங்கும். அரசியல் ஒப்பந்தங்கள்

ஏற்படுவதைத் தடைசெய்ய முடியும், தடைசெய்தும் இருக்கிறார்கள் என்பதை நாம் அறிவோம்; ஆனால், தனிப்பட்ட நட்புரிமைகளை ஒரு போதும் தடைசெய்தல் முடியாது. இந்த விதமான தன்னலமற்ற உண்மை நட்புரிமைகளிலிருந்தே அரசியல் ஒப்பந்தங்கள் பிறக்கவேண்டும். இங்ஙனமே, ஒரு மத்திய ஸ்தாபனத்தின்மூலம் நடைபெறுகிற கதர் உற்பத்தி-வினியோக வேலை வெற்றி பெறாதபடி அரசாங்கம் செய்துவிட முடியும்; ஆனால், தனிப்பட்டோர் தாமே கதர் நூற்று உபயோகிப்பதை எந்த அதிகாரமுமே நிறுத்த முடியாது. பொது மக்கள் தாங்களே நூல் நூற்றுக் கதர் நெய்து அணியவேண்டுமென்று அவர்களைக் கட்டாயப் படுத்தக்கூடாது; ஆயினும் அவர்கள், சுதந்திர இயக்கத்தின் அங்கங்களில் கதரும் ஒன்று என்று புத்தி பூர்வமாகவும் மனப்பூர்வமாகவும் உணர்ந்து கொள்ளவேண்டும். சேவைக்கான இடம் கிராமமே என்று கொண்டால்தான் இது நடைபெறும். இப்படிப்பட்ட திட்டத்தை முதல்முதலாக ஏற்று நடத்த முன்வருபவர்களுக்கும் எத்தனையோ தடங்கல் ஏற்படக்கூடும். கொள்கையைச் செயலில் நடத்த முன் வந்தவர்கள் உலகெங்கும் பெருந் துன்பத்திற்கு ஆளாகியிருக்கிறார்கள். துன்பப்படாமல் சுயராஜ்யம் வந்துவிடாது. ஹிம்சை முறையில், முதன்முதலாக அழிவது சத்தியந்தான். அஹிம்சை முறையிலோ என்றும் சத்தியமே வெல்கிறது. மேலும், அரசாங்கத்தில் பதவி பெற்று வேலைசெய்பவர்களை விரோதிகள் என்று கருதலாகாது. அப்படிக் கருதுவது அஹிம்சைத் தத்துவத்துக்கே முரணாகும். அவர்களை விட்டு நாம் பிரியத்தான் வேண்டும்; நண்பர்களாய்ப் பிரியவேண்டுமேயொழிய, பகைவர்களாய்ப் பிரியவேண்டுவதில்லை.

முகவுரையாகச் சொல்லிய இக் குறிப்புக்களை வாசகர் செவ்வையாய் உணர்தல் வேண்டும்; உணர்ந்தால், இந்த நிர்மாணத் திட்டம் அவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் என்பது நிச்சயம். அரசியல் என்று சொல்லுகிறார்களே அதுவும், மேடைப் பிரசங்கமும் எப்படி உள்ளத்தைக் கவர்கின்றனவோ, அப்படியே இத்திட்டமும் உள்ளத்தைக் கவரும். அவற்றைவிட இது மிகவும் முக்கியமானதாயும் உபயோகமுள்ளதாயும் இருக்கும் என்பது உறுதி.

புனா, 1945ஆம் வருஷம் நவம்பர்மீ 13உ

# நிர்மாணத் திட்டம்

## அதன் விளக்கமும் அதற்குரிய ஸ்தானமும்

## முன்னுரை

நிர்மாணத் திட்டம் என்ற இந்தத் திட்டத்தை, அஹிம்சை சத்தியம் என்ற வழிகளைக் கடைப்பிடித்துப் பூரண சுயராஜ்யத்தை அமைத்தல் என்று வேறு விதமாகச் சொல்லலாம்; இப்படிச் சொல்வது பொருத்தமுமாகும்.

சுயராஜ்யத்தை நிர்மாணிக்கும் வழிகளில் ஹிம்சை முறையும் ஒன்று என்று சிலர் கருதுகிறார்கள். இந்த முறை அசத்தியத்தையே சாதனமாகக் கொண்டதென்பது நிச்சயம். இந்த முறையைப் பின்பற்றி நாம் பெரிதும் கஷ்டப்பட்டிருக்கிறோம். இன்றைய யுத்தத்தில் நாள்தோறும் அளவற்ற சொத்தும் மக்கள் உயிரும் நாசமடைவதைப் பார்த்தாலே போதும். சத்தியமும் இங்கு பலியாவதை நாம் பார்த்து வருகிறோம்.

சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடித்துப் பூரண சுயராஜ்யம் பெறுவதென்பது, சமுதாயத்தின ஒவ்வொரு தனிப் பகுதியும் சுதந்திரமடைவது என்று பொருள்படும். இந்தப் பகுதி சமுதாயத்தில் எவ்வளவு தாழ்ந்த நிலையில் இருப்பதாயினும்சரி, இனம் நிறம் அல்லது சாதி பற்றிய எந்த வேறுபாடும் இல்லாமல் இது சுதந்திரம் பெறும். இந்தச் சுதந்திரம், மற்றவர்களோடு எவ்விதத் தொடர்பும் இல்லாமல் விலகி நிற்பதென்று பொருள்படாது. எனவே இது, சமுதாயத்தின் ஒவ்வொரு பகுதியும் தனக்குள்ளாகவும் மற்றப் பகுதிகளோடும் தொடர்பு கொண்டு ஒழுகுவதற்கு இயைந்ததாயிருக்கும். யூக்லிட் என்ற கணித நிபுணர், கணித சாஸ்திரப்படி, 'கோடு' என்பதற்கு இலக்கணம் வகுத்தார். கோடு என்பது, அகலமே இல்லாமல் நீளம்மட்டுமே உடையது என்று அவர் கூறினார். ஆனால், நாம் வரையும் கோடு எதுவும் இந்த இலக்கணத்துக்குப் பொருந்தாது; பென்சிலை எடுத்துக் கோடு இழுத்த மாத்திரத்தில் அகலம் ஏற்பட்டுவிடும்; அகலமிருந்தால் இலக்கணத்துக்குப் பொருந்தாது. அகலமில்லாவிட்டால் கோடிருப்

பதே தெரியாது. இதுபோல், செயலில் வரும்போது எதுவும் கொள்கையிலிருந்து சற்றே குறைந்துவிடுகிறது. ஆகவே, பூர்ண சுயராஜ்யம் என்பதுங்கூட, சத்தியத்தையும் அஹிம்சையையும் வாழ்க்கையில் நாம் என்ன அளவுக்குக் கடைப்பிடிக்கத் தயாராக இருக்கிறோமோ அந்த அளவுக்குத்தான் பூரணமாயிருக்கும்.

நிர்மாணத்திட்டம் முழுவதையும் வாசகர் தம்முடைய மனத்தில் ஒழுங்குபெற வகுத்துப் பார்க்கட்டும். இத் திட்டத்தை வெற்றிகரமாக நடத்தினுல் இதன் முடிவே நாம் வேண்டுமென்று நினைக்கிற சுயராஜ்யம் என்பது என் அபிப்பிராயம்; இந்த அபிப்பிராயத்தை வாசகரும் ஏற்றுக்கொள்வார். 'இந்த நாட்டிலுள்ள முக்கியமான கட்சிகளிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டுவிட்டால் அதன்படி நடக்கச் சித்தம்' என்று இந்தியா மந்திரியாயிருந்த அமெரி சொல்லியதை நாம் அறிவோம். இந்த ஒப்பந்தம் என்பது, என் பாஷையில் சொல்வதானுல், சாதி ஒற்றுமை உண்டானபின் ஏற்படும் ஒப்பந்தந்தானே? அவர் மனப்பூர்வமாக இப்படிச் சொன்னுரா என்பதை நாம் ஆராயவேண்டாம். ஏனெனில், அந்த ஒற்றுமை நேர்மையான முறையில், அதாவது அஹிம்சை வழியில், ஏற்படுமானுல், ஒப்பந்தத்தை ஏற்று நடக்கும்படி கட்டாயப்படுத்துவதற்கான சக்தியும் அதனிடத்திலேயே அமைந்திருக்கும்.

இது நிற்க, ஹிம்சை முறையில் சுதந்திரம் பெறுவதென்பதற்குக் கற்பனையாகவும் இலக்கணம் சொல்லமுடியாது, பூரணமான இலக்கணமும் இல்லை. ஏனெனில், சமுதாயத்தில் எந்தக் கட்சியானது பலாத்காரத்தை மிகவும் சாமர்த்தியமாக உபயோகிக்கிறதோ அந்தக் கட்சியே அதிகாரம் வகிப்பது என்பதே, ஹிம்சை முறையில் சுயராஜ்யம் அடைவதன் பொருளாகும். அங்கு, செல்வ நிலையிலும் சரி மற்றெதிலும் சரி, பூரண சமத்துவத்துக்குக் கொஞ்சமும் இடமில்லை.

எனது நோக்கம், அஹிம்சை வழியில் ஒழுக வேண்டுமானுல் நிர்மாணத் திட்டத்தைக் கடைப்பிடிப்பது அவசியம் என்று வாசகருக்கு உணர்த்துவதாகும். இதற்கு, ஹிம்சை முறை சுயராஜ்யத்தைத் தரவல்லதன்று என்ற எனது வாதத்தை ஒப்புக்

கொள்வது கூட அவசியமில்லை. ஹிம்சையை ஆதாரமாகக் கொண்ட ஒரு வேலைத்திட்டத்தின் மூலம், சமுதாயத்தில் மிகத் தாழ்ந்த நிலையிலுள்ள பகுதிக்கும் சுதந்திரம் கிடைப்பது சாத்யம் என்று வாசகர் எண்ணலாம். அப்படி எண்ணுவதில் நமக்கு ஆட்சேபமில்லை. ஆனால், சமுதாயம் முழுவதும் இந்த நிர்மாணத்திட்டத்தைப் பூர்த்தியாக நிறைவேற்றினால் அந்தச் சுதந்திரம் நிச்சயம் கைகூடும் என்பதை அவர் ஒப்புக் கொண்டால் போதும்.

இனி, இந்த நிர்மாணத்திட்டத்தின் அம்சங்கள் ஒவ்வொன்றும் ஆராய்வோம்.

## 1. வகுப்பு ஒற்றுமை

வகுப்பு ஒற்றுமை ஏற்படுவது அவசியமென்று எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால், அந்த ஒற்றுமை வெறும் அரசியல் ஒற்றுமையன்று என்பதை அவர்கள் உணர்வதில்லை. அதிகாரம் மூலமாக வகுப்பு ஒற்றுமையை உண்டாக்கலாம். ஆனால், நான் கூறுகிற வகுப்பு ஒற்றுமையானது எவ்விதத்திலும் பிளவுபடுத்த முடியாத இதய ஒற்றுமையாகும். காங்கிரஸ்காரர் ஒவ்வொருவரும், தாம் எந்த மதத்தைச் சேர்ந்தவராயினும் சரி, தம்முடைய வாழ்க்கையில் தாமே ஒரு ஹிந்துவாகவும் முஸ்லிமாகவும் கிறிஸ்தவராகவும் பார்ஸியாகவும் யூதர்கவும் மற்ற மதத்தினராகவும் இருந்துவரவேண்டும். சுருங்கச் சொன்னால் அவரே ஹிந்துவாகவும் ஹிந்துவல்லாத பிற மதத்தினராகவும் இருந்துவரவேண்டும். இப்படி இருப்பது மேற்சொன்ன இதய ஒற்றுமை உண்டாவதற்கு முக்கியமான முதல் விஷயமாகும். காங்கிரஸ்காரர் ஹிந்துஸ்தானத்திலுள்ள கோடிக் கணக்கான மக்களில் ஒவ்வொருவருடைய இதயத்தையும் நேரே உணர்தல் வேண்டும். இவ்விதம் உணரும்பொருட்டு, அவர் தம்முடைய மதமல்லாத பிற மதத்தினரோடு நட்புரிமையை வளர்த்துக்கொள்ளவேண்டும். தம் மதத்தில் அவருக்கு எவ்வளவு பக்தி இருக்கிறதோ அவ்வளவு பக்தி மற்ற மதங்களிடத்திலும் இருத்தல் வேண்டும்.

நமது சமூகம் இவ்வளவு செம்மையான நிலைமையில் இருக்கு மானல், இன்று ரயிலடிகளில் ரயில் வந்து நின்றவுடனே, தண் ணீர் கொடுப்பவர்களும் தேநீர் விற்பவர்களும் (வட இந்தியா வெங்கும்) 'ஹிந்துப்பானி,' 'முஸ்லிம்பானி' (பானி—தண்ணீர்) என்றும், 'ஹிந்துச்சா' 'முஸ்லிம்சா' (சா—தேநீர்) என்றும் கூவி விற்கக் காண்கிறோமே, இந்தக் கேவலமான கூச்சலைக் கேட்க முடியாது. சிறு பள்ளிக்கூடங்களிலும் பெரிய கலாசாலைகளிலும், ஹிந்துக்களுக்கும் மற்றவர்களுக்கும் தனித்தனியான அறைக ளும் தண்ணீர்ப் பானைகளும் அமைத்திருக்கக் காண்கிறோம். நாம் குறிப்பிடுகிற சமூகத்தில் இவற்றைக் காணமுடியாது; வகுப்பு வாரியான பாடசாலைகளோ கல்லூரிகளோ ஆஸ்பத்திரி களோ அங்கு இரா. இத்தகைய புரட்சி ஒன்றைக் காங்கிரஸ்காரர் கள் தோற்றுவிக்கவேண்டும். இந்தத் துறையில் அவர்கள் செம் மையான நெறியில் உழைக்கும்போதுகூட, அரசியல் நோக்கம் எதுவும் வைத்துக்கொள்ளக் கூடாது. இந்த உழைப்பின் பயனுய் அரசியல் ஒற்றுமை இயல்பாகவே விளையும்.

சட்ட சபைகளின் மூலம்தான் அதிகாரம் கிடைக்கிறது என்றே நெடுங்காலமாய் நினைத்து வந்திருக்கிறோம். செயல் செய்து பழக்கமில்லாமையால் வந்த சோம்பல் அல்லது மயக்கம் காரண மாக விளைந்த ஒரு பெருந்தவறு என்றுதான் நான் இந்த நினைப்பைக் கருதுகிறேன். நம்மவர் இங்கிலாந்து தேச சரித்தி ரத்தை மேலெழுந்தவாரியாகப் படித்துவிட்டு, பார்லிமெண்ட் சபைகளிலிருந்துதான் பொதுமக்களுக்கு அதிகாரம் சுரக்கிறது என்று எண்ணுகிறார்கள். இது தவறு. அதிகாரம் அல்லது சக்தி உண்மையில் பொதுமக்களிடம்தான் இருக்கிறது. குறித்த ஒரு காலத்தில் இவர்கள் தங்களுக்கேற்ற பிரதிநிதிகள் என்று யாரைத் தேர்ந்தெடுக்கிறார்களோ அவர்களிடம் இந்த அதிகார மும் சேருகிறது என்பதுதான் உண்மை. பொதுமக்கள் சம்பந் தம் இல்லாதபடி பார்லிமெண்டுகளுக்குமட்டும் தனியாக எந்த அதிகாரமும் இல்லை. அவை தனியாக இயங்கவும் முடியாது. சென்ற இருபத்தைந்து வருஷங்களாக நான் முயன்று வந்த தெல்லாம், இந்தச் சாமானிய உண்மையை மக்களுக்கு உணர்த்து வதற்கே யாகும்.

சட்ட மறுப்பென்பது சக்தியெல்லாம் திரண்டுள்ள சர்க்கரை யாகும். ஒரு மக்கட் சமுதாயம் முழுமையும் சட்டசபை செய் யும் சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க மறுத்து, இப்படி மறுப்பதனுல் வரும் துன்பமனைத்தையும் அனுபவிக்கவும் சித்தமாயிருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். இந்த மக் கள் சட்டநிர்ணயம் அரசியல்நிர்வாகம் முதலிய யாவற்றை யும் செயலற்று நிற்கும்படிச் செய்துவிடுவார்கள். சிறுபான்மை வகுப்பினர் எவ்வளவுதான் பலமுள்ளவர்களாயிருந்தபோதி லும், அவர்களை அடக்கப் பொலீஸ் படையும் ராணுவப் படையும் ஓரளவுக்கு உபயோகப்படும். ஆனுல், மக்கள் அனைவருமே என்ன கஷ்டம் நேரினும் சகித்துக்கொள்ளத் துணிந்துவிடும் பட்சத்தில், அவர்களுடைய திடமான மனவுறுதியை எந்தப் பொலீஸ் படையோ அல்லது ராணுவப் படையோ சிறிதும் அசைக்க முடியாது.

மேலும், பார்லிமெண்டில் வழங்குவதுபோன்ற அரசியல் நடவடிக்கை முறையானது, அதில் அங்கம் வகிப்பவர்கள் பெரும் பான்மையினரின் அபிப்பிராயத்துக்குக் கட்டுப்பட்டு நடக்க இசைந் தால்தான் பயன்படுவதாயிருக்கும். அதாவது, இந்த முறை, ஒத்த நிலையினரிடையேதான் ஓரளவு வெற்றிகரமாயிருக்கும்.

இந்தியாவிலோ, நிலைமை இதற்கு மாருக இருக்கிறது. தனித் தொகுதிகள் மூலம் பார்லிமெண்ட் அரசியல் முறையை நடத்து வதாக நாம் எண்ணிக்கொண்டிருக்கிறோம். ஆனுல், இத் தனித்தொகுதி முறையானது வெவ்வேருன நிலையுள்ள மக் களைச் செயற்கையில் உண்டாக்கியிருக்கிறது. செயற்கையாய்த் தோன்றியுள்ள இந்த நிலையில் வாழும் மக்களை ஓரிடத்தில் ஒன்ருய்க் கூட்டியதால் மட்டும் வாழ்க்கையில் உண்மையான ஒற்றுமை ஏற்பட்டுவிடாது. இந்த நிலையில் ஒருவேளை சட்ட சபைகள் கூடி விவகாரம் நடத்தலாம். ஆனுல், உண்மையான அதிகார மானது, நம்மை ஆள்பவர் யாராயினும் சரி அவர்களிடத்திலே தான் இருக்கும்; மிகச்சொற்ப அதிகாரமே தங்கள் வசமில்லாமல் பிரித்து மக்களிடம் கொடுப்பார்கள். எச்சிலிலைக்குச் சண்டை போட்டுக்கொள்ளும் பிராணிகள்போல, இந்தச் சொற்ப அதிகா காரத்தைப் பெறும்பொருட்டு மக்கள் சண்டைபோடுவதற்கான இடங்களாகவே அச் சட்டசபைகள் இருக்கும். ஆள்பவர்கள் தங்கள்

கோலைக் கடுமையாகவே செலுத்துகிறார்கள். மக்களிடையே பகைமையாயுள்ள தொகுதிகள் ஒன்றை யொன்று தாக்காத வண்ணம் அவர்களே பார்த்துக்கொள்ளுகிறார்கள். இந்த வெட்கக்கேடான நிலைமையிலிருந்து பூரண சுயராஜ்யம் உதிப்பது சாத்தியமில்லை யென்று நான் கருதுகிறேன்.

இவ்விதம், என் அபிப்பிராயங்கள் கண்டிப்பானவை. ஆயினும், தேர்ந்தெடுத்த பிரதிநிதிகள் அடங்கிய சபைகள் விஷயத்தில் காங்கிரஸ் என்ன செய்யவேண்டும் என்பதுபற்றி, இவ்வபிப்பிராயங்களைச் சிறிது மாற்றிக்கொண்டிருக்கிறேன். இன்று மேற்கூறிய ஸ்தாபனங்களில் விரும்பத்தகாத பிரதிநிதிகள் காணப்படுகிறார்கள். இந்த நிலைமை மாறுதவரையில், அவற்றில் பிற்போக்காளர் அங்கத்தினராவதைத் தடுக்கும்பொருட்டு, காங்கிரஸ் தன் அபேட்சகர்களை நிறுத்தி அங்கத்தினராக்கவேண்டுமென்றே நான் கருதுகிறேன்.

## 2. தீண்டாமை ஒழிப்பு

ஹிந்து மதத்தில் ஏற்பட்ட மாசு என்றும் சாபம் என்றும் சொல்லத்தக்கது, தீண்டாமை ; இதை ஒழிப்பது எவ்வளவு அவசியம் என்பதுபற்றி இவ்வளவு காலத்துக்குப்பின் விஸ்தரித்துச் சொல்லத் தேவையில்லை. இது சம்பந்தமாய்க் காங்கிரஸ்காரர் அரிய சேவை செய்திருக்கிறார்கள் என்பது உண்மை. ஆயினும், இன்றைய அரசியல் நிலை காரணமாகச் செய்யவேண்டியிருக்கும் வேலைகளுள் ஒன்று என்றுதான் காங்கிரஸ்காரரில் அனேகர் தீண்டாமையொழிப்பைக் கருதுகிறார்கள். ஹிந்துக்கள் சம்பந்தப்பட்டவரையில், ஹிந்து மதமே அழியாமல் நிலைத்து நிற்பதற்கு இன்றியமையாத ஒரு காரியம் என்று அவர்கள் இதைக் கருதுவதில்லை. இதைச் சொல்ல எனக்கு மிக்க வருத்தம் உண்டாகிறது. காங்கிரஸில் ஹிந்துக்களாயுள்ளவர்கள் அரசியலைக் காரணமாய்க் கொண்டு தீண்டாமையொழிப்பில் ஈடுபடாமல், முக்கியமாய்ச் செய்யவேண்டிய சேவை என்ற எண்ணத்தோடு இதில் ஈடுபடவேண்டும். அவ்விதம் ஈடுபட்டால் இன்று சனாதனிகள் மனத்தை எவ்வளவு தூரம் மாற்ற முடிந்திருக்கிறதோ அதைவிடப் பல மடங்கு அதிகமாக மாற்ற

முடியும். போரிடும் மனப்பான்மையோடு இவர்கள் சனாதனி களிடம் போகக் கூடாது ; தங்கள் அஹிம்ஸைக் கொள்கைக்கு ஒத்தவிதமாக அவர்களிடம் நட்புரிமையோடு போகவேண்டும். ஹரிஜனங்கள் சம்பந்தப்பட்டவரையில், ஹிந்து ஒவ்வொருவரும் அவர்களுடைய நன்மை தீமையை தமதென்றே பாவித்து ஒதுக்கப்பட்டுத் தனியாயிருக்கின்ற அந்த மக்களோடு தோழமை பூணவேண்டும். இந்தியாவில் ஹரிஜனங்கள் ஒதுக்கித் தனியே விடப்பட்டுள்ள பெருங் கொடுமையைப் பார்த்தால், இதற்குச் சமானமாக உலகத்தில் எங்குமே கொடுமை இருந்ததில்லை என்று சொல்லத் தோன்றுகிறது. தோழமை பூணும் காரியம் எவ்வளவு கஷ்டமானதென்பது அனுபவத்தால் எனக்குத் தெரியும். ஆயினும், இதுவும் சுயராஜ்ய மாளிகையை நிருமாணிப்பதில் ஓர் அங்கமாகும். சுயராஜ்யத்துக்குச் செல்லும் பாதை சுலபமானதன்று ; குறுகலாயிருக்கும், செங்குத்தாயுமிருக்கும். வழியில் எத்தனையோ ஏற்றங்கள் வழுக்கிவிடும் ; பாதாளம் வரை பிளந்துள்ள வெடிப்புக்களும் உண்டு. தயங்காமலும் அஞ்சாமலும் அடி எடுத்துவைத்து இந்த இடையூறுகளனைத்தையும் கடந்து முன்னேறிச் சென்றால்தான் நாம் செல்ல வேண்டிய சிகரத்தை அடைந்து, சுதந்திரம் என்ற நிர்மலமான காற்றைச் சுவாசிக்கவியலும்.

## 3. மதுவிலக்கு

இதுவரையில் கூறிவந்த வகுப்பு ஒற்றுமை தீண்டாமை ஒழிப்பு என்ற அங்கங்கள் போலவே, மதுவிலக்கும் 1920 முதல் காங்கிரஸ் திட்டத்தில் இருந்துவருகிறது. சமூகத் துறையிலும் நல்லொழுக்கத் துறையிலும் இது ஒரு ஜீவாதாரமான சீர் திருத்தமாகும். எனினும், காங்கிரஸ்காரர் கிரமமாக எவ்வளவு ஆர்வம் காட்டவேண்டுமோ அவ்வளவு ஆர்வம் இதில் காட்டவில்லை. லக்ஷக்கணக்கான மக்கள், ஆடவரும் பெண்டிரும், குடிக்கும் போதைக்கும் இரையாகி வருகிறார்கள். அஹிம்சை முறையைக் கடைப்பிடித்து நாம் நமது லக்ஷியத்தை அடைய வேண்டுமானால், இந்த மக்களை நல்வழிக்குக் கொண்டு வரும் பொறுப்பை எதிர்காலத்தில் வரும் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளட்டும் என்று இருந்துவிட முடியாது.

இந்தத் தீமையை ஒழிப்பதற்கு வைத்தியத் தொழிலில் தேர்ச்சி பெற்றவர்கள் ஒரு வழியில் நல்ல உதவி செய்ய முடியும். குடிகாரனேயும் அபினி தின்பவனேயும் அக்கொடிய பழக்கங்களிலிருந்து மீட்பதற்கான வழிகளை இவர்கள் தேடலாம்.

மதுவிலக்கு வெற்றி அடையச் செய்வதில் பெண்களுக்கும் மாணவர்களுக்கும் சிறப்பான ஒரு சந்தர்ப்பம் இருக்கிறது. உள்ளன்போடு பணிசெய்வதனுல் இவர்கள் குடி முதலிய வற்றில் ஈடுபட்டவர்களுடைய மனத்தைக் கவர்ந்துகொள்ள முடியும். இந்தக் கவர்ச்சியின் பயனுய், குடியை அடி யோடு விட்டுவிடும்படி அவர்களுக்குப் புத்திமதி கூறி நல்ல வழிக்குக் கொண்டு வருவதும் சாத்தியம்.

காங்கிரஸ் கமிட்டிகள், பொழுது போக்குக்கான சிற்றுண்டிச் சாலைகளும் விடுதிகளும் அமைக்கலாம். உழைத்துச் சோர்ந்து வரும் தொழிலாளி, இங்கு வந்து தன் சோர்வை நீக்கிக் கொள்ளலாம்; ஆரோக்கியமான சிற்றுண்டிகளை மலிவான விலையில் பெறலாம்; பொருத்தமான விளையாட்டுக்களிலும் ஈடுபடலாம். இத்தகைய வேலை, மனத்தைக் கவரக்கூடியது; நல்லொழுக்கம் தரக்கூடியது.

சுயராஜ்யம் பெற அஹிம்சை வழியில் முயல்வதென்பது ஒரு புதிய முயற்சி. இம்முயற்சியில், சிறந்தவை என்று முன்னமே கருதிய லக்ஷ்யங்களை விட்டு, புதிய லக்ஷ்யங்களைக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஹிம்சை முறையில் இப்படிப் பட்ட சீர்திருத்தங்களுக்கு இடமிராது. ஹிம்சை முறையில் ஒழுகுபவர்கள், தங்களுக்கு ஏற்பட்ட ஆத்திரத்தில், செய்ய வேண்டிய சீர்திருத்தங்களை உடனே செய்யாமல் சுயராஜ்யம் வந்தபின் பார்த்துக் கொள்ளலாம் என்று விட்டுவிடுகிருர்கள்; இது அறியாமை என்றுகூடச் சொல்லத் தோன்றுகிறது. நிலைத்த செம்மையான விடுதலை அகத்திலிருந்தே உதிப்பது, அதாவது ஆன்ம சத்தியினுல் விளைவது என்பதை இவர்கள் மறந்துவிடுகிருர்கள். நிர்மாண ஊழியர் செய்யும் பணி சட்ட பூர்வமாக மதுவிலக்கு ஏற்பட வழி கோலாமலிருக்கலாம். ஆயினும், அவர்களே மதுவிலக்கு வேலை சுலபமானதாகவும் வெற்றி பெறத்தக்கதாகவும் செய்கிருர்கள்.

## 4. கதர்

கதர் என்பது விவாதத்துக்கு இடமான விஷயம். கதர்ப் பிரசாரம் செய்வதில் நான் காலப்போக்குக்கு மாருகச் செல்கிறேன் என்று பலர் நினைக்கிருர்கள். சுயராஜ்யக் கப்பலை நான் ஒட்டினுல் கப்பல் கவிழ்ந்துவிடுமென்றும், நாகரிகமற்ற பண்டைக் காலத்து வாழ்க்கையை நாட்டில் மீண்டும் நிலைநாட்ட முயல்கிறேனென்றும் அவர்கள் நினைக்கக்கூடும். விஸ்தாரமாய் எழுதவியலாத இந்த இடத்தில், கதர்தான் சுயராஜ்யத்துக்கு ஏற்றது என்பதை நான் விளக்கிக் கூறப் போவதில்லை. வேறிடத்தில் இதற்கான வாதங்களை விவரமாகக் கூறியிருக்கிறேன். காங்கிரஸ்காரர் ஒவ்வொருவரும், அல்லது இந்தியராயுள்ளோர் ஒவ்வொருவரும், கதரின் வளர்ச்சிக்காக என்ன செய்ய முடியும் என்பதையே இங்கு காட்ட விரும்புகிறேன். தேசத்திலுள்ளோர் அனைவருக்கும், செல்வநிலை பொறுத்தவரையில் சுதந்திரமும் சமத்துவமும் பிறப்பதையே கதர் குறிப்பிடுகிறது. மாவின் பக்குவத்தைப் பணியாரத்தில் பார்க்கலாமல்லவா ? இதுபற்றி ஒவ்வொருவரும் தாமே முயன்று பார்த்தால் தான் சொல்வதன் உண்மை புலப்படும்.

கதர் என்று சொல்லும்போது, அதனுடன் தொடர்புள்ள மற்றத் தத்துவங்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். எல்லாத் துறையிலும் சுதேசிப் பொருளையே உபயோகிப்பது என்ற மனம், வாழ்க்கைக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் இந்தியாவிலேயே தயார்செய்வது என்ற உறுதி, அதுவும் நாட்டுப்புற மக்களின் திறமையைக் கொண்டு அவர்களையே உற்பத்தி செய்யும்படி பண்ணும் எண்ணம் ஆகிய இவையெல்லாம் கதர் என்ற தத்துவத்தோடு சேர்ந்தவை. இதன் பொருள், தற்போதுள்ள முறைகளை யெல்லாம் தலைகீழாக மாற்றி யமைப்பதாகும். இன்று, இந்தியாவிலும் இங்கிலாந்திலுமுள்ள ஐந்தாறு நகரங்கள் தங்கள் ஆலைத் தொழில் மூலமாக எழு லக்ஷம் இந்தியக் கிராமங்களின் செல்வத்தைச் சுரண்டிப் பிழைக்கின்றன ; இதனுல் அந்தக் கிராமங்களும் நசித்துப் போகின்றன. இதற்குப் பதிலாக மேற்குறிப்பிட்டபடி மாற்றியமைத்தால், இந்த எழு லக்ஷம் கிராமங்களும் பெரும்பான்மையும் தங்கள் வாழ்க்கைக்கு வேண்டியவற்றைத்

தாங்களே உற்பத்தி செய்துகொள்வனவாய் இருக்கும். இது மட்டுமல்லாமல், இந்தக் கிராமங்கள், இந்தியாவிலுள்ள நகரங் களுக்கு வேண்டிய சேவை செய்வதோடு, எந்த அளவுக்குச் சேவை செய்வதனால் கிராமம் வெளியுலகம் ஆகிய இருபக்கத் துக்கும் பயனுண்டோ அந்த அளவுக்கு, வெளியுலகத்துக்கும் சேவை செய்துவரும்.

இதற்கு, பலருடைய மனப்போக்கில் புரட்சிகரமான மாறுதல் ஏற்படவேண்டும். அஹிம்சை முறையானது பல வகைகளில் மிகவும் எளியதாய் இருப்பினும், வேறு பல வகைகளில் மிகவும் கடினமானதே. அஹிம்சை முறையானது இந்திய ராய்ப் பிறந்த ஒவ்வொருவருடைய வாழ்க்கையையும் அடிப் படையில் மாற்றி, இதுவரையில் அவரிடத்திலேயே ஒரு சக்தி மறைந்திருந்ததை அவருக்குப் புலப்படுத்தி, அச்சக்தி இருப் பதனால் அவரிடம் ஓர் ஒளி விளங்கச்செய்து, இந்திய மக்க ளினமாகிய பெருங்கடலிலுள்ள ஒவ்வொரு நீர்த்துளியோடும் தாம் ஒன்றியவர் என்று அவருக்கு உணர்த்தி, இந்த உணர்வில் அவர் பெருமிதமும் அடையச்செய்கிறது. இந்த அஹிம்சையானது நெடுங்காலமாக நாம் நினைத்துவந்த சோம்பல் அல்லது செய லின்மை அன்று.

இதுவரையில் மனிதசமூகம் அறிந்த சக்திகள் அனைத்திலும் இதுவே மிகுந்த வலிமை பொருந்தியது. மனித சமூகத்தின் வாழ்வே இச்சக்தியைப் பொறுத்ததாகும். இந்தச் சக்தியையே காங்கிரசுக்குக் காட்டவும் அதன்மூலமாக உலகத்துக்குக் காட்ட வும் நான் முயன்று வந்திருக்கிறேன். கதர் என்பது, என்னைப் பொறுத்தவரையில், இந்திய மக்களினத்தின் ஒற்றுமைக்கும் அதன் செல்வநிலைபற்றிய சுதந்திரத்துக்கும் சமத்துவத்துக்கும் அடையாளமாகும்; ஆகவே முடிவாக, ஜவஹர்லால் நேரு கவிதை நிரம்பிய சொற்களால் சொல்லியபடி, கதர்தான் ‘இந்திய சுதந் திரத்தின் விருது’ ஆகும்.

மேலும், கதர் அணியும் மனப்பான்மை யென்பது, வாழ்க் கைக்கு வேண்டிய பொருள்கள் அனைத்தையும் மத்தியமான ஒரே இடத்தில் உற்பத்திசெய்து ஒரே இடத்தின்மூலம் வினியோ கம் செய்வதை ஒழிப்பது என்றே பொருள்படும். ஆகவே, ஒவ் வொரு கிராமமும் தனக்குவேண்டியவை அனைத்தையும் தானே உற்பத்திசெய்து கொள்வதோடு, நகரத்துக்குத் தேவையான

வற்றைத் தருவதற்காகச் சிறிதளவு அதிகப்படியாகவும் உற்பத்தி செய்யவேண்டும்; இதுவே கதர் சம்பந்தமாய் நாம் இதுவரையில் வகுத்துள்ள திட்டமாகும்.

ஆலைத்தொழில்கள் யாவும், சமுதாயத்துக்கே சொந்தமானவையாக்கி ஒரே இடத்தில் நடத்தப்பெறும். எனினும், இத்தொழிலானது தேசத்தின் விரிந்த தொழில்களில் மிகச் சிறு பகுதியே யாகும்; பெரும்பகுதி கிராமங்களில்தான் நடைபெறும்.

கதர் என்பதனோடு சேர்ந்துள்ள பிற அம்சங்கள் என்னவென்று விளக்கிய பிறகு, கதர் வளர்ச்சிக்காகக் காங்கிரஸ்காரர் என்ன செய்யவேண்டும், என்ன செய்யமுடியும் என்பதை நான் குறிப்பிடவேண்டும். கதர் உற்பத்தி என்பதில், பருத்தி பயிரிடல், செடியிலிருந்து பருத்தி எடுத்தல், கொட்டை நீக்குதல், பஞ்சு சுத்தம் செய்தல், பஞ்சுவெட்டுதல், பட்டைபோடுதல், நூல் நூற்றல், நூலுக்குக் கஞ்சிபோடுதல், சாயம்போடுதல், பாவு ஆற்றுதல், தாறு சுற்றுதல், நெசவுநெய்தல், துணிவெளுத்தல் ஆகிய எல்லா வேலைமுறைகளும் அடங்கும். இவற்றில், சாயம் போடுதல் நீங்கலாக மற்றவை யாவும் முக்கியமான பிரிவுகள். இவற்றுள் ஒவ்வொன்றையும் கிராமந்தோறும் மிக்க திறமையோடும் செய்யலாம்; அகில இந்திய சர்க்கா சங்கம் வேலைசெய்து வரும் கிராமங்கள் இந்தியாவில் எங்கெங்கு உள்ளனவோ அங்கெல்லாம் இவை திறமையாக நடைபெற்றுவருகின்றன.

பின்வரும் புள்ளிவிவரங்கள் இது சம்பந்தமாக அறியத்தக்கவை. 1940 ஆம் வருஷத்தில் நூல்நூற்றல், நெய்தல் முதலிய தொழில்கள் 13,451 கிராமங்களில் நடைபெற்றன. தொழிலில் ஈடுபட்ட கிராமவாசிகளின் தொகை 275, 146; இவர்களில் ஹரிஜனங்கள் 19,645 பேர்; முஸ்லிம்கள் 57,378 பேர். நூற்றவர்களில் பெரும்பாலோர் பெண்கள். மொத்தம் கொடுத்த கூலி ரூ. 34,85,609 (சுமார் 35 லக்ஷ ரூபா).

இவ்வளவு இருப்பினும், நடந்திருக்கும் வேலையானது, கதர்த் திட்டத்தைக் காங்கிரஸ்காரர் உண்மையாகவே ஏற்று நடத்தினால் ஆகக்கூடிய வேலையில் நூற்றில் ஒரு பாகந்தான். கிராமத்தில் முன்னம் இருந்துவந்த இந்த முக்கியமான கிராமக் கைத்தொழிலும் இதையொட்டிய பிற கைத்தொழில்களும் வேண்டுமென்றே அழிக்கப்பட்டகாலம் முதல், கிராமங்களிலிருந்த புத்திக்

சுமையும் உற்சாகமும் வெளியேறிவிட்டன ; கிராமங்கள் ஒளி யிழந்து சோம்பலுக்கு இடமாகிவிட்டன. கிராமத்து மக்களுக்கும், பராமரிப்பில்லாமல் அவர்கள் வைத்திருக்கும் ஆடுமாடுகளுக்கும் இடையே எவ்வித வித்தியாசமும் காணமுடியவில்லை.

காங்கிரஸ்காரர், கதர் சம்பந்தமாக காங்கிரஸ் இடும் கட்டளை யின்படி உண்மையாக நடப்பார்களானுல் கதர்த் திட்டத்தை நடத் துவதில் அவர்கள் என்ன செய்யவேண்டுமென்பது பற்றி அகில இந்திய சர்க்கா சங்கம் அவ்வப்போது இடும் வேலைகளை நிறைவேற்றவேண்டும். பொதுப்படையான சில விதிகளை மட்டும் இங்கே கூறவேண்டும் :—

1. சிறிது நிலமுள்ள எல்லாக் குடும்பங்களும் குடும்பத்தின் உபயோகத்துக்கு வேண்டிய அளவாவது பருத்தி பயிரிடவேண் டும். பருத்தி பயிரிடுதல் மிகவும் எளிது. பீகார் மாகாணத்தில் விவசாயிகள் தங்கள் சாகுபடி நிலத்தில் இருபதில் மூன்று பங்கு அவுரிச்செடி (சாயம்) பயிரிடவேண்டுமென்று முன்னமே சர்க்கார் கட்டாயப்படுத்தினுர்கள்; இது அயல் நாட்டு அவுரி முதலாளிகளு டைய நன்மையை உத்தேசித்து நடந்த காரியம். நம்முடைய நிலத்தில் ஒருபகுதியில் நம்மவருக்காக நாமாகவே என் பருத்தி பயிரிடக்கூடாது? கதர் சம்பந்தமான வேலை தொடங்குமிடத்தி லிருந்தே, வேலையெல்லாம் நகரத்தை விட்டுக்கிராமத்தை நோக்கி வந்துவிட்டதென்பதை வாசகர் கவனிக்கவேண்டும். இன்று பருத்தி விளைவெல்லாம் இந்தியாவின் பல பாகங்களிலுமுள்ள ஆலைகளை நோக்கிப் போவதால், இதுவும் குவியல் முறையில் நடக்கும் தொழிலாகிவிட்டது. இந்த யுத்தத்துக்குமுன், பருத்தி முக்கியமாக இங்கிலாந்துக்கும் ஜப்பானுக்குமே போயிற்று. முன்பும் இன்றும், பருத்தி பணம்தரும் விளைபொருளாகும் ; ஆகவே, மார்க்கெட்டு விலைகளில் ஏற்படும் ஏற்றத் தாழ்வு இதைப் பாதிக்கும். அதாவது, பருத்தி விற்பனை நிச்சயமில்லாதது, ஒரு சூதாட்டம் போன்றது. கதர்த்திட்டத்தின்படி, பருத்திச் சாகுபடி இந்தக் கஷ்டத்தை விட்டு விலகுகிறது. பயிரிடுபவர் தமக்கு வேண்டியதை மட்டுமே பயிரிடுகிருர். அவர் அறிய வேண்டியதெல்லாம், தம்முடைய தேவைக்கு வேண்டியதைப் பயிரிடுவதுதான் தம்முடைய முதல் வேலை என்பதாகும். இப்படி அவர் பயிரிடும்போது, விலைகுறைந்துவிட்டது என்ற காரணத்தால் அதிக நஷ்டம் உண்டாகச் சந்தர்ப்பமில்லை.

2. நூற்பவர் ஒவ்வொருவரும், தமக்குச் சொந்தமான பருத்தி யில்லாவிட்டால், கொட்டை நீக்குவதற்கு வேண்டிய பருத்தியை விலைக்கு வாங்கிக்கொள்வார். கொட்டை நீக்கும் வேலையைக் கைம்மனை கூட இல்லாமல் அவர் தாமாகவே எளிதில் செய்ய லாம். ஒரு பலகையும் உருண்ட ஓர் இரும்புக்கம்பியும் கொண்டு அவர் தம்முடைய பருத்தியை அரைத்துக்கொள்ளலாம். இது வும் செய்வது சாத்தியமில்லை யென்று தோன்றினல், கையால் அரைத்த பஞ்சு வாங்கி வெட்டிப் பட்டைபோட்டுக் கொள்ளலாம். தமக்கு வேண்டிய பஞ்சை, ஒரு சிறுவில்லை உபயோகித்து அதிகச் சிரமமில்லாமலே வெட்டிக்கொள்ளலாம். எந்த அளவுக்கு உழைப்பானது ஒரே இடத்தில் போய்க் குவியாமல் இருக்கிறதோ, அந்த அளவுக்குக் கருவிகள் எளியனவாகவும் மலிவாகவும் இருக்கும். பட்டை போட்டவுடன் நூற்கும்வேலை தொடங்குகிறது. இதற்கு, தனுஷ்தக்ளி (வில்ராட்டை) மிகவும் சிறந்ததென்பது என் அபிப்பிராயம். இதையே நான் அடிக்கடி உபயோகித்து வருகிறேன். பெட்டிராட்டையில் நான் என்ன வேகத்தில் நூற் கிறேனே, ஏறக்குறைய அதே வேகம் தனுஷ் தக்ளியிலும் வரு கிறது. நூற்ற நூல் அதிக மெல்லியதாயும் பலமுள்ளதாயும் சமமானதாயும் இருக்கிறது: எல்லோருக்கும் இப்படி நூல் வரா மலிருக்கலாம். தனுஷ்தக்ளியை நான் ஏன் விசேஷமாய்ச் சிபாரிசு செய்கிறேனென்ருல், இதைச் செய்வது சுலபம்; பெட்டி ராட்டையைவிட இது மலிவானது; அதைப் போல அடிக்கடி பழுது பார்க்கவேண்டியிராது. பெட்டிராட்டையை உபயோகிப்பவருக்கு, இரண்டு மாலைக்கயிறுகளையும் செய்யத் தெரியவேண்டும். அவை நழுவி விட்டால் அள்வாக மாட்டத் தெரியவேண்டும். சக்கரங்கள் சுற்றவில்லை யென்ருல், அவற்றைச் சரிப்படுத்தத் தெரிய வேண் டும். இவ்வளவும் தெரியாவிட்டால், ராட்டை சுழலாமல் தூங்க வேண்டியதுதான். மேலும், மக்களெல்லோரும் இப்போதே நூற்கத் தொடங்க நேரலாம். அப்படித் தொடங்கினல், அவர் களுக்குக் கிடைக்கக்கூடிய கருவி தனுஷ்தக்ளிதான். ஏனெ னில், இதுவே எளிதாகச் செய்யவும் உபயோகிக்கவும் தக்க கருவி. சாதாரணத் தக்ளியை விடவே இதைச் சுலபத்தில் செய்ய லாம். இதை அவரவர் தாமே செய்துகொள்வது தான் எளிதாகவும் மலிவாகவும் செய்துகொள்வதற்கான சிறந்த வழி, உண்மையில் சாமானியமான கருவிகளைச் செய்யவும் உபயோகிக்க

1096



வும் ஒவ்வொருவரும் அறிந்திருப்பது மிக்வும் நல்லது. நமது நாட்டிலுள்ள மக்கள் எல்லோரும், பருத்தி பயிரிடுவதிலிருந்து நூல் நூற்பது வரையிலுள்ள பல வேலைகளையும் ஒருமித்துச் செய்து வருகிறார்களென்று வைத்துக்கொள்வோம். இது எவ்வளவு சிறந்த பயிற்சியாகும், என்ன ஒற்றுமைக்கு இது வித்தாகும் என்பதை எண்ணிப் பாருங்கள். எல்லோரும் உழைப்பது என்ற மாத்திரத்தில், செல்வனுக்கும் வறியவனுக்கும் இடையிலுள்ள பேதம் ஓரளவுக்கு நீங்கி, எல்லோரும் சமம் என்றாகிறது.

இவ்விதம் நூற்ற நூலை மூன்று விதமாக உபயோகிக்கலாம். ஏழைமக்களுக்குப் பயன்படுத்தும்படி இதை அகில பாரத சர்க்கா சங்கத்துக்கு அளித்துவிடலாம்; அல்லது சொந்த உபயோகத்துக்காகத் துணி நெய்விக்கலாம்; அல்லது அதைக் கொடுத்து எவ்வளவு கதர் வாங்கமுடியுமோ அவ்வளவு கதர் வாங்கலாம். நூல் எவ்வளவு சிறந்ததாயும் சன்னமாயும் இருக்கிறதோ அவ்வளவுக்கு அது மதிப்புயர்ந்தது என்பது தெளிவு. காங்கிரஸ்காரர் இந்த வேலையில் மனம் வைத்தால், கருவிகளை நன்றாய் அபிவிருத்தி செய்து புதிய கருவிகளையும் முறைகளையும் கண்டுபிடிக்க முடியும். நம் நாட்டில் தொழிலுக்கும் அறிவுக்குமிடையே பெருத்த பிளவு ஏற்பட்டுவிட்டது. இதன்பயனாய்த் தொழில் வளராமல் நின்றுவிட்டது. இரண்டும் நல்ல முறையில் கலந்திருந்தால், அதுவும் இங்கே குறிப்பிட்டுள்ளபடி கலந்திருந்தால், மதிப்பிட முடியாத பெருநன்மை இதனால் விளையும்.

நூற்பதை ஒரு வேள்வியாகக் கருதி நாடு முழுவதுமே நூற்க வேண்டும் என்ற எனது திட்டத்தின்படி, சாமானிய ஆடவரும் பெண்டிரும், தினம் ஒரு மணிநேரத்துக்கு அதிகமாக நூற்க வேண்டுமென்று நான் எதிர்பார்க்கவில்லை.

## 5. கிராமக் கைத்தொழில்கள்

மற்றக் கிராமக் கைத்தொழில்களுக்கும் கதருக்கும் வித்தியாசமுண்டு. இவற்றில் மக்கள் தாங்களாக உழைப்பதற்கு அதிக இடமில்லை. ஒவ்வொரு கைத்தொழிலிலும் இத்தனை பேர்தான் வேலைசெய்ய முடியுமென்ற வரையறை இருக்கிறது. இத்தொழில்கள் கதருக்குப் பாங்கிமார்போல அமைகின்றன. கதர்

இல்லாமல் அவை இல்லை ; அவையில்லாமல் கதருக்குரிய கௌரவமுமில்லை. முக்கியமான கிராமக் கைத்தொழில்கள், கையால் நெல் அரைத்தல், கையால் மாவரைத்தல், சவுக்காரம் செய்தல், காகிதம் செய்தல், தீப்பெட்டி செய்தல், தோல்பதனிடல், எண்ணெயாட்டல் முதலிய பலவாகும்; இவை யில்லாமல் கிராம வாழ்க்கையில் பொருளாதாரநிலை பூர்த்தியாகாது. காங்கிரஸ்காரர் இவற்றில் சிரத்தை கொள்ளவேண்டும். அவர்கள் கிராமவாசிகளாயிருந்தால் அல்லது கிராமங்களிலேயே தங்கி அவர்கள் வாழ்வார்களானால், இந்தக் கைத்தொழில்களுக்குப் புத்துயிரளித்துப் புது முறையில் வளர்க்க முடியும். கிராமத்தில் செய்த பொருள்கள் கிடைக்கும்பட்சத்தில், வேறெதையும் உபயோகியாமல் அவற்றை உபயோகிப்பதுதான் கௌரவம் என்று எல்லோரும் கருதவேண்டும். இந்தப் பொருள்களுக்குத் தேவை எற்பட்டால் நமக்கு வேண்டியவை யனைத்தையும் கிராமங்களிலிருந்தே பெற்றுக்கொள்ள முடியுமென்பதில் சந்தேகமில்லை. இவ்விதம் கிராம வாழ்வில் நமது மனம் ஊன்றிவிட்டால், மேல்நாட்டைக் கண்மூடித்தனமாய்ப் பின்பற்ற எண்ணமாட்டோம் ; நவபாரதம் உருக்கொள்வதற்குப் பொருத்தமாக உண்மையான தேசிய மனப்பான்மை நம்மிடையே வளர்ந்து வரும் ; அப்போது, அதாவது நாம் கருதும் நவபாரதத்தில், வறுமையும் பட்டினியும் சோம்பலும், காண்பதற்கும் கிடைக்க மாட்டா.

## 6. துப்புரவு

அறிவுக்கும் உழைப்புக்கு மிடையே ஏற்பட்டுள்ள பிளவால், கிராமங்களின் நன்மையை நாம் அடியோடு புறக்கணித்து விட்டோம். இது பெருங்குற்றமாகும். இதனால், அழகான குக்கிராமங்கள் அமைவதற்கு பதிலாக எங்கும் சாணக்குவியல்களையே பார்க்கிறோம். அனேக கிராமங்களுக்குச் செல்லுகிற சாலை சகிக்க முடியாததாய் இருக்கிறது. போகும்போது கண்ணை மூடிக் கொண்டு மூக்கையும் பிடித்துக்கொள்கிறோம் : வழியிலுள்ள குப்பையும் அதன் துர்நாற்றமும் இவ்வளவு அதிகமாயிருக்கின்றன. காங்கிரஸ்காரரில் பெரும் பகுதியினர் கிராமவாசிகளாகவே

இருப்பார்கள். இப்படி இருக்கும் பட்சத்தில், அவர்கள் எல்லா விதத்திலும் நம் கிராமங்களைச் சுத்தத்துக்கு எடுத்துக் காட்டாக விளங்கும்படி செய்யும் சக்தியுடையவர்களாக இருக்க வேண்டும். ஆனால், அவர்கள் தங்கள் தினசரி வாழ்க்கையில் கிராமவாசிகளோடு ஐக்கியமாவது தங்கள் கடமையென்று ஒரு போதும் உணரவில்லை. தேசமெங்கும், சமூகமெங்கும் சுகாதாரம் நன்றாய் நிலவ வேண்டுமென்ற நல்லுணர்ச்சி நம்மிடையே அமையவில்லை. எப்படியாயினும் தினம் குளிக்கவேண்டுமென்று எண்ணுகிறோம்; ஆனால், குளிப்பதற்கும் கை கால் அலம்புவது முதலிய பிற வேலைகளுக்கும் நாம் உபயோகிக்கும் கிணற்றையோ குளத்தையோ வாய்க்காலையோ அசுத்தமாக்கத் தயங்குவதில்லை. இந்தக் குறைபாட்டைப் பெரும்பாவமென்றே நான் கருதுகிறேன்; நம் கிராமங்களும் எவ்வளவோ புனிதமான நம் நதிகளின் புனிதமான கரைகளும், மிகவும் இழிந்த நிலையில் இருப்பதற்கும் ஆரோக்கியமின்மையால் வரும் பல வகை நோய்களுக்கும், இந்தக் குறைபாடே காரணமாகிறது.

## 7. ஆதாரக் கல்வி

இது ஒரு புது விஷயம். இதில் காங்கிரஸ் காரியக்கமிட்டி அங்கத்தினர் மிக்க சிரத்தைகொண்டு 'ஹிந்துஸ்தானி தாலிமி சங்கம்' என்ற அகில இந்திய கல்விச்சங்கத்தை அமைக்கச் செய்தார்கள். இது ஹரிபுரா காங்கிரஸ் நடந்ததுமுதல் வேலை செய்துவருகிறது. காங்கிரஸ்காரர் அனேகர் வேலைசெய்வதற்கு இது விரிவான சந்தர்ப்பமளிக்கிறது. நாட்டுப்புறத்துச் சிறு பிள்ளைகளைச் சிறந்த கிராமவாசிகளாகக் கல்வி பயிற்றி வளர்ப்பதே இந்தக் கல்வி முறையின் நோக்கமாகும். நாட்டுப்புறத்துக்கென்றுதான் இது ஏற்பட்டிருக்கிறது. இந்த முறை வகுப்பதற்கான தூண்டுதல் கிராமவாழ்க்கையிலிருந்தே பிறந்தது. ஆழத்திலுள்ள அடிப்படையிலிருந்து சுயராஜ்யமென்ற மாளிகையைக் காங்கிரஸ்காரர் நிருமிக்க விரும்பினால், குழந்தைகளின் கல்வியை அசட்டை செய்யமுடியாது. நம் நாட்டில் இதுவரையும் நடைபெற்ற அன்னிய ஆட்சியானது குழந்தைகளுக்குக் கல்வி பயிற்றும் துறையில்தான் தொடங்கிற்று; ஒருவேளை அறியாமலே இவ்வாறு

தொடங்கி இருக்கலாம் ; ஆனல் தொடக்கம் இங்குதான் என்பது நிச்சயம். இன்று நம் நாட்டிலுள்ள ஆரம்பக்கல்வி என்பது வெறும் கேலிக்கூத்து ; இது கிராம இந்தியாவுக்கு என்ன தேவை என்பதைச் சிறிதும் கவனியாமலே ஏற்படுத்திய கல்வி முறையாகும் ; நகரங்களின் தேவையைக்கூட இது கவனிக்கவில்லை. ஆதாரக் கல்வியானது நகரங்களிலும் கிராமங்களிலுமுள்ள எல்லாக் குழந்தைகளையும், இந்தியப் பண்பாட்டில் மிகச் சிறந்தது எதுவோ, நித்தியமானது எதுவோ, அதனேடு கலந்து வளரச்செய்கிறது. இது உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே வளர்க்கிறது ; மக்களைக் கிராமவாழ்க்கையிலேயே தோயும்படி செய்கிறது. எதிர் காலத்தைப்பற்றிய அற்புதமான கனவு அவர்கள் உள்ளத்தில் அமைகிறது. சிறுவனும் சிறுமியும் பள்ளிக்கூடத்தில் வாழ்க்கை தொடங்குவது முதற்கொண்டே இந்தக் கனவை நனவாக்குவதில் தங்களுக்குரிய பங்கைச் செய்துவருகிருர்கள். காங்கிரஸ்காரர் இந்த வேலையை மேற்கொண்டால், தங்கள் ஆர்வத்தை எல்லாம் இது கவர்ந்துவிடக் காண்பார்கள். அவர்களுக்கும், எந்தக் குழந்தைகளோடு அவர்கள் பழகுகிருர்களோ அந்தக் குழந்தைகளுக்கும் இந்தக் கல்வியால் பெரு நன்மை விளையும். இதில் விருப்பமுள்ளவர்கள் சேவாகிராமத்திலுள்ள ஹிந்துஸ்தானி தாலிமி சங்கக் காரியதரிசியோடு தொடர்பு ஏற்படுத்திக்கொள்ளலாம்.

## 8. வயதுவந்தோர் கல்வி

காங்கிரஸ்காரர் இது பற்றிச் சிறிதும் கவனம் செலுத்தாமல் விட்டது பெரிதும் வருந்தத்தக்கது. கவனம் செலுத்திய இடத்திலுங்கூட, எழுத்துவாசனையற்றவர்களுக்கு எழுதப்படிக்கக் கற்றுக் கொடுப்பதே போதுமென்று எண்ணிவிட்டார்கள். இது சரியன்று. வயதுவந்தோருக்குக் கல்வி பயிற்றும் வேலையை நான் செய்து வருவேனுனல், நம்முடைய நாடு எவ்வளவு பெரியது, எவ்வளவு உன்னதமானது என்பதை உணரத்தக்க வகையில், வயது வந்தோர் உள்ளம் விரியச் செய்வதே என் முதல் வேலையாக எண்ணுவேன். கிராமவாசிக்கு, இந்தியா முழுமையும் அவருடைய கிராமத்திலேயே அடங்கியிருக்கிறது. வேறு கிராமத்

துக்கு அவர் சென்ருல், தம் சொந்தக் கிராம மொன்றுதான் தமக்குரிய இடம் என்ற பாவனையில் அவர் பேசுகிருர். ஹிந்துஸ்தானமென்பது, அவருக்கு பூகோள சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ள வெறும் பெயர்தான். கிராமங்களில் எவ்வளவு அறியாமை குடிகொண்டிருக்கிறதென்பதை நாம் சிறிதும் அறியோம். அன்னிய ஆட்சி என்னவென்ருே, அதனுல் வந்த தீமைகள் என்னவென்ருே, கிராமவாசிகளுக்குச் சிறிதும் தெரியாது. சொற்பம் அவர்களுக்குத் தெரிந்ததைக் கொண்டு, அன்னியர் என்ருலே அவர்கள் மனத்தில் பேரச்சந்தான் பிறக்கிறது. அன்னியரிடத்திலும் அன்னிய ஆட்சியிலும், நடுக்கமும் வெறுப்புமே இதன் பயனுகும். இவற்றை அகற்ற அவர்கள் சிறிதும் வழியறியவில்லை. தங்களுடைய சொந்த பலவீனத்தாலும், அன்னிய ஆட்சியை ஒழிப்பதற்குத் தங்களிடம் எவ்வளவு பலமிருக்கிறதென்பதைத் தாங்கள் அறியாமையாலுமே அன்னியர் இங்கு வந்து ஆள்கிருர்கள் என்பதை அவர்கள் உணரவில்லை. ஆகவே, வயதுவந்தோருக்கு நான் கல்வி கற்பிப்பதென்ருல், முதலாவதாக வாய்மொழி மூலமாய் அவர்களுக்கு அரசியல் விஷயங்களைத்தான் கற்பிப்பேன். இதைத் தெளிவாகத் திட்டம் போட்டுக் கற்பிக்கலாம்; எனவே, எவ்வித அச்சமும் வேண்டியதில்லை. காலம் பெரிதும் முன்னேறிவிட்டது; இவ்விதக் கல்வியில் அதிகாரிகள் தலையிடமுடியும் என்று நான் எண்ணவில்லை. தலையிட்டால், அடிப்படையான இந்த உரிமைக்காக நிச்சயம் போராடவேண்டும்; இப்படிப்பட்ட உரிமையில்லாமல் சுயராஜ்யம் இல்லை. நான் சொல்லியவையனைத்திலும், வெளிப்படையாக வேலைசெய்வதையே கருத்தில் கொண்டிருக்கிறேன் என்பது தெளிவு. அஹிம்சையானது அச்சத்தைக் கண்டு அருவருக்கும்; எனவே, ரகசியத்துக்கு அங்கு இடமில்லை. வாய்மொழியாகக் கற்பிப்பதனேடுகூடவே எழுத்துப்படிப்பும் சொல்லித்தரலாம். இந்தத் திட்டத்தில் இது சிறப்பான ஓர் அம்சமாகும். கல்விப் பயிற்சிக்குக் கலாசாலைகளில் இன்று செலவாகிற பல வருஷக் காலஅளவை எப்படிக் குறைப்பதென்பதுபற்றி அனேக முறைகளை இன்று அனுஷ்டித்துப் பார்க்கிருர்கள். நான் இங்குக் கூறிய அபிப்பிராயத்தை உருவாக்கி ஊழியர்களுக்கு வழி காட்டும் பொருட்டு, கல்வி நிபுணர்கள் அடங்கிய ஒரு கழகத்தை காங்கிரஸ் காரியக்கமிட்டி நியமிக்கலாம்; இக்கழகம் நிரந்தர

மாகவோ சிறிது காலத்துக்கோ வேலைசெய்யலாம். இங்கு நான் கூறியுள்ளவை, கல்வி சம்பந்தமாக என்ன செய்யலாமென்ற வழியைச் சுட்டிக்காட்டுகின்றன. சாதாரணக் காங்கிரஸ்காரர் என்ன செய்யவேண்டும் என்பதுபற்றி இதில் ஒன்றும் சொல்லவில்லை. தவிர, இதற்கென்றே சிறப்பான திறமை பெற்றவர்கள் இவ்வேலை செய்யலாமேயன்றி, காங்கிரஸ்காரர் எல்லோருமே இவ்வேலை செய்தல் இயலாது. எனினும், உபாத்தியாயர்களாயுள்ள காங்கிரஸ்காரர்கள், நான் கூறியுள்ள கருத்துக்களுக்குப் பொருத்தமாகப் பயிற்சித் திட்டமொன்று எளிதில் வகுத்துக்கொள்ளலாம்.

## 9. பெண்ணுரிமை

சத்தியாக்கிரக இயக்கமானது இருளில் மூழ்கிக்கிடந்த நம் சகோதரிகளை வெளிவரச்செய்திருக்கிறது ; இவ்வளவு சுருங்கிய காலத்துக்குள் வேறெந்த இயக்கமும் இவ்விதம் செய்திருக்க முடியாது. இருந்தபோதிலும், இன்றைய சுயராஜ்யப் போராட்டத்தில் ஆண்களோடு பெண்களும் சம அங்கம் வகிப்பதற்கான வற்றைச் செய்யவேண்டுமென்ற உணர்ச்சி காங்கிரஸ்காரருக்கு இன்னும் ஏற்படவில்லை. இதனுல்தான், இந்த நிர்மாணத் திட்டத்தில் பெண்ணுரிமைபற்றிய சேவையையும் சேர்த்திருக்கிறேன். சேவை என்ற துறையில் பெண்ணும் ஆடவனுடு உண்மையான தோழமை பூண்டு ஒழுகவேண்டுமென்பதை அவர்கள் உணரவில்லை. பழக்கவழக்கங்களும் சட்டங்களும் பெண்ணை அடக்கிவைத்தே வந்திருக்கின்றன ; பழக்கவழக்கங்களும் சட்டங்களும் ஆடவன் வகுத்தனவேயன்றி, பெண் வகுத்தனவல்ல. அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கை முறையில், ஆடவன் தன் வாழ்க்கையை நிர்ணயிப்பதற்கு என்ன உரிமையிருக்கிறதோ அதே உரிமை பெண்ணுக்கும் அவள் வாழ்க்கையை நிர்ணயிப்பதில் இருக்கும். ஆயினும், அஹிம்சை முறையில் அமைந்த மக்கட் சமூகத்தில் உரிமையென்பது தனியாக இல்லை ; முன்னமே கடமையை நிறைவேற்றினுல்தான் பின்னர் உரிமை பிறக்கிறது. பரஸ்பரம் இருவருடைய கூட்டுறவாலும், ஒருவர் மற்றவருடைய அபிப்பி

ராயத்தைக் கலந்துகொள்வதாலுமே சமூகத்தின் பழக்கவழக்கங்கள் நிர்ணயமாகின்றன என்பது இதனால் ஏற்படுகிறது. இவை அன்னியர் கொண்டுவந்து திணிப்பவையல்ல. பெண்களோடு பழகுவதிலும் வாழ்க்கை நடத்துவதிலும், ஆடவர் இந்த உண்மையைப் பூரணமாய் உணரவில்லை. பெண்களைத் தங்கள் தோழியராகவும் சக ஊழியராகவும் கருதுவதை விட்டு, அவர்களுக்குத் தாங்கள் எஜமானர்களென்றே ஆடவர் கருதிவந்திருக்கிறார்கள். இந்த வழக்கத்தை மாற்றிப் பெண்களின் நிலையை உயர்த்தும் பணி இன்று காங்கிரஸ்காரருக்குக் கிடைத்திருக்கிறது. பழங்காலத்தில் அடிமைகள் இருந்த நிலையில் இன்று பெண்கள் இருக்கிறார்கள்; அடிமைகளுக்குத் தாங்கள் சுதந்திரமாய் இருக்கமுடியுமென்பதோ சுதந்திரமாய்த்தான் இருக்கவேண்டுமென்பதோ தெரியாது; இந்த நிலையில், சுதந்திரம் வந்தவுடனே என்னது செய்வதெனறே அந்த அடிமைகளுக்குத் தெரியவில்லையாம்! ஆடவர்களுக்குத் தாங்கள் அடிமைகளே என்று கருதும்படித்தான் பெண்களை நாம் பயிற்றிவந்திருக்கிறோம். பெண்கள் தங்கள் பூரணமான தகுதி என்னவென்பதை உணர்ந்து ஆடவரோடு சரிசமமாகக் கலந்து வேலைசெய்ய வல்லவர்களாகும்படி செய்வது காங்கிரஸ்காரர் செய்யவேண்டிய பெரும் பணியாகும்.

மனவுறுதிமட்டும் இருக்குமானால், இவ்விதப் புரட்சி உண்டு பண்ணுவது பெரிதன்று. காங்கிரஸ்காரர் தங்கள் தங்கள் குடும்பங்களிலேயே இந்தச் சீர்திருத்தத்தைத் தொடங்கலாம். ஆடவர், தங்கள் மனைவியரை வெறும் பதுமைகளாக வைத்துக் கொஞ்சிக் குலாவினால் போதாது. பொதுவான சேவையில் உடன் உழைக்கிற தோழரைப்போல கௌரவமாக அவர்களை நடத்தவேண்டும். இதன்பொருட்டு, பள்ளிக்கூடம் சென்று அதிகம் படித்திராத பெண்களுக்கு அவர்களுடைய கணவன்மார் முடிந்த அளவு கல்வி போதிக்கவேண்டும். அன்னையராகவும் புதல்வியராகவும் உள்ள பெண்களுக்கும் இதே அபிப்பிராயம் பொருந்தும்.

இந்திய நாட்டுப் பெண்கள் இன்றுள்ள பரிதாபகரமான நிலைமைக் குறித்து நான் கூறியதவ்வளவும் ஒருதலைப்பட்சமாகச் சொன்னதென்று சிலர் கருதலாம். நாட்டுப்புறங்களில் பொதுவாகப் பெண்கள் ஆண்களுக்குச் சமமான திறமை பெற்றிருக்கிறார்கள்; சில விஷயங்களில் ஆண்களே அவர்களுக்குக்

கட்டுப்பட்டு நடக்கிறார்கள் ; இது எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால், இவர்கள் தொடர்பைப் புறத்தே இருந்து பட்சபாதமில்லாமல் பார்க்கும் அன்னியருக்கு, சட்டபூர்வமாகவும் சம்பிரதாயபூர்வமாகவும் இந்நாட்டில் பெண்களுக்குள்ள ஸ்தானம் மிகவும் மோசமானதென்றும், இதை அடியோடு திருத்த வேண்டுமென்றுமே தோற்றும்.

## 10. உடல்நலம்

துப்புரவு வேலையைப்பற்றி முன்னமே சொல்லியாயிற்று. அப்படியிருக்க, உடல் ஆரோக்கியம் சுகாதாரம் முதலியவற்றைப்பற்றிய பயிற்சியை ஏன் தனியே குறிப்பிடவேண்டுமென்று கேட்கலாம். துப்புரவுவேலையோடு இதையும் சேர்த்திருக்கலாம். இருந்தாலும் இந்த அம்சங்களைப் பிரித்துவைக்கவே நான் விரும்புகிறேன். வெறும் துப்புரவுவேலையைச் சொல்லிவிட்டால் மட்டும், ஆரோக்கியமும் சுகாதாரமும் அதனுள் அடங்கமாட்டா. ஆரோக்கியத்தைப் பாதுகாக்கும் கலையும், சுகாதார அறிவும், தனியே நன்றாகப் பயின்று அனுபவத்தில் கொண்டுவரவேண்டிய விஷயங்கள். செம்மையாக அமைந்த மக்கட்சமூகத்தில் நாட்டுமக்கள் ஆரோக்கிய விதிகள் சுகாதார விதிகள் என்னவென்று அறிந்து அவற்றின்படி நன்றாய் ஒழுகுவார்கள். இந்த விதிகளை அறியாமையாலும், அறிந்து அவற்றின்படி நடக்காமையாலுமே, மக்களினத்தை இன்று பீடித்துவருகிற நோய்களெல்லாம் உண்டாயிருக்கின்றன ; இதில் சிறிதும் சந்தேகமில்லை. நம் நாட்டில் மரண விகிதம் மிகவும் அதிகமாய் இருக்கிறது. இதற்கு நம்மை அரித்துத் தின்னும் கொடிய வறுமை ஒரு காரணம் ; எனினும், ஆரோக்கியம் சுகாதாரம் பற்றிய கிரமமான அறிவு நம் மக்களுக்கு ஏற்பட்டிருக்குமானால், இந்த மரண விகிதத்தை எவ்வளவோ குறைக்கமுடியும்.

உள்ளம் நலமாயிருந்தால் உடலும் நலமாயிருக்கு மென்பது மனிதகுலத்துக்குரிய முதல் விதி. உடல் நலமாயிருக்கும்போது உள்ளமும் நலமாயிருப்பதை நாம் கண்கூடாகக்

காண்கிறோம். உள்ளத்துக்கும் உடலுக்கும் தவிர்க்க முடியாத தொடர்பு ஒன்றிருக்கிறது. செம்மையான உள்ளம்மட்டும் நமக்கு இருக்குமானால், எல்லா வித ஹிம்சையும் நாம் விட்டு விடுவோம்; ஆரோக்கிய விதிகளை இயற்கையாகவே அனுசரித்து வந்து சிறிது முயற்சியுமில்லாமலே ஆரோக்கியமான உடலும் பெற்றிருப்போம். ஆகவே, நிர்மாணத் திட்டத்திலுள்ள இந்த அம்சத்தை எந்தக் காங்கிரஸ்காரரும் சிறிதுகூட அசட்டை செய்யலாகாதென்று நான் கருதுகிறேன். ஆரோக்கியத்துக்கும் சுகாதாரத்துக்கும் அடிப்படையாயுள்ள விதிகள் மிகவும் எளியவை; சுலபமாய் இவற்றை அறியலாம். இவற்றின் படி ஒழுகுவதுதான் கஷ்டம். சில விதிகளைக் கீழே காண்க :—

1. சிந்தையைத் தூய்மை செய்க. மாசுபடிந்த பயனற்ற சிந்தனையை அகற்றுக.

2. இரவும் பகலும் சுத்தமான காற்றையே உட்கொள்க.

3. உடல் உழைப்பும் மூளையின் வேலையும் ஒத்திருக்கும்படி செய்க.

4 நிமிர்ந்து நிற்க. நிமிர்ந்து உட்காருக. செய்கிற ஒவ்வொரு செயலிலும் சுத்தமாகவும் நப்புரவாகவும் இருக்க. இச்செயல்கள் யாவும் உள்ளத்தின் சீலத்துக்கு உரிய வெளிப்பாடாக அமைய வேண்டும்.

5. மக்களுக்குச் சேவை செய்வதற்கான வாழ்க்கைக்காகவே உணவு கொள்க. தான் போகங்களை அனுபவிப்பதற்கென்று எவரும் வாழ்தலாகாது. ஆதலால் உடலும் உள்ளமும் செம்மையாக இருப்பதற்கு வேண்டிய அளவுமட்டுமே உணவு கொண்டால் போதுமானது. உணவு எத்தன்மையோ மனிதனும் அத்தன்மையாகிறான்.

6. குடிக்கும் நீரும் உண்ணும் உணவும் உட்கொள்ளும் காற்றும் சுத்தமாயிருத்தல் வேண்டும். தாம் மட்டும் சுத்தமாயிருத்தல் போதாது. தமக்கு இந்த மூன்று வகையான புறத்தூய்மை எவ்வளவு அவசியமோ, அவ்வளவு தூய்மையாகத் தம்மைச் சுற்றியுள்ளவை யாவும் இருக்கும்படி செய்தல் வேண்டும்.

## 11. தாய்மொழி

நம்முடைய தாய்மொழியை விடச் சிறப்புடையதாக ஆங்கில மொழியைக் கருதிவந்திருக்கிறோம். இதன் பயனாய், கல்வி கற்று அரசியல் உணர்ச்சி படைத்த மக்களுக்கும் பாமர மக்களுக்குமிடையே பெருத்த பிளவு ஏற்பட்டிருக்கிறது. இந்திய நாட்டுமொழிகள் வளங்குன்றிவிட்டன. தனித்த சிந்தனைகளைத் தாய்மொழியில் வெளியிட நாம் வீணே மூன்று சங்கடப்படுகிறோம். அறிவியல் கலைகள்பற்றிய ஆங்கிலச் சொற்களுக்கு நேரான சொற்கள் நம் மொழிகளில் அமையவில்லை. இது பெருங் கேட்டை விளைவித்திருக்கிறது. தற்கால அறிவியல் நுட்பங்கள் எவையும் பாமர மக்களுக்குத் தெரிய வழியில்லை. இந்திய நாட்டுப் பழஞ் சிறப்புடைய மொழிகளை இவ்விதம் புறக்கணித்ததனால் இந்தியாவுக்கு எவ்வளவு கேடு செய்திருக்கிறோமென்பதை, இந்த காலத்தில் நாமும் வாழ்வதால், நாம் இப்போது சரியாக அளவிடமுடியாது. இடையிலே சிறிது காலம் சென்றால்தான் இக்கேடு எவ்வளவு பெரியதென்று சொல்ல முடியும். இந்தக் கேட்டை அகற்றினாலொழிய, பாமர மக்களின் உள்ளம் வளர வகையின்றிச் சிறைப்பட்டே இருக்க நேருமென்பதை எளிதில் உணரலாம். சுயராஜ்யத்தை நிர்மாணம் செய்வதில் பாமர மக்கள் உருவான எந்தப் பங்கும் கொள்ளமுடியாது. சுதந்திர இயக்கத்துக்கு ஒவ்வொரு மனிதரும் தம்மாலான அளவு உதவிசெய்து அதில் பங்குகொள்ளவேண்டும். அஹிம்சையைக் கடைப்பிடித்துச் சுயராஜ்யம் அடைவது என்பதன் கருத்து இதுவேயாகும். சுயராஜ்யத்தை நோக்கி நாம் எடுத்துவைக்கும் ஒவ்வோர் அடியையும், அதன் பூரணமான பொருளையும், பாமர மக்கள் தெளிவாக உணர்ந்தாலன்றி, சுதந்திர இயக்கத்தில் அவர்கள் பூர்த்தியாய்க் கலந்துகொள்ளமுடியாது. நமது முயற்சியையெல்லாம் தாய்மொழியில் விளக்கிச் சொன்னாலொழிய இது சாத்தியமில்லை.

## 12. நாட்டுப் பொதுமொழி

இனி, அகில-இந்திய விவகாரங்கள் இருக்கின்றன. இந்திய மொழிகளிலிருந்து, மக்களில் பெரும்பான்மையோர் தெரிந்து புரிந்துக்கொள்ளக்கூடியதும் மற்றவர்கள் எளிதாகக் கற்றுக் கொள்ளக்கூடியதுமான ஒரு பொதுமொழி வேண்டும். இந்த

மொழி ஹிந்துஸ்தானி என்பதில் விவாதத்துக்கு இடமில்லை. வட இந்தியாவிலுள்ள ஹிந்துக்களும் முஸ்லிம்களும் இந்த மொழியே பேசுகிறார்கள், புரிந்துகொள்ளுகிறார்கள். உருது லிபியில் எழுதும்போது இதையே உருது என்கிறார்கள். காங்கிரஸ் மகாசபையானது 1925 ஆம் வருஷம் கான்பூரில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் நிறைவேற்றிய தீர்மானம் பிரசித்தி பெற்றது. அத் தீர்மானத்தில் இந்த அகில-இந்திய மொழியை 'ஹிந்துஸ்தானி' என்று குறிப்பிட்டிருக்கிறது. அதுமுதல் ஹிந்துஸ்தானியே கொள்கையளவிலேனும் நாட்டுப் பொதுமொழியாக இருந்திருக்கிறது. கொள்கையளவில் என்று நான் சொல்வதற்குக் காரணம், காங்கிரஸ்காரர் அனைவரும் எந்த அளவில் இதை உபயோகத்துக்குக் கொண்டுவரவேண்டுமோ அந்த அளவுக்குக் கொண்டுவரவில்லை. பாமர மக்களுக்கு அரசியலறிவு ஊட்டுவதற்குத் தாய்மொழிதான் உதவக்கூடியது. இந்தியா முழுமைக்கும், அரசியல் உணர்ச்சிபெற்ற மக்கள் அனைவரும் பேசக்கூடிய பொதுமொழியொன்று இருத்தல் வேண்டும்; அகில-இந்தியக் காங்கிரஸ் கூட்டங்களில் பலவேறு மாகாணங்களிலிருந்துவரும் காங்கிரஸ்காரர் இந்த மொழியை எளிதில் புரிந்துகொள்ளத் தக்கதாய் இருத்தல் வேண்டும். இந்த இரண்டைப்பற்றியும், அதாவது தாய்மொழிகளையும் நாட்டுப் பொதுமொழியையும் ஏற்றுக்கொண்டு வளர்ப்பதற்கு, 1920 ஆம் வருஷத்தில் ஒரு முயற்சி ஆரம்பமாயிற்று.

மேற்கூறிய தீர்மானத்தை எல்லாக் காங்கிரஸ்காரரும் நிறைவேற்றவில்லை என்பதை வருத்தத்தோடு நான் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது இதனால் காங்கிரஸ்காரர் ஆங்கிலத்தில் பேசுகிற வெட்ககரமான காட்சியையும், தங்களுக்காக வேண்டி மற்றவர்களையும் ஆங்கிலத்தில் பேசச் செய்யும் காட்சியையும் பார்க்கிறோம். ஆங்கில மொழியின்மீது நமக்குள்ள மோகம் இன்னும் தணியவில்லை. இந்த மோகத்தில் நாம் மயங்கிக் கிடப்பதால், தன் லக்ஷ்யத்தை நோக்கி இந்தியா செல்வதில் நம்மால் தடை ஏற்படுகிறது. ஆங்கிலம் கற்றுக்கொள்ள எவ்வளவு காலம் செலவிட்டோமோ அவ்வளவு காலம் ஹிந்துஸ்தானி கற்றுக்கொள்வதில் செலவிட நாம் சித்தமாயிருக்க வேண்டும். இல்லையானால் பாமர மக்களிடம் நமக்கு அன்பு உண்டு என்பது சொல்வதெல்லாம் போலிதான்.

## 13. பொருளாதார சமத்துவம்

அஹிம்சை வழியில் அடையவேண்டிய சுதந்திரத்துக்கு இதுவே அச்சாணி போன்றது. முதலாளித் தனத்துக்கும் தொழிலுக்குமிடையே என்றுமே ஒரு போராட்டம் இருந்து வருகிறது. இதை ஒழிப்பதே பொருளாதார சமத்துவம் ஏற்பட உழைப்பதாகும். தேசத்தின் செல்வத்தில் பெரும் பகுதி சிலரிடத்தில் மட்டும் குவிந்திருக்கிறது. ஆனால் கோடிக்கணக்கான மக்கள் உண்ணவும் உடுக்கவும் வகையில்லாது அவதியுறுகிறார்கள். பொருளாதார சமத்துவம் என்றால், ஒருபுறம் இவ்விதம் குவிந்த செல்வத்தைக் கரைப்பதும், மறுபுறம் மேற்சொன்ன அவதியைப் போக்கி மக்களை உயர்த்துவதுமேயாகும். செல்வருக்கும் உணவற்ற கோடிக்கணக்கான ஏழை மக்களுக்குமிடையே இவ்வித வேற்றுமை இருக்கிற வரையில், அஹிம்சை முறையில் அரசாட்சி நடத்துவது சாத்தியமில்லை என்பது தெளிவு. அலங்காரமான அ ண்மனைகள் ஒருபுறமும் பக்கத்தில் ஏழைத் தொழிலாளி மக்கள் வாழ்கிற கேவலமான குடிசைகள் மறுபுறமும் இருப்பதைப் புதிய டில்லியில் பார்க்கிறோம். சுதந்திர இந்தியாவில் இந்த விதமான வேற்றுமை ஒரு நாள்கூடக் காணமுடியாது. அங்கு, நாட்டில் செல்வருக்கு என்ன அதிகாரமுண்டோ அதே அதிகாரம் ஏழை மக்களுக்குமிருக்கும். செல்வர் தங்கள் செல்வத்தையெல்லாம் துறந்து செல்வத்தால் வந்த அதிகாரத்தையும் விட்டு, பொது நன்மைக்காக இவற்றைப் பங்கிட்டுத் தந்தாலன்றி, என்றைக்காவது ஒரு நாள் பயங்கரமான ரத்தக்களரி ஒன்று ஏற்படுவது நிச்சயம்.

செல்வத்துக்கு தர்மகர்த்தாக்கள் என்ற முறையில் செல்வர் வாழவேண்டும் என்பதே எனது கொள்கை. இதை அனேகர் குறைகூறுகிறார்கள். எனினும், இக் கொள்கையில் எனக்கு உறுதி குறையவில்லை. இந்த நிலை அடைவது கஷ்டமென்பது உண்மை. அஹிம்சையைக் கடைப்பிடிப்பதும் கஷ்டமே. இது செங்குத்தான மேட்டில் ஏறுவதுபோன்றது. எப்படியேனும் ஏறிவிடுவது என்றே 1920 ஆம் வருஷத்தில் நாம் முடிவு செய்தோம். நாம் படும் சிரமத்துக்கு நல்ல பலன் உண்டு. இதன் மூலம் அஹிம்சைவழியில் நமக்குள்ள ஈடுபாடு நாளுக்குநாள்

வளர்ந்துவரும். ஏன் அஹிம்சை வழிதான் மேலானது என் பதைக் காங்கிரஸ்காரர் எல்லோரும் நன்ருய்ச் சிந்தித்துத் தெளிந்துகொள்வார்கள் என்றே எதிர்பார்க்கிறேம். இப்போதுள்ள ஏற்றத் தாழ்வுகளை ஹிம்சை முறையிலோ அல்லது அஹிம்சை முறையிலோ எப்படி ஒழிப்பது என்று அவர்கள் ஆராயவேண்டும். ஹிம்சை முறை நமக்குத் தெரியுமென்று நினைக்கிறேன் ; ஓரிடத்திலும் அது வெற்றி பெற்றதில்லை.

அஹிம்சைவழி இன்னும் திட்டமாக உருவடையவில்லை ; சோதனை நடந்துகொண்டுதான் இருக்கிறது. இதைச் சாதித்துவிட்டோம் என்று காட்டிக்கொள்வதற்குச் சிறப்பாக எதுவும் இல்லை. எனினும், சமத்துவம் ஏற்படும் வகையில், அஹிம்சை முறை வேலை செய்யத் தொடங்கியிருக்கிறதென்பது நிச்சயம் ; வேலை ஒருவேளை மந்தமாக இருக்கலாம். அஹிம்சை என்ற அடிப்படையில் ஒரு சமூகமோ அல்லது சமுதாயமோ நிருமாணிக்கப்பட்டிருக்குமானல், அஹிம்சையைப் பின்பற்றுபவர்களேனும் மற்றவர்களேனும் அந்த அடிப்படைபற்றிக் குறைகூறினலும் எதிர்த்தாலும், அதனல் சலியாது நிற்கும் ஆற்றல அந்தச் சமூகத்துக்கும் சமுதாயத்துக்கும் இருக்கவேண்டும். செல்வம் படைத்தவர்கள் நம் காங்கிரஸில் இருக்கிருர்கள். இவர்களே வழிகாட்டவேண்டியவர்கள். தனிப்பட்ட காங்கிரஸ்காரர் ஒவ்வொருவரும், பொருளாதார சமத்துவம் என்ற அம்சத்தில் தம் உள்ளம் உண்மையாகவே ஊன்றி இருக்கிறதா என்று ஆராய நமது போராட்டம் சிறந்த சந்தர்ப்பமளிக்கிறது. என்றைக்காவது சமத்துவம் நிச்சயமாக ஏற்படும் என்ருல், அதற்குக் கால்கோள் இப்போதே செய்தாகவேண்டும். சிலர், சுயராஜ்யம் வந்தபிறகு முக்கியமான சீர்திருத்தங்கள் ஏற்படும் என்று எண்ணுகிருர்கள் ; அஹிம்சை நிலவும் சுயராஜ்யம் சாதாரணமாய் எப்படி நடைபெறும் என்பதுபற்றி இவர்கள் ஒன்றுமே அறியவில்லை என்பதுதான் இதன் பொருள். திடீரென்று ஒரு நாள் சுயராஜ்யம் வானத்தைப் பொத்துக்கொண்டு வரப்போவதில்லை. சுயராஜ்யம் என்ற மாளிகையை அனைவருடைய கூட்டுமுயற்சியாலும் ஒவ்வொரு கல்லாக வைத்துத்தான் கட்டவேண்டும். நம் கட்டிடம் வெகு தூரம் எழும்பிவிட்டது ; ஆயினும், இன்னும் எழுப்பவேண்டிய உயரம் அதிகம் இருக்கிறது ; அவ்வளவையும் எழுப்பினுல்தான் சுயராஜ்ய மாளிகையை அதன்

பூரணப் பொலிவுடன் நாம் காணமுடியும் ; எனவே, பொரு ளாதார சமத்துவம் ஏற்படுவதற்குத் தாம் செய்ததென்ன என்று ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

## 14. விவசாயிகள்

சுயராஜ்யம் மிகப் பெரிய கட்டிடம். எண்பது கோடி கைகள் சேர்ந்து அதைக் கட்டவேண்டும். விவசாயிகளுக்கே இதில் பெரும் பங்கு உண்டு. இவர்கள் நம்மில் 80 சத விகிதத்துக்கு மேல் இருக்கிறார்கள் ; காங்கிரஸ் என்றாலே விவசாயிகள் என்று ஆகவேண்டும். நிலைமை இப்படி இல்லை. தங்கள் அஹிம்சை யின் வலிமை எவ்வளவு பெரிதென்பதை அவர்கள் உணரும் போது, உலகத்திலுள்ள எந்தச் சக்தியும் அவர்களை எதிர்த்து நிற்க முடியாது.

ஆனால், அரசியலில் ஆதிக்கம் பெறுவதற்குக் கருவியாக விவசாயிகளை உபயோகிக்கக்கூடாது. உபயோகிப்பது அஹிம்சை முறைக்கே விரோதமாகும். விவசாயிகளைத் திரட்டி வேலைக்கு நான் எப்படி ஒருமுகப்படுத்துவேன் என்பதை அறிய விரும்புகிற வர்கள், சம்பரானில் நடந்த சத்தியாக்கிரக வரலாற்றைத் தெரிந்து கொள்வது பயனுள்ளதாயிருக்கும். இந்தியாவில் முதல்முதல் அங்கேதான் சத்தியாக்கிரகத்தைச் செயலில் நடத்திச் சோதனை செய்தோம் ; இதன் பலன் என்ன என்பதை நம் நாடு முழுமை யும் அறியும். இது பொதுமக்கள் இயக்கமாக வளர்ந்தது. ஆதிமுதல் அந்தம்வரையில் பூரண அஹிம்சையில் அமைந்தது; இருபது லக்ஷம் விவசாயிகள் அதில் கலந்துகொண்டார்கள். நூறு வருஷமாக இருந்த குறிப்பான ஒரு குறையைப் போக்கு வதற்கென்றே அப்போராட்டம் தொடங்கினோம். அக்குறையைப் போக்கவேண்டுமென்று பலாத்கார முறையில் பல தடவை முயற்சி நடந்தது. ஒவ்வொரு தடவையும் அதிகாரிகள் விவ சாயிகளை நசுக்கிவிட்டார்கள். ஆனால் அஹிம்சை முறையோ, விவசாயிகளுக்கு ஆறே மாதத்தில் வெற்றி தந்தது. சம்பரான் ஜில்லா விவசாயிகளுக்கு, நேர்முகமான எந்த முயற்சியு மில்லாமல், அரசியல் விழிப்பு ஏற்பட்டது. தங்கள் துயரத்தைப் போக்க அஹிம்சைதான் சிறந்த கருவி என்பதை அவர்கள் கண்கூடாகவே கண்டார்கள் ; இதனால்தான் அவர்கள்

காங்கிரஸில் சேர்ந்தார்கள். பிரிஜ்கிஷோர் பிரசாதும், ராஜேந்திரப் பிரசாதும் சத்தியாக்கிரக இயக்கத்தில் தலைமை வகித்து அம்மக்களை நடத்தினார்கள். சமீபத்தில் நடைபெற்ற சட்ட மறுப்பு இயக்கங்களிலெல்லாம் இந்த விவசாயிகள் நல்ல வேலை செய்திருக்கிறார்கள்.

கேடா, பர்தோலி, போர்சாத் ஆகிய ஜில்லாக்களில் விவசாயிகளின் இயக்கம் எப்படி நடைபெற்றதென்பதை வாசகர் அறிவதும் பயனுடையதாகும். விவசாயிகளுக்குச் சொந்தமான குறைகள் என்ன உண்டோ, என்ன கஷ்டங்களை வாஸ்தவமாக அவர்கள் உணர்கிறார்களோ, இவைகளுக்காக மட்டும் விவசாயி இயக்கத்தை நடத்தி, வேறு அரசியல் காரியங்களுக்கு அவர்களைப் பயன்படுத்திக்கொள்ளாமல் இருந்ததுதான் இந்த இயக்கங்கள் அடைந்த வெற்றியின் ரகசியமாகும். குறித்த ஒரு குறையைப் போக்கவேண்டி அனைவரும் ஒன்று சேர்வதென்றால் அவர்களுக்குப் புரியும். அஹிம்சை பற்றி அவர்களுக்கு அறிவுரைகள் பகரவேண்டியதில்லை. முதலாவதாக, அவர்கள் நன்றாய் உணரக்கூடிய விஷயத்தில் ஏதேனும் ஒரு பரிகாரம் தேடவேண்டி, அஹிம்சையைக் கடைப்பிடிக்க விவசாயிகள் கற்றுக்கொள்ளட்டும். பின்னர், அவர்கள் கடைப்பிடித்த வழி அஹிம்சைவழி என்று எடுத்துக்காட்டினால், அவர்களுக்கு அது எளிதில் விளங்கும்.

விவசாயிகளுக்காக அவர்களிடையே வேலை எப்படி நடத்த வேண்டும் என்பதுபற்றிக் காங்கிரஸ்காரர் யாரேனும் அறிய விரும்பினால், இந்த உதாரணங்களிலிருந்து நன்றாய் அறியலாம். காங்கிரஸ்காரர் சிலர் விவசாயிகளை ஒன்று சேர்ப்பதற்காக இப்போது பின்பற்றிவரும் முறையால் அவர்களுக்கு எந்த நன்மையும் விளையவில்லையென்றும் தீமைதான் விளைந்திருக்கிறதென்றும் எனக்குத் தோற்றுகிறது. எப்படி இருந்தாலும், அவர்கள் அஹிம்சை வழியில் ஒழுகவில்லை என்பது தெளிவு. ஆனால் இந்த ஊழியர்கள் சார்பாக ஒன்று சொல்லவேண்டும். அஹிம்சை முறையில் தங்களுக்குச் சிறிதும் நம்பிக்கையில்லை என்று இவர்கள் தெளிவாக ஒப்புக்கொள்கிறார்கள். இவர்களுக்கு, காங்கிரஸின் பெயரை உபயோகிக்கக்கூடாதென்பதும் காங்கிரஸ்காரராகத் தாங்கள் வேலைசெய்யக்கூடாதென்பதுமே நான் சொல்லக் கூடியது.

இந்தியாவனைத்துக்கும் ஏற்ற முறையில் விவசாயிகளையும் தொழிலாளரையும் கூட்டி ஒருமுகப்படுத்தும் முயற்சி எங்கும் இப்போது நடந்துவருகிறது; இந்த முயற்சியில் நான் என் ஈடுபடவில்லை என்பது வாசகருக்கு இப்போது நன்கு விளங்கும். எல்லோரும் ஒரே நோக்கத்துக்காக உழைத்தால் எவ்வளவு நன்றுயிருக்கும்! விசாலமான பரப்புள்ள நமது நாட்டில் ஒரு வேளை இது அசாத்தியமாகவும் இருக்கலாம். அஹிம்சையில் எந்த விதமான நிர்ப்பந்தமுமில்லை. நல்ல விவேகத்தோடு அஹிம்சையைக் கடைப்பிடித்து உழைத்துவந்தால், செய்யும் வேலையே வரவேண்டிய தன்மையை நிச்சயம் வருவிக்கும்.

விவசாயிகளுக்குரிய வெவ்வேறு பிரசினைகளைக்குறித்து வேலை செய்கிற தனி இலாகாவொன்று; தொழிலாளர் இலாகா போல, காங்கிரஸில் இருக்கவேண்டுமென்று நான் எண்ணுகிறேன்.

## 15. தொழிலாளர்

ஆமதாபாத் தொழிலாளர் சங்கமானது இந்தியா முழுமையும் பார்த்துப்பின் பற்றத்தக்க மாதிரிச் சங்கமாகும். இச்சங்கத்துக்கு அடிப்படையில் அஹிம்சை தவிர வேறொன்றுமில்லை. இதன் வளர்ச்சியில் ஒரு தடையும் ஏற்பட்டதில்லை. எவ்வித ஆடம்பரமோ விளம்பரமோ இல்லாமல் இது மேலும் மேலும் வலிமை பெற்று வந்திருக்கிறது. இச் சங்கத்துக்கென்று தனியான ஆதுலர் சாலை (ஆஸ்பத்திரி) இருக்கிறது; மில் தொழிலாளர்களின் குழந்தைகளுக்காகப் பாடசாலைகளும் வயது வந்தோருக்கேற்ற கல்வி வகுப்புக்களும் உள்ளன; சொந்த அச்சுக்கூடமும் கதர் வஸ்திராலயமும் குடியிருக்கத் தனியான விடுதிகளும் உள்ளன. அனேகமாக இங்குள்ள தொழிலாளர் அனைவருக்குமே வாக்குரிமை உண்டு. இவர்களைப் பொறுத்ததே, தேர்தல்களின் முடிவு. மாகாணக் காங்கிரஸ் கமிட்டியாரின் முயற்சியால் இவர்கள் பெயர் வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்பட்டது. காங்கிரஸ் ஸ்தாபனத்திலுள்ள கட்சிப்பூசல்களில் இச்சங்கம் ஒருபோதும் கலந்து கொண்டதில்லை. ஆமதாபாத் நகரசபையின் வேலைகளைக்கூட இது நிர்ணயிக்க முடிகிறது. பல முறை வேலைநிறுத்தம் செய்து வெற்றிகண்டிருக்கிறது; வேலை

நிறுத்தங்கள் யாவும் பூரண அஹிம்சையில் நடந்தன. மில் முதலாளிகளும் தொழிலாளரும் தாங்களே மத்தியஸ்தர்களை ஏற்படுத்திக்கொண்டு பெரும்பாலும் அவர்கள் மூலமாகவே தங்கள் தகராறுகளைத் தீர்த்துக்கொண்டிருக்கிறார்கள். என் னிஷ்டம்போல் செய்வதானால், இந் நாட்டிலுள்ள தொழிற்சங் கங்கள் அனைத்தையுமே ஆமதாபாத் சங்கத்தைப்போல் ஒழுங்கு படுத்தி அமைத்துவிடுவேன். இந்தச் சங்கம் அகில இந்தியத் தொழிலாளர் சங்கத்தின் விவகாரங்களில் ஒருபோதும் தலையிட முயன்றதேயில்லை ; அகில இந்தியச் சங்கத்தின் போக்கும் இச் சங்கத்தை ஒருபோதும் பாதித்ததில்லை. அகில இந்தியச் சங்க மானது ஆமதாபாத் சங்கத்தின் முறையை ஏற்றுக்கொண்டு, அகில இந்தியச் சங்கத்தின் அங்கமாக இதையும் ஏற்றுக் கொள்ளக்கூடிய காலம் வருமென்றே நான் நம்புகிறேன். இதற்கு அவசரமில்லை. உரிய காலத்தில் இது நடைபெறும்.

## 16. ஆதிக்குடிகள்

ஆதிவாசி (ஆதிக்குடிகள்) என்ற சொல்லானது, மலைகளில் வசிக்கிற இந்நாட்டின் பூர்வகுடிகளான பீல், கோண்டு, நீலகிரி யிலுள்ள தோடர் முதலான மக்களைக் குறிக்க உபயோகிக் கும் சொல்லாகும். இச் சொல்லைச் செய்தவர் தக்கர் பாபா என்று எண்ணுகிறேன்.

ஆதிக்குடிகளுக்குச் சேவை செய்தல் நிர்மாணத்திட்டத்தில் ஓர் அங்கமாகும். பதினாறுவது அங்கமாக இந்த வேலையை இங்குக் குறித்திருக்கிறேன் ; இதனால் இது முக்கியமானதன்று என்று பொருள்படாது. நம் நாடு எவ்வளவோ விசாலமானது ; இங்குள்ள மக்கள் வெவ்வேறான இனத்தவர்கள். எனவே, மக்களனைவரையும் அவர்கள் நிலைமையையும் பற்றிய எல்லாச் செய்திகளையும் நம்முள் எவரும் அறிந்ததாகச் சொல்லமுடி யாது ; எவ்வளவு சிறந்த மனிதரானும் அறிந்திருக்கமுடியாது. நாம் ஒரே மக்கட் சமுதாயம் என்று சொல்லிக்கொள்ளு கிறோமே, இந்தச் சொல்லை நிலை நாட்டுவது எவ்வளவோ கஷ்ட மானது ; சமுதாயத்திலுள்ள ஒவ்வொரு தொகுதியும் மற்ற ஒவ்வொரு தொகுதியோடும் தான் ஒன்றியிருப்பதாக உண்மை

யுணர்வு பெற்றால்தான் இது சாத்தியம் ; நம் மக்களைப் பற்றிய மேற்கூறிய செய்திகளை ஒருவர் தாமே உணரும்போதுதான், இந்தக் கூற்றையும் அவர் நன்றாக உணரமுடியும்.

இந்தியா முழுமையும் ஆதிக்குடிகள் இரண்டு கோடிக்கு மேல் இருக்கிறார்கள். கூர்ஜரத்தில் பல வருஷங்களுக்கு முன்னே பீல் ஜாதியினராகிய ஆதிக்குடிகளிடையே தக்கர் பாபா வேலைசெய்ய ஆரம்பித்தார். தாணா ஜில்லாவில் அவசிய மாய்ச் செய்யவேண்டிய இதே வேலையில் பாலகங்காதர கேர் (பம்பாய் பிரதமர்) 1940 ஆம் வருஷத்தில் அவருக்கு இயல்பா யுள்ள முழு ஆர்வத்தோடு ஈடுபட்டார். இன்று ஆதிவாசி சேவா மண்டலத்துக்கு அவரே தலைவராக இருக்கிறார்.

இந்தியாவின் மற்றப் பகுதிகளிலும் அவரைப் போலவே வேறு பலர் சேவை செய்கிறார்கள். எனினும், சேவை செய் வோர் தொகை மிகவும் குறைவு. உண்மையாக இத் துறையில் மிகுந்த வேலைக்கு இடமிருக்கிறது ; ஊழியர்களே குறைவு. இது வெறும் ஜீவகாருண்ய்யத்தால் மட்டும் விளைந்த தொண் டன்று, உருவான தேச சேவை என்பதையும், இச் சேவை உண்மையான சுதந்திரம் பெறும் நாள் நெருங்கி வரும்படி செய்கிற தென்பதையும் யாரே மறுக்கமுடியும் ?

## 17. குஷ்டரோக நிவாரணம்

குஷ்டரோகி என்ற மாத்திரத்திலே அருவருப்புக்கு இடமா யிருக்கிறது. மத்திய ஆப்பிரிக்காவுக்கு அடுத்தபடியாக இந்தியா வில்தான் குஷ்டரோகிகள் அதிகம். எனினும், நம்முள் சிறந்தோர் யாரையும் போலவே இவர்களும் சமூகத்தில் ஓரங் கம் ஆவார்கள். ஆனால், சிறந்த மக்களுக்கு மற்றோருடைய கவனிப்புத் தேவையில்லாதபோதுங்கூட, அவர்களையே நாம் அதிகம் கவனிக்கிறோம். மற்றப்படி உண்மையில் நாம் தனியா கக் கவனிக்கவேண்டியவர்களான குஷ்டரோகிகளைக் கவனிக் காதது மட்டுமல்ல, வேண்டுமென்றே உதாசீனம் செய்கிறோம். இது இரக்கமற்ற செயலென்றே சொல்லத் தோன்றுகிறது ; அஹிம்சையையொட்டிப் பார்த்தால், இது இரக்கமற்ற செயல் தான். அன்னியநாட்டிலிருந்து இங்கு வந்துள்ள கிறிஸ்தவ

மதப் பாதிரிதான் நம் நாட்டில் குஷ்டரோகியைக் கவனிப்பவர் என்பதை நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். இந்தியரால் குஷ்ட ரோகிகளுக்காக நடத்தப்பெறும் வைத்தியசாலை ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது; இது வர்தாவுக் கருகிலுள்ளது; மனோஹர் திவான் என்பவர் உண்மையான அன்புப் பணியாக இதை நடத்தி வருகிறார். இதற்கு விநோபா பாவே வேண்டிய ஊக்கமளித்து வழிகாட்டி வருகிறார். இந்தியாவின் ஒவ்வோர் அங்கத்திலும் புத்துயிர் எழுந்து பொங்குமானால், சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடித்து மிக்க விரைவில் சுதந்திரமடையவேண்டும் என்ற உணர்ச்சி நம்மிடம் உண்மையாகவே இருக்குமானால், இந்தியாவில் ஒரு குஷ்டரோகியேனும் பிச்சைக்காரரேனும் பராமரிப்பில்லாமலோ எண்ணுவாரற்றோ இருக்கமுடியாது. நிர்மாண சேவை என்பது ஒரு சங்கிலி போன்றது. இச் சங்கிலியில் எத்தனையோ கரணைகள் உள்ளன; நிர்மாணத் திட்டம் என்ற நூலைத் திருத்தி இப்போது மீண்டும் வெளியிடுகையில், குஷ்டரோக நிவாரண வேலையை இங்கு வேண்டுமென்றே இச் சங்கிலியில் ஒரு புதிய கரணையாகச் சேர்த்திருக்கிறேன். இந்தியாவில் குஷ்டரோகிகளுக்கு என்ன ஸ்தானம் கொடுத்திருக்கிறோமோ அதே ஸ்தானம்தான் நம் நாட்டவருக்கு இன்றைய நாகரிக உலகத்தில் கொடுத்திருக்கிறார்கள்; உலக விவகாரங்களைச் சற்றுக் கவனித்தால் இதை நாம் உணரலாம். கடல் கடந்த இந்தியர்களின் நிலைமையை ஆராய்ந்தால் போதும்; நான் கூறியது எவ்வளவு உண்மை யென்பது தானே விளங்கும்.

## 18. மாணவர்

மாணவர்களைப் பற்றிய சேவையைக் கடைசியில் சொல்லலாமென்று வைத்திருக்கிறேன். அவர்களோடு எப்போதும் எனக்கு நெருங்கிய தொடர்பு உண்டு. என்னை அவர்களுக்குத் தெரியும்; அவர்களையும் எனக்குத் தெரியும். எனக்காக எத்தனையோ மாணவர் சேவையில் இறங்கி யிருக்கிறார்கள். கல்லூரிகளில் படித்துப் படிப்பை விட்டோர் பலர் என் மதிப்புக்குரிய தோழர்கள். இவர்களால் வருங் காலத்தில் பெரு நன்மை விளையு

மென்ற நம்பிக்கையுண்டு. ஒத்துழையாமை ஓங்கியிருந்த காலத்தில் பாடசாலைகளையும் கல்லூரிகளையும் துறக்கும்படி இவர் களை அழைத்திருக்கிறோம். காங்கிரஸ் அழைப்புக் கிணங்கி இப்படித் துறந்துவந்த ஆசிரியர் மாணவர்களில் சிலர், தாங்கள் ஏற்ற கொள்கையில் மிக்க உறுதியோடிருந்து நாட்டுக்கும் தங்களுக்குமே மிக்க நன்மை உண்டாக்கி யிருக்கிறார்கள். இவ்விதம் துறக்கும்படி மீண்டுமொருமுறை மாணவர்களை நான் அழைக்கவில்லை ; அதற்கேற்ற சூழ்நிலை ஏற்படாததே காரணம். இன்றைய கல்வி முறை போலியானது, இயற் கைக்கு முரணானது ; எனினும், அக்கல்வி முறையின்மீது நம் நாட்டு இளைஞர்களுக்கு அளவற்ற மோகமிருக்கிறதென்று அனுப வத்தில் தெரியவந்திருக்கிறது. கல்லூரிப் படிப்பு, ஏதேனும் ஒரு வேலைக்கு வழிகாட்டுகிறது. சுகபோகம் நிறைந்த நாகரிக சமூகம் என்று கருதுகிற ஒரு கூட்டத்தில் கலந்துகொள்வதற்கு அனுமதிச்சீட்டுப் போன்றது இந்தப் படிப்பு. நல்ல விஷய அறிவு பெறவேண்டும் என்ற தேட்டம் குற்றமானதென்று சொல்லமுடியாது. ஆனால், கல்லூரிப் படிப்பு என்ற வழக் கமான தடத்தில் போவதைத் தவிர, இந்தத் தேட்டம் நிறை வேற இன்று வேறு வழியும் இல்லை. இந்தப் படிப்பில் தாய் மொழிக்குரிய ஸ்தானத்தை முற்றிலும் அன்னியமான ஒரு மொழி கவர்ந்துகொள்ளுகிறது ; இந்த அன்னிய மொழியைக் கற்கும்பொருட்டு இவர்கள் பள்ளிக்கூடத்தில் பல வருஷ காலம் பாழாக்கவேண்டியிருக்கிறது. இப்படிக் காலம் பாழ்போவதை இவர்கள் பொருட்படுத்துவதில்லை. தாய்மொழியை அன்னிய மொழி வெருட்டிவிடுவது எத்தகைய பாவமென்பதை ஒரு போதும் உணருவதில்லை. இக்காலத்து நுட்பமான சிந்தனைகளை யும் விஞ்ஞானச் செய்திகளையும் தெரிந்துகொள்வதற்கு நம் நாட்டில் வழங்கும் பல்வேறு மொழிகள் பயன்படா என்று இந்த மாணவர்களும் அவர்கள் ஆசிரியர்களும் முடிவு செய்துவிட்டார் கள். ஜப்பான் தேசத்தில் படிப்பெல்லாம் ஜப்பானிய மொழி யிலேயே சொல்லித் தருகிறார்களென்று தெரியவருகிறது. அப் படியானால் அவர்கள் நாட்டில் அறிவு எப்படி வளர்ந்தது என்று அறிந்தாலும் நலம். சீனப் பெருந்தலைவரான சியாங்- கே-ஷேக்குக்குத் தெரிந்த ஆங்கிலமெல்லாம் மிகமிகச் சொற் பந்தான்.

ஆயினும், மாணவர்கள் இந்த நிலையில் இருந்தபோதிலுங் கூட, வருங்காலத்தில் இந் நாட்டுத் தலைவர்களாய் வரப் போகிற வர்கள் அனைவரும் இந்த இளம் பிள்ளைகளிடையிருந்தும் இளம் பெண்களிடையிருந்துமே உதிக்கவேண்டியவர்கள் ; ஆனால், துரதிஷ்ட வசமாக, இந்த நாட்டில் எத்தனை விதமான அபிப் பிராய பேதங்கள் உண்டோ அத்தனையும் இவ்விளைஞர்களைப் பாதிக்கின்றன. அஹிம்சை நெறி அவர்களை அதிகமாக வசீ கரிக்கவில்லை. அடிக்கு அடி திருப்பிக் கொடுப்பது என்றாலும், ஓரடிக்கு பதில் இரண்டடி திருப்பிக் கொடுப்பது என்றாலும், அவர்களுக்குச் சுலபமாய் விளங்குகிறது. அடி கொடுப்பதால் ஏற் படும் பலன் கொஞ்ச நேரமே இருப்பதானாலுங்கூட, அப் பலன் உடனே கிடைப்பதாகத் தென்படுகிறது. மிருகங்கள் தமக்குள் சண்டைபோடும்போதும், மக்கள் இவ்வாறு யுத்தம் செய்யும் போதும், மிருகபலம்தான் ஒன்றோடொன்று மோதுகிறதென்று நாம் காண்கிறோம் ; மேற்சொன்ன போர் முறையும் இவ்விதம் மிருக பலத்தைப் பரீட்சிக்கும் சோதனைதான். இதற்கு முடி வில்லை. ஆனால், அஹிம்சைத் தத்துவத்தில் ஈடுபடுவதென்றால், பொறுமையாக ஆராயவேண்டும். அதைவிடப் பொறுமையாக வும் அதிகச் சிரமத்தோடும் அஹிம்சையைப் பின்பற்றி நடக்க வேண்டும். மாணவர்களிடை செல்வாக்குப் பெறுவதற்காகப் பலர் இன்று போட்டி போடுகிறார்கள் ; இந்தப் போட்டியில் நான் சேரவில்லை. விவசாயிகள் விஷயத்திலும் தொழிலாளிகள் விஷ யத்திலும் நான் கடைப்பிடிக்கும் கொள்கைக்கு என்ன காரண முண்டோ அதே காரணந்தான் இங்கும் உண்டு. இருந்தாலும், மாணவன் என்ற சொல்லுக்கு விரிவாகப் பொருள் செய்து கொண்டால், நானும் அவர்களோடு உடன் பயிலும் மாணவனே. நான் பயிலும் கலாசாலை, அவர்கள் கலாசாலையினின்றும் வேறா னது. எனது கலாசாலைக்கு வந்து நான் தேடுவதையே அவர்க ளும் உடன் தேடலாமென்று எப்போதுமே அவர்களை நான் அழைக்கிறேன். இதற்கு நான் கூறும் நிபந்தனைகள் பின்வரு வனவாகும் :

1. கட்சி அரசியலில் மாணவர் கலந்துகொள்ளக்கூடாது. அவர்கள், அரசியல் வாதிகள் அல்ல, மாணவர்கள் ; உண்மையை நாடுபவர்கள் என்பது ஞாபகமிருக்கவேண்டும்.

2. அரசியல்பற்றி மாணவர் வேலை நிறுத்தம் செய்யக் கூடாது. வீரவழிபாடு அவர்களுக்கு இருக்கத்தான் வேண்டும். ஆனால் அவர்கள், தங்கள் வீரவழிபாட்டை அவ் வீரர்களிடமுள்ள சிறந்த பண்புகளைப் பின்பற்றி நடப்பதன் மூலம் வெளிப்படுத்தவேண்டுமே யொழிய, அவ் வீரர்கள் சிறைப்பட்டார்களென்றோ, இறந்துவிட்டார்களென்றோ, தூக்கிலிடப்பட்டார்களென்றோ, வேலை நிறுத்தம் செய்வதன் மூலம் காட்டலாகாது. அவர்களுடைய துயரம் பொறுக்கமுடியாததாயிருந்தாலும், எல்லா மாணவர்களிடமும் ஒரேவிதமான உணர்ச்சி ஏற்பட்டாலும், அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் கலாசாலைத் தலைமை அதிகாரியின் அனுமதியின்மேல் கலாசாலைகளை மூடிவிடலாம். தலைமை அதிகாரிகள் இதற்குச் சம்மதிக்காவிட்டால் மாணவர்கள் ஒழுங்கான முறையில் அக் கலாசாலைகளை விட்டுவிலகவேண்டும்; மீண்டும் கலாசாலை நிர்வாகிகள் தங்கள் செயலுக்காக வருந்தி மாணவர்களைத் திருப்பி அழைத்தால் அவர்கள் போய்ச் சேரலாம். எக்காரணம்பற்றியும் அவர்கள், தங்களோடு சேராமல் கலாசாலைக்குப் போகிறவர்கள் விஷயத்திலோ அதிகாரிகள் விஷயத்திலோ எந்த விதமான நிர்ப்பந்தமும் செய்யக்கூடாது. தாங்கள் ஒற்றுமையாகவும் கண்ணியமாகவும் நடந்துகொண்டால் நிச்சயம் வெற்றி கிட்டும் என்ற உறுதி அவர்களுக்கிருக்க வேண்டும்.

3. மாணவர்களெல்லோரும் சாஸ்திரோக்தமான முறையில் நூல் வேள்வி செய்யவேண்டும். அவர்கள் உபயோகிக்கும் கருவிகளை எப்போதும் சுத்தமாகவும் துப்புரவாகவும் ஒழுங்காகவும் நல்ல நிலைமையிலும் வைத்திருக்கவேண்டும். முடியுமானால், இந்தக் கருவிகளைத் தாங்களே செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் நூற்கும் நூல் தானாகவே மிக உயர்ந்த ரகமாயிருக்கும். நூல் நூற்பது சம்பந்தமான புத்தகங்களையெல்லாம் படித்து, செல்வநிலை, சமூகம், நல்லொழுக்கம், அரசியல் ஆகியவைபற்றிய தத்துவங்கள் நூற்றலில் என்ன அடங்கியுள்ளன என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

4. எப்போதும் அவர்கள் கதரே உடுத்தவேண்டும். அன்னிய நாட்டுப் பொருள்களையோ யந்திரத்தால் செய்த பொருள்களையோ உபயோகிப்பதை அடியோடு நிறுத்தி, கிராமத்தில் செய்த பொருள்களையே உபயோகிக்கவேண்டும்.

5. வந்தேமாதரம் பாடும்படியோ தேசியக் கொடியை வணங்கும்படியோ மற்றவர்களை நிர்ப்பந்தப்படுத்தக்கூடாது. தேசியக் கொடி போட்ட பொத்தான்களை அவர்கள் தாங்கள் அணிந்து கொள்ளலாம்; மற்றவர்களை அணியும்படி கட்டாயப் படுத்தக் கூடாது.

6. அவர்கள் மூவர்ணக் கொடியின் தத்துவத்தைத் தங்கள் சொந்த வாழ்க்கையில் கடைப்பிடித்துச் சாதி வேற்றுமையோ தீண்டாமை யுணர்ச்சியோ தங்கள் இதயத்தில் ஒரு சிறிதும் இல்லாதபடி அகற்றவேண்டும். மற்ற மதங்களைச் சேர்ந்த மாணவர்களையும் ஹரிஜனங்களையும் தங்களுடைய சொந்த உற்றார் உறவினர் போல் எண்ணி, அவர்களுடன் நட்புப் பூண்டு ஒழுக வேண்டும்.

7. அயலில் வாழ்பவர்களுக்கு ஏதேனும் நோயோ காயமோ ஏற்பட்டவிடத்து அவர்கள் வேண்டிய முதலுதவி செய்யவேண்டும். பக்கத்துக் கிராமங்களில் சென்று குப்பை வாரித் துப்புரவு வேலை செய்து, கிராமத்துச் சிறு பிள்ளைகளுக்கும் பெரியவர்களுக்கும் சுத்தமாயிருக்கக் கற்பிக்கவேண்டும்.

8. தேசிய மொழியாகிய ஹிந்துஸ்தானி மொழி பேச்சிலும் எழுத்திலும் இப்போது இரண்டு உருவமுடையதாயிருக்கிறது. இரண்டையும் அவர்கள் கற்றுக்கொள்ளவேண்டும். இதன் மூலம் ஹிந்தி பேசினாலும் உருது பேசினாலும் அவர்கள் எளிதாய் அறிந்துகொள்ள முடியும். நாகரி எழுத்தோ உருது எழுத்தோ எழுதினாலும் படிக்கவும் முடியும்.

9. தாங்கள் கற்பதில் புதிதாயுள்ளதெல்லாவற்றையும் அவர்கள் தங்கள் தாய்மொழியில் பெயர்த்தெழுதவேண்டும். அயலூர்களுக்கு வாரந்தோறும் போகும்போதெல்லாம் இப்படிக் கற்ற அறிவை அங்குப் பரப்பவேண்டும்.

10. ரகசியமாக அவர்கள் ஒன்றும் செய்யலாகாது. எல்லா விவகாரங்களிலும் சிறிது சந்தேகத்துக்கும் இடங் கொடுத்தலாகாது. புலன்களைக் கட்டுப்படுத்தித் தூய வாழ்க்கை வாழ வேண்டும். அச்சத்தை அடியோடு அகற்றவேண்டும்; தங்களோடு படிக்கும் மாணவர் யாரேனும் பலவீனராயிருந்தால் அவரைப் பாதுகாக்க எப்போதும் சித்தமாயிருக்கவேண்டும்.

கலகங்கள் ஏற்பட்டால் தங்கள் உயிரைக் கொடுத்தேனும் கல கங்களை அடக்க அவர்கள் சித்தமாகவேண்டும். நமது போராட் டத்தின் முடிவான கட்டம் வருங்காலத்தில் தங்களுக்குப்பின் நடக்கவேண்டியவற்றைச் சொல்லிவைத்துவிட்டு, நாட்டின் சுதந்திரத்துக்காகத் தங்களைப் பலிகொடுப்பது அவசியமானால், அதற்கும் அவர்கள் சித்தமாயிருக்கவேண்டும்.

**11.** தங்களுடன் படிக்கும் பெண்களோடு பழகுவதில் முறை தவறாமலும் பெருந்தன்மையாகவும் நடந்து கொள்வதில் மிக்க கவனத்தோடிருக்கவேண்டும்.

மாணவர்களுக்காக இவ்விதம் நான் வகுத்துக்கொடுக்கிற திட் டத்தை நிறைவேற்ற அவர்களுக்குப் போதிய நேரம் வேண்டும். சோம்பல்தனமாகவே அவர்கள் நேரத்தை வீண்போக்குகிறார்கள் என்பதை நான் அறிவேன். சிக்கனமாக வேலைசெய்துவந்தால் பல மணி நேரம் மிஞ்சும். இருந்தாலும், எந்த மாணவரும் அனாவசியமாக அவசரப்பட்டுத் தம் வேலைகளை முடித்துக்கொள்ள வேண்டுமென்று நான் சொல்லவில்லை. ஆகவே, தேசபக்தி யுள்ள மாணவரெல்லோரும் இதற்காக ஒரு வருஷம் செலவு செய்யவேண்டுமென்று கூறுகிறேன் ; தொடர்ந்தாற்போல் இந்த ஒரு வருஷம் செலவுசெய்ய வேண்டியதில்லை. தாங்கள் கல்வி பயிலும் காலம் முழுவதிலும் சிறிது சிறிதாக வேலை செய்வதன்மூலம் மொத்தக் கால அளவு ஒரு வருஷம் இருந் தால் போதும். இவ்விதம் செலவு செய்கிற ஒரு வருஷகாலம், காலவிரயமல்ல என்பதை அவர்கள் உணர்வார்கள். இந்தச் சேவையானது அவர்களுடைய உடல்திறமை, உள்ளத்திறமை, நல்லொழுக்கம் ஆகியவற்றை வளர்க்கும். தவிர, சுதந்திர இயக்கத்துக்கு, அவர்கள் கல்வி பயின்ற காலத்தில் அவர்களால் திட்டமான சேவையும் விளைந்திருக்கும்.

## நிர்மாணத் திட்டத்தில் சட்டமறுப்புக்குள்ள ஸ்தானம்

நிர்மாணத்திட்டத்தில் மக்கள் அனைவருடைய ஒத்துழைப்பும் கிடைக்குமானால், பூரண அஹிம்சையின் மூலம் சுதந்திரம் அடைவதற்குச் சட்டமறுப்பு இன்றியமையாததல்ல என்று இப் புத்தகத்தில் நான் கூறிவந்திருக்கிறேன். ஆனால், அப் படிப்பட்ட சௌகரியமான ஒத்துழைப்பு மக்கட்சமுதாயத்திலும் தனிப்பட்டவர்களிடையிலும் அமைவது அபூர்வந்தான்,

ஆகவே, நாடெங்கும் அஹிம்சையை மேற்கொண்டு போராடுவதானல், அதில் சட்டமறுப்பின் ஸ்தானம் என்ன என்பதை உணர்வது அவசியமாகும். சட்டமறுப்பு மூன்று விதத்தில் உபயோகப்படும் :

(1) குறித்த ஓரிடத்தில் ஏற்பட்டுள்ள அநீதியைப் போக்குவதற்குச் சட்டமறுப்பைக் கடைப்பிடித்து வெற்றி பெறலாம்.

(2) குறித்த ஓர் அநீதி அல்லது தீமையைப் போக்குவதே நோக்கமாக இருந்தபோதிலுங்கூட, குறித்த இடத்திலுள்ள மக்களின் உணர்ச்சியையோ மனச்சாட்சியையோ தூண்டிவிடும்பொருட்டு தன்னையே பலியிட்டுக் கொள்ளும் முகத்தால் பயனைக் கருதாமலே சட்டமறுப்புச் செய்யலாம். சம்பரானில் நடந்த சட்டமறுப்பு இப்படிப்பட்டது. அங்கு, பலன் கிடைக்கிறதா என்பதைச் சிறிதும் கருதாமல், அங்குள்ள மக்கள் கூட என் விஷயத்தில் அனுதாபமற்றவர்களாக இருப்பார்களென்று தெரிந்தே நான் சட்டமறுப்புச் செய்தேன். ஆனல், அது வெற்றிகரமாய் முடிந்தது. இவ் வெற்றியை, அவரவர் அபிப்பிராயம்போல், கடவுள் செயலென்ருே அதிர்ஷ்டமென்ருே சொல்லலாம்.

(3) நிர்மாண வேலையில் நல்ல பலன் கிடைக்காவிட்டால், 1941-ம் வருஷத்தில் சட்டமறுப்புத் தொடங்கியதுபோலவே அச் சந்தர்ப்பத்திலும் தொடங்கலாம். அவ் வருஷத்தில் தொடங்கிய சட்ட மறுப்பானது சுதந்திரப்போராட்டத்தில் ஓரங்கமாயிருந்தபோதிலுங்கூட, அது பேச்சுச் சுதந்திரம் என்ற குறித்த ஒரு கொள்கைக்காகச் செய்ததாகும். பொதுவான ஒரு லக்ஷயத்துக்காகச் சட்ட மறுப்புச் செய்ய முடியாது. உதாரணமாக, சுதந்திரம் வேண்டும் என்பதற்காகச் சட்டமறுப்புச் செய்ய முடியாது. நமது நோக்கம் திட்டமாயிருக்கவேண்டும் ; எல்லோருக்கும் நன்ருய்ப் புரியக்கூடியதா யிருக்கவேண்டும் ; நமக்கு விட்டுக் கொடுப்பதற்கான அதிகாரம் எதிரியிடமிருக்க வேண்டும். ஒழுங்கான முறையில் சட்ட மறுப்பை நடத்தினல் நிச்சயம் இது நம் நோக்கம் கைகூடும்படி செய்யும்.

சட்டமறுப்பு எந்தெந்தச் சந்தர்ப்பத்தில் பயன்படும், என்னென்ன சாதிக்கும் என்பவற்றை நான் இங்கு ஆராயவில்லை. ஆயினும், இங்குச் சுருக்கமாய்க் குறிப்பிட்டவற்ருல் நிர்மாணத்

திட்டத்துக்கும் சட்டமறுப்புக்கு முள்ள தொடர்பை வாசகர் உணர்ந்து கொள்ளலாம். முதலிரண்டு அம்சங்களான வகுப்பு வேற்றுமை, தீண்டாமை என்பவைபற்றி, விரிவான நிர்மாணத் திட்டமெதுவும் அவசியமில்லே, அவசியமாயிருக்கவும் முடியாது. ஆனல், சுதந்திரம் பெறுவதற்காகச் சட்டமறுப்பையே கைக்கொள்ளும்போது, முன்னதாகவே இதற்கான ஆயத்தங்கள் செய்வது அவசியம். மேலும், சுதந்திரப்போராட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்களின் முயற்சியும் அதற்குத் துணே செய்யவேண்டும் ; இம்முயற்சியை அவர்கள் எல்லோருக்கும் விளங்கும்படியாகவும் இன்னது செய்கிரேமென்ற நினேப்போடும் மேற்கொள்ளவேண்டும். ஆகவே, சட்டமறுப்பானது போராடுவோருக்கு ஒருபுறம் ஊக்கமளிக்கிறது ; மறுபுறம் எதிரியையும் திகைக்கச் செய்கிறது, சுதந்திரம் பெறும்பொருட்டுச் சட்டமறுப்புச் செய்யத் துணிந்தால் அதில், கோடிக்கணக்கான மக்களின் ஒத்துழைப்பு வேண்டும் ; அவர்கள் நிர்மாண வேலேயை மேற்கொள்வதுதான் இந்த ஒத்துழைப்பு. இது இல்லாமல் சட்டமறுப்புச் செய்வதென்பது வீண் ஜம்பம்தான், அறவே பயனற்றது என்பதை வாசகர் உணரவேண்டும்.

## முடிவுரை

இச் சிறுநூல் காங்கிரஸ் சார்பிலோ அதன் மத்திய காரியாலயத்துக்காகவோ எழுதிய கட்டுரையல்ல. சேவாகிராமத்தில் என்னுடன் உழைத்துவரும் ஊழியர் சிலரோடு நான் பேசியதன் பயனுகவே இது தோன்றிற்று. நிர்மாணத்திட்டத்துக்கும் சட்டமறுப்புக்கும் உள்ள தொடர்பை விளக்கி, அத்திட்டத்தை எப்படி நடத்துவது என்பதற்கு வழிகாட்டி நான் ஏதாவது எழுதினல் நலமென்று அவர்கள் கருதினர்கள். அதற்காகவே இதை எழுதினேன். நிர்மாணத் திட்டத்தின் அம்சங்கள் எல்லாம் இதில் கூறியவற்ருேடு முடிந்துபோகவில்லே. ஆயினும், இந்தத் திட்டத்தை மேற்கொண்டு எப்படி நடத்துவது என்பதற்குப் போதிய அளவு வழிகாட்ட இது உதவும்.

இதில் கூறிய அம்சங்களேப் பார்த்து, சுதந்திர இயக்கத்தில் இவைகளும் ஒரு பகுதியா என்றெண்ணி யாரும் பழிக்கலாகாது ; பழிப்பதும் தவறு. பலர் பல காரியங்களேச் செய்கிருர்கள் ;

பெரிய காரியங்களுமுள்ளன, சிறிய காரியங்களுமுள்ளன; ஆனால், இவற்றுக்கும் அஹிம்சை அல்லது சுதந்திரத்துக்கும் என்ன சம்பந்தமென்று பார்ப்பதில்லை. அப்படியானால், இவர்கள் எதிர்பார்ப்பதுபோலவே அக் காரியங்களால் கொஞ்சப் பலன்தான் விளையும். ஒருவர் ஜில்லா அதிகாரியாக வரலாம்; அவரைப் பிரமாதமானவரென்று யாரும் கருதாமல் போகலாம்; ஆனால், அவரே பெரிய சேனாதிபதியாக வந்து விட்டால் மிகவும் பெரியவராகி விடுகிறார்; லக்ஷக்கணக்கான மக்களின் உயிர் அவர் கையிலிருக்கிறது. சர்க்காவும் இவரைப் போன்றதுதான். பட்டிக்காட்டு ஏழைக்கிழவி வைத்திருக்கும் ராட்டையால் அவளுக்கு ஓரணா கிடைப்பதுதான் விளைகிற பலனாயிருக்கும். ஆனால், அதே ராட்டை ஜவஹர்லால் நேருவின் கையில் அமர்ந்த மாத்திரத்தில், இந்திய சுதந்திரத்துக்கே அது கருவியாய்விடுகிறது. ராட்டைக்கு நாமளிக்கும் ஸ்தானம்தான் அதற்குப் பெருமதிப்பைத் தருகிறது. நிர்மாணத் திட்டத்துக்கு நாமளித்துள்ள ஸ்தானமே, யாரும் பணியத் தக்க கௌரவமும் எதையும் பணியவைக்கும் சக்தியும் அதற்குத் தருகிறது.

நிர்மாணத்திட்டத்தை மற்றவர்கள் வேறு விதமாய்க் கூறலாம்; ஆனால், எனது அபிப்பிராயம் இதுவரை கூறியதேயாகும். ஒரு பித்தன் சொன்னது என்று இது தோற்றலாம். இது காங்கிரஸ்காரர் மனத்தைக் கவராவிட்டால், அவர்கள் என்னைத் தள்ளி விடவேண்டியதுதான். நிர்மாணத்திட்டம் இல்லாமல் சட்ட மறுப்பை நான் மேற்கொண்டு நடத்துவதென்பது, பாரிசவாயு வந்து விறைத்துப்போன கையால் ஒரு கரண்டியை எடுக்க முயல்வதுபோலாகும். (கரண்டி எடுப்பது பெரிய காரியமல்ல; உடம்பிலுள்ள நோயாகிய பாரிசவாயுவை நீக்குவதுதான் உடனே செய்ய வேண்டிய காரியம். நோயில்லாத உடம்பு வேண்டிய காரியத்தைத் தானே செய்துகொள்ளும். அதுபோல, செம்மையாய் அமைந்த இந்திய சமுதாயம் சுயராஜ்யத்தை எளிதில் தேடிக் கொள்ளும். அதைச் செம்மையாய் அமைப்பதுதான் முதல் வேலை; இதுவே நிர்மாணத்திட்டம்.)

புனா, 1945-ம் ஆண்டு நவம்பர்மீ 13உ.

## நிர்மாணத்திட்டம்—சில யோசனைகள்

1940-ம் ஆகஸ்டுமீ 18உ வெளியான ஹரிஜன் பத்திரிகை மூலமாய் காந்தியடிகள் தமது நிர்மாணத்திட்டத்தை நமக்கு முதன்முதலாக அறிமுகப்படுத்தினர்; அத் திட்டத்தில் அப்போது பதின்மூன்று அம்சங்கள் இருந்தன. சமீபத்தில் வெளியான "நிர்மாணத்திட்டம்: அதன் விளக்கமும் அதற்குரிய ஸ்தானமும்" என்ற சிறு நூலில் அத் திட்டத்தையே காந்தியடிகள் நன்ருய் வலியுறுத்திக் கூறியிருக்கிருர். அத் திட்டத்தை எவ்விதம் ஏற்று நடத்துவது என்று நிர்மாண ஊழியர்கள் நன்கு உணரும்பொருட்டு விவரமான குறிப்புக்கள் தருவது அவசியமாயிருக்கிறது. இது பற்றிச் சில வழிகளேயும் முறைகளேயும் நான் இங்கு சொல்லத் துணிகிறேன்; இவை அவ் வூழியர்களுக்கு ஓரளவு வழிகாட்ட உதவுமென்பது என் கருத்து.

### 1. வகுப்பு ஒற்றுமை

(அல்லது ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை)

இன்று நாம் காண்கிற வகுப்புப் பூசல்களெல்லாம் பரஸ்பர அவநம்பிக்கையாலும் நல்லெண்ணக் குறைவாலுமே விளேந்தவை; இதை எளிதில் ஒப்புக்கொள்ளலாம். இந்த நல்லெண்ணக் குறைவால், இந்நாட்டுப் பொதுவாழ்க்கை மிகவும் தாழ்ந்த நிலே அடைந்துவிட்டது; ஒருவருக்கு மற்றவருடைய நோக்கத்தைக் குறித்து எந்தக் காரியத்திலும் சந்தேகந்தான். சமயச் சடங்குகள், பேசுகிற மொழி, நாகரிகம், வாழ்க்கை நடத்தும் முறை, கல்வி, பணவிஷயங்களில் இருக்கவேண்டிய சுதந்திரம், அரசியல் ஆதிக்கம் முதலான வாழ்க்கையின் அம்சங்கள் அனேத்திலும் இந்தச் சந்தேகம் புகுந்துவிட்டது.

நமது உரிமை என்று நாம் கருதுவதைக் கட்டாயமாய்ச் செயலில் கொண்டுவர முயல்கிருேம். எதிரி தமது உரிமை என்று கருதுவதை துஷ்பிரயோகம் செய்ய முயன்ருல் அதைத் தடுக்கவும் முயல்கிருேம்; இந்த இரண்டுவகை முயற்சிகளுக்காகவும், எல்லாச் சந்தர்ப்பங்களிலும் ஹிம்சை முறையைக் கடைப்பிடிக்கிருேம்; இந்த ஹிம்சை முறையை மேற்சொன்ன

இரண்டு நிலைமையிலும் நாம் விட்டுவிட்டால், பரஸ்பர நம்பிக்கை யென்பது அந்தக் கணமே தானாக உண்டாகும். சாதாரணமாக எந்தச் சந்தர்ப்பங்களில் வகுப்புச் சண்டை ஏற்படக்கூடும் என்ப தற்குச் சில உதாரணங்களைக் கீழே காட்டியிருக்கிறேன்; இவை சம்பந்தமாக எவ்விதம் அஹிம்சையைக் கடைப்பிடித்து வெற்றி பெறலாம் என்பதுபற்றி எனது அபிப்பிராயத்தையும் சொல்லி யிருக்கிறேன்.—

(க) முஸ்லிமொருவர் ஒரு பசுவைப் பலியிட முற்படுகிறார் அல்லது அதன் இறைச்சிக்காக வெட்ட முற்படுகிறார் என்று வைத் துக்கொள்வோம். ஹிந்துவாயிருப்பவர் அவரோடு நட்பு முறை யில் பேசிப் பசுவைக் கொல்வதை நிறுத்த முயலவேண்டும், அல் லது அச்செயலால் ஹிந்து மக்கள் மனம் புண்படுமென்பதை எடுத்துக்காட்டி அக்கொலையைத் தவிர்க்க முயலவேண்டும். என்ன காரணத்தைக்கொண்டும், இந்தப் பசுக்கொலையைத் தவிர்க்கும்பொருட்டு, இந்த ஹிந்துவோ அல்லது வேறு பலரோ பலாத்காரத்தை உபயோகிக்கக்கூடாது.

(உ) இதுபோலவே ஹிந்து ஒருவர் துர்க்காதேவியின் திருவுரு வத்தை வீதிவலமாகக் கொண்டுசெல்கையில், ஒரு மசூதிமுன் செல்ல நேரிட்டு, ஊர்வலத்தின் பஜனையொலியால் மசூதியில் தொழுதுகொண்டிருக்கும் முஸ்லிம் நண்பருடைய தொழுகைக் குப் பங்கம் விளையலாம்; அப்படி விளைந்திருந்தாலுங்கூட, அந்த முஸ்லிம் நண்பர் பலாத்காரத்தை உபயோகிக்கலாகாது; அவ் வூர்வலத்தைத் தவிர்க்கும்படி அந்த ஹிந்துவைத் தம்மாலான வரை பணிவாக வேண்டிக்கொள்ளவேண்டும்.

(ங) முஸ்லிமொருவர் தமக்குச் சொந்தமாயுள்ள இடத்தில் ஒரு மசூதி கட்டவிரும்பினாலும், ஹிந்து ஒருவர் தமக்குச் சொந்த மான இடத்தில் விக்கிரகம் வைத்துக் கோவில் கட்ட விரும்பி னும் ஒருவர் மற்றவருக்கு இந்த உரிமை உண்டென்பதை அங்கீ கரிக்கவேண்டும்.

(ச) முஸ்லிம்களுடைய தொழுகையால் அருகிலுள்ள ஹிந் துக்களுக்குத் தொந்தரவு நேரிட்டாலும், ஹிந்துக்களின் விக்கிரகா ராதனையால் அருகிலுள்ள முஸ்லிம்களுக்குத் தொந்தரவு ஏற்பட் டாலும், ஒருவர் மற்றவருடைய சமய உணர்ச்சியைக் கௌரவித்து இந்தச் சொற்பத் தொந்தரவைப் பொறுத்துக்கொள்ளவேண்டும்.

(ரு) தம் சமயத்தை எடுத்துச்சொல்லவும் அதைப் பரப்பவும் எல்லோருக்கும் உரிமையுண்டு. ஆனால், ஒருவர் தமது சொந்தச் சமயத்தை எடுத்துப்பேசுவதிலும் பிரசாரம் செய்வதிலும், மற்றச் சமயங்களைக் குறைத்துப் பேசியோ, அந்தச் சமயாசாரியர்களை அல்லது அந்தச் சமயத்து அடியவர்களை இகழ்ந்து பேசியோ, அந்தச் சமயத்தவர் மனம் புண்படும்படி செய்யலாகாது ; இது பற்றி மிகவும் அதிகமான கவனம் வேண்டும்.

(சு) ஒரு சமயத்திலிருந்து ஒருவரை மற்றொரு சமயத்துக்கு மாற்றிவிடுவது, பழிவாங்கவேண்டுமென்ற உணர்ச்சியை உண்டு பண்ணக் காண்கிறோம். இது சரியன்று.

(எ) குறித்த ஒரு சமயத்தைச் சேர்ந்தவர்களை மற்றச் சமயத்தார் கொண்டுபோய்ப் பதுக்கிவிடும் குற்றங்கள் நிகழ்கின்றன. இவ் விஷயங்களில், இப்படிப் பதுக்கும் குற்றம் செய்த வகுப்பைச் சேர்ந்தவர்கள், குற்றவாளிகளைத் தேடிப் பிடித்து நியாய விசாரணைக்கு வரும்படி செய்வதே தங்களுக்கு கௌரவமானதென்று கருதவேண்டும்.

(அ) இருவேறு வகுப்பினர் கலகம் செய்து பலாத்காரத்தை உபயோகிக்கும் சந்தர்ப்பங்கள் மேற்குறிப்பிட்டவைபோல வேறெத்தனையோ சொல்லமுடியும். எந்தச் சந்தர்ப்பமாயினும், பலாத்காரமென்பதை அடியோடு விடடுவிடவேண்டும். நட்பு முறையில் அறிவுரை கூறுவது பலன் தாராவிட்டால், இரு வகுப்பாரும் ஏற்றுக்கொள்ளக் கூடியவர் ஒருவரோ பலரோ பட்சபாதமில்லாதவர்களாய் இருந்தால், அவர்களைக் கொண்டு இரு வகுப்புக்கும் இடையில் சமாதானம் செய்விக்கலாம். ஒரு வகுப்பார் மத்தியஸ்தத்துக்கு இணங்கி வராவிட்டால், எதிரியின் மனம் கசியச்செய்யும் பொருட்டு ஏதேனுமோர் அஹிம்சை முறையைக் கைக்கொள்ளலாம் ; அஹிம்சை முறையாவது இங்கு, இணங்கிவராதவர் செயலை எதிர்க்கும் முகமாக, ஒருவர் உண்ணாவிரதம் முதலான துன்பங்களுக்குத் தாமே தம்மை ஆளாக்கிக் கொள்வதாகும். ஆனால், எதிரி இணங்கி வரவில்லையென்பது ஸ்பஷ்டமாயிருக்கவேண்டும் ; அஹிம்சையைக் கைக்கொள்பவர், தமது அஹிம்சை வழியால் குறித்த தீமையை எதிர்க்கும் ஆன்மவலி பொருந்தியவராயிருக்கவேண்டும். அஹிம்சை முறையில் எதிர்ப்பது முடியாதபோது நீதி

ஸ்தலங்களிலும், வேறுள்ள அதிகார சபைகளிலும் பிராது தொடங்கி நியாயம் தேடலாம். ஹிந்துக்களைபும், முஸ்லிம்களை யும் பற்றி இங்கே சொன்னதவ்வளவும் மற்றெல்லா வகுப்புக் களுக்கும் பொருந்தும்.

(கூ) குறித்த ஒரு வகுப்பாரின் பண்பாட்டை மற்றெரு வகுப் பார் இழித்துப் பேசுகிறுர்களென்று சொல்லி, இது காரணமாகச் சமீப காலத்தில் மிக்க பகைமை விளைந்திருப் பதாகத் தெரிகிறது. இதனுல் கலகங்கள் உண்டாகாம லிருக்கலாம். ஆயினும், வெளியே தெரியாத முறையில் வகுப்புப் பூசலாகிய விஷத்தை இது பரப்புகிறது. இதேபோல பெரும்பான்மையோரிடத்தில் வெளியே தெரியாத சக்தியொன்று இருக்கிறது. இந்தச் சக்தியை அவர்கள் எப்போதும் சிறுபான்மை யோரை அடக்க உபயோகிக்கக்கூடும். இதற்கு மாருக, சிறு பான்மைக் கூட்டமொன்று தனது செல்வம், உடல் வலிமை என்பன காரணமாக, அல்லது மற்றவர்களுடைய கோழைத் தனம் காரணமாக, அளவுக்கு மிஞ்சிய ஆதிக்கம் வகிக்கவும் செய்யலாம். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில், மற்றவர்களுக்கு அவநம்பிக்கையும் சந்தேகமும் விளையும். அப்போது எல்லோ ரும் தாங்கள் வாழ்க்கை நடத்தும் முறை மூலமாக அந்த அவ நம்பிக்கையையும் சந்தேகத்தையும் அடியோடு போக்கி, மற்ற வர்களுக்கு எவ்விதத் தீமையும் நேராதென்றும், மற்றவர்கள் தங்களிஷ்டம்போல் வாழவும் எண்ணங்களைப் பரப்பவும் பூரண உரிமையிருக்கிறதென்றும் தங்கள் அன்றுடச் செய்கை மூலம் காட்டவேண்டும். உதாரணமாக, பாஷை சம்பந்தமாகவும் குழந் தைகளின் கல்வி சம்பந்தமாகவும், அவரவர் வாழ்க்கையை அமைப்பது சம்பந்தமாகவும், எல்லோருக்கும் பூரண சுதந்திரம் இருக்கவேண்டும்.

(கo) வியாபாரத்திலும் தொழில் செய்வதிலும், பயனற்ற போட்டியோ வீண் பொருமையோ இருத்தல் கூடாது. எந்த வியாபாரமும் அல்லது தொழிலும் குறித்த ஒரு வகுப் புக்குமட்டுமுரிய தனி உடைமையென்று கொண்டாடலாகாது. எவரும் தமக்குப் பிடித்த வியாபாரமோ தொழிலோ செய்வ தற்கு இடமிருக்கவேண்டும். எதேனுமொரு பெரிய ஸ்தாபனத் திலோ, கடையிலோ, தொழிற்சாலையிலோ, அதன் சொந்தக்காரர்

தம்மினத்தைச் சேர்ந்தோரை மட்டுமே வேலைக்கு வைத்துக்கொள்ளுகிறார்களென்றால், அதற்காக வீண் சச்சரவு செய்ய வேண்டுவதில்லை.

(கக) பரஸ்பர அவநம்பிக்கைக்கும் நல்லெண்ணக் குறைவுக்கும், ஆழ்ந்து பார்த்தால் அரசியலாதிக்கந்தான் காரணமாயிருக்கிறது; இதுவே பெருங் கேடுகளுக்கும் வித்தாயிருக்கிறது. எல்லா வகுப்புக்களுமே, மற்ற வகுப்புக்களை அடக்கியாளவேண்டுமென்ற எண்ணத்தையும், ஆசையையும் அறவே தொலைத்து முழுக வேண்டும். இந்தியாவிலுள்ள வகுப்புக்களோ அனந்தம்; இவற்றுள் ஏதேனுமொன்று தானே மற்றெல்லாவற்றின் மேலும் ஆதிக்கம் செலுத்தவேண்டுமென்று முயன்றால், மக்களிடை அமைதியோ சுபிட்சமோ நிலவ முடியாது. குறித்த ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்கள், மற்ற வகுப்பு மக்களுக்கு உதவி செய்வதற்கான சந்தர்ப்பம் எப்போது வருமென்று தேடி, சந்தர்ப்பம் வந்தால் அதைப் பூர்த்தியாய்ப் பயன்படுத்திக்கொள்வது, தங்கள் கடமையென்று கருதவேண்டும். பெருந்தன்மையாக நடப்பதும் நியாயமாக நடப்பதும் ஒன்றுக்கொன்று முரணானவையல்ல. உண்மையில் அவநம்பிக்கையையும் பகைமையையும் போக்கும் சக்தி, பெருந்தன்மைக்குத்தான் உண்டு. நம்முடைய விவகாரங்களில் கோழைத்தனத்துக்கும் அச்சத்துக்கும் இடந்தரலாகாது. இப்போதுள்ள வகுப்பு வேற்றுமையைப்போக்கி, ஒற்றுமையை நிலவச் செய்ய வழிகளையும், முறைகளையும் தேடுவது அரசியல் கட்சிகள் செய்யவேண்டிய வேலையாகும். எவ்வளவுதான் கோபமூட்டப்பட்டபோதிலுங் கூட, தனிப்பட்ட ஊழியர் அதையெல்லாம் பொருட்படுத்தாமல், பொறுமைக்கும் சகிப்புத்தன்மைக்கும் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கலாம்; இவ்விதம் வகுப்பு வேற்றுமை நீங்குவதற்கு இவர்கள் எவ்வளவோ சேவை செய்ய முடியும், ஒவ்வொருவரும் மற்ற வகுப்பைச் சேர்ந்தவர் ஒருவருடனாவது நெருக்கமான நட்புப்பூண்டு வாழ்வது செய்யக்கூடிய காரியமேயாகும். இவ்விதம் விதைக்கிற சிறு வித்தே, பின்னர் நிறைந்த பலன்தரவல்ல பெருமரமாகும். மற்றவர் நடத்தையை நாம் ஆராய்வதில்லை என்பது ஒவ்வொருவரும் கண்டிப்பாய் மேற்கொள்ளத்தக்க சிறந்த விதியாகும். இந்த ஆராய்ச்சியை நம்மீதே திருப்பி, நம்முடைய சொந்தக் குற்றங்களையும் குறைபாடுகளையும் ஞாபகப்படுத்திக்கொள்வது நல்லது. ஆகவே,

வகுப்புப் பூசலேற்படும் சமயத்தில் ஒவ்வொரு சமூகத்தையும் சேர்ந்த மக்களெல்லோரும் தங்கள் தங்கள் எண்ணத்தையும் செயலையும் சுத்தமாக வைத்திருப்பதோடு, தங்கள் சமூகத்தாரின் எண்ணத்தையும் செயலையும் ஒழுங்குபடுத்த முயலவேண்டும். மற்றச் சமூகத்தின் எண்ணத்தையும் செயலையும் அச் சமூகத்துக் குரியவர்களே கவனிக்கட்டுமென்று விட்டுவிடவேண்டும். அவசரமாகப் பத்திரிகையில் அறிக்கை விடுவது, சரியில்லாத செய்திகளைத் தருவது, பிறர் செய்கைகளுக்கு நோக்கங் கற்பிப்பது, பழிவாங்குவது முதலிய செயல்கள் பகைமையை வளர்த்து, சமாதானம் செய்வதைக் கடினமாக்குகின்றன. உண்மை வெளியாகவேண்டுமென்பது சிரமம். ஆனால், அறிக்கைகளும் எதிர் அறிக்கைகளும் பகைமையை வளர்க்குமேயன்றி ஒரு நாளும் குறைக்கமாட்டா.

(கஉ) அஹிம்சைத் தத்துவத்தில் நன்றாய்த் தோய்ந்து, அவசியமானால் தங்கள் உயிரையும் கொடுக்கச் சித்தமாயிருக்கும் ஆடவரையும் பெண்டிரையும் ஒன்று திரட்டவேண்டும். வகுப்புச் சண்டைகள் ஏற்படாதபடி தடுக்கவும், சண்டைகள் ஏற்பட்டால் அவற்றைச் சமாளிக்கவும், இவர்களுடைய சேவை மிக்க அவசியமானது. இவ்வாறு திரண்ட ஆடவரையும் பெண்களையும் ஒரு "சாந்திதளம்" (சமாதானப்படை) என்று சொல்லலாம். இப் படையைச் சேர்ந்த தொண்டரொவ்வொருவரும குறித்த காலம் பயிற்சி பெறவேண்டும். இது மிகவும் கடினமான வேலை. மிகச் சிறந்த தைரியமும் உறுதியும் வேண்டும். எல்லா வகுப்புக்களுக்கும் நெடுங்காலம் சேவைசெய்து பழகித்தான் இந்த வேலைக் கேற்ற தகுதி பிறக்கவேண்டும். ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்கள் எங்கெங்கு சாத்தியமோ அங்கெல்லாம், எப்போது சாத்தியமோ அப்போதெல்லாம், மற்ற வகுப்பாரிடையே வாழ்ந்து அவர்களுக்குச் சேவை செய்வதை நோக்கமாகக் கொள்ளவேண்டும். இவர்கள் மூலம் நெருக்கமான சமூகத் தொடர்புகள் ஏற்பட்டுப் பரஸ்பர நல்லுணர்ச்சி பிறப்பதற்கு வழியுண்டாகும். இந்த ஊழியர்கள் மக்களுடைய அன்பையெல்லாம் பெற்றிருப்பார்கள், ஆதலால், கலகங்கள் ஏற்படுவதை இவர்கள் தடுக்க முடியும் என்பதுமட்டுமல்ல; கலகங்கள் பரவுவதையும் இவர்கள் நிறுத்தமுடியும்.

(கரு) எல்லா வகுப்புக்களையும் சேர்ந்தவர்கள் சிலர் ஒவ்வொரு பட்டணத்திலும், சில கிராமங்கள் கொண்ட தொகுதியிலும் ஒரு சிறு சபையாகச் சேரலாம்; மக்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாயுள்ளவர்கள் இவ்விதம் ஒன்று திரள்வது நலமாகும்; இவர்கள் நல்ல சேவை செய்யமுடியும்; கலகங்கள் ஏற்பட்ட இடத்து, இவர்கள் சபை மத்தியஸ்தசபையாக வேலை செய்யவும் முடியும்.

## 2. தீண்டாமை ஒழிப்பு

நமது சமூக வாழ்க்கையிலுள்ள ஹிம்சையின் மிக்க விகாரமான வெளித்தோற்றமே தீண்டாமையாகும். நெடுங்காலம் இருந்து வருகிறது, அல்லது ஹிந்துக்களிடையே அநேகமாக எங்கும் பரவியிருக்கிறது என்ற காரணத்தினால் இந்த வழக்கம் குற்ற மற்றதாகாது. சமூகத்திலுள்ள இந்தத் தீமை சாஸ்திரபூர்வமானது என்ற அபிப்பிராயம் போலியானது; இதுவும் ஒரு வகைக் கொடுமையாகும். தீண்டாத வகுப்பினரென்று சொல்பவர்களுக்குள்ளேயே பல பிரிவுகள் காணப்படுகின்றன; ஒரு பிரிவு மற்றொரு பிரிவைத் தீண்டாதாரென்று ஒதுக்கி வைக்கிறது. தீண்டாமை யென்ற விஷம் இவ்வளவு ஆழம் வேரூன்றி விட்டது; ஆனால், இவர்களெல்லோரையுமே மேல் சாதியினரென்பவர்கள் தீண்டத்தகாதாராக நடத்துகிறார்கள். இந்தத் தீய வழக்கம் எந்த விதமாகத் தோன்றியிருந்த போதிலும் என்ன காரணத்தால் தோன்றியிருந்தபோதிலும், இதை அறவே களைந்தெறியவேண்டும்; 'ஹிந்து சமயம் உயிருடன் இருக்கவேண்டுமானால், தீண்டாமையைக் களைந்தெறிவது அவசியம்' என்று காந்தியடிகள் அடிக்கடி சொல்லிவருவது எவ்வளவோ பொருத்தமுடையது.

இந்தியாவின் பல பாகங்களிலும் இன்று வழக்கத்திலுள்ள தீண்டாமையில் பல தரங்கள் இருக்கின்றன. மேல் சாதியினர் இழிந்த தொழில் என்று கருதுகிற சில வேலைகள் அல்லது தொழில்கள் தீண்டத்தகாதவர் என்று சொல்லுகிற மக்கள் செய்வதற்காக ஒதுக்கிவைக்கப்பட்டுள்ளன. அவர்கள் குடியிருக்குமிடங்கள் வெறும் பொந்துகள் போன்றவை; மற்றோருடைய இருப்பிடத்திலிருந்து இவை தனியே விலக்கி வைக்கப்

பட்டுள்ளன. அவர்கள் கோயிலுக்குப் போக முடியாது. பாடசாலை முதலியவைகளுக்கும், கிணறு குளங்களுக்கும், உணவுச் சாலைகளுக்கும் போகமுடியாது; எல்லோருக்கும் பொதுவான ரயில், பஸ் முதலிய வண்டிகளில் ஏறுவதும் அவர்களுக்குக் கஷ்டம். எனவே, அவர்கள் கல்வியில்லாதவர்களாயும் மிக்க ஏழைகளாயும் அனேகமாய்ப் பயிரிடச் சொந்த நிலமில்லாதவர்களாயும் இருக்கிறார்கள்.

நமது சமூகத்தில் ஏற்பட்ட கொடிய களங்கமென்று தீண்டாமையைச் சொல்லலாம். இதை ஒழிப்பதற்குச் சில வழிகளைக் கீழே குறிப்பிட்டிருக்கிறேன். இவற்றை உடனே மேற்கொள்வது எவ்வளவு அவசியமென்பதையும், இவற்றின் கருத்து என்ன என்பதையும் ஊழியர் உணர வேண்டும்; இதன் பொருட்டு, தீண்டாதாரின் குறைகளையும் உரிமையின்மையையும் தெளிவாய்க் காட்டுவது இங்கு அவசியமாகிறது.

## தீண்டாமையின் பல தரங்கள்

(க) நீராடி முடிந்தவுடனே அல்லது உணவு கொள்ளும் போது அல்லது கோயிலுக்குப் போகும்போது சாதி ஹிந்துவொருவர் ஹரிஜனரொருவரைப் பார்த்த மாத்திரத்தில் தீட்டு ஏற்பட்டுவிட்டதென்று நம் நாட்டில் பல இடங்களில் கருதுகிறார்கள். பரிதாபகரமான இந்த ஹரிஜனன், தான் வருவதைத் தூரத்திலிருந்தே குரல் கொடுத்து மக்களுக்கு எச்சரிக்கை செய்யும்படி நிர்ப்பந்திப்பது சில இடங்களில் வழக்கமாயிருக்கிறது. பழைய காலத்தில் குஷ்டரோகிகள்தான் இவ்விதம் செய்யவேண்டியிருந்ததென்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம்.

(உ) ஹரிஜனன் சில வீதிகளில் நடந்து போகலாகாதென்றும் தடையிருக்கிறது; சாதி ஹிந்துக்களுக்கருகே வராமல் குறித்த தூரத்துக்கப்பால் நிற்கவேண்டியிருக்கிறது. சாதி ஹிந்துவோடு ஒரே பலகையிலோ விரிப்பிலோ உட்காரக்கூடாது; வீட்டினுள் நுழையக்கூடாது; வெளித் தாழ்வாரத்திற்கூட அடியெடுத்து வைக்கக்கூடாது. அவன் தொட்டதெல்லாம் தீட்டாகிவிடும். சமையலறையிருக்கிற பக்கம் அவன் வரவேகூடாது. சாதி ஹிந்துக்கள் நீரெடுக்கிற கிணற்றில் அவன் நீரெடுக்கக்கூடாது;

அவர்கள் உபயோகிக்கும் குளத்தில்கூட அவன் நீரெடுக்கக் கூடாது. மயிர் வெட்டிக்கொள்ள அவனுக்கு ஒரு நாவிதன் கிடைக்கமாட்டான். இன்னும் சில இடங்களில் அவன பற்ற வர்கள் உடுத்துவதுபோல உடுத்தககூடாது; ஹரிஜனப் பெண் கள் நகையணியக்கூடாது; கலியாணம், குழந்தைப்பேறு, மரணம் முதலான சந்தர்ப்பங்களில் சாதி ஹிந்துக்கள் நடத்து கிற சடங்குகளை இவன் நடத்தக்கூடாது.

(ங) கோயிலுக்குள் நுழையக்கூடாதென்பது ஒரு புறமிருக்க, கோயிலையடுத்த வீதிகளுக்கு அவன் போகவும் கூடாது என் பது சில இடங்களில் வழக்கம். சாதி ஹிந்துக்கள் நீராடுகிற தீர்த்தங்களான நதிகளிலோ திருக்குளங்களிலோ அவன் நீராடவுங் கூடாது. அவன் சாஸ்திரங்களைப் படிக்கக் கூடாது. மற்றச் சாதிகளுக்குக் காரியங்கள் செய்விக்கிற புரோகிதர் இவனுக்கு உதவமாட்டார்; கல்யாணம், குழந்தைப்பேறு, மரணம் முதலான சந்தர்ப்பங்களில் இவன் வீட்டில் நிகழ வேண்டிய கிரியைகளை அவர் செய்விக்கவும் மாட்டார்; அவற் றுக்கு இவன் வேறு புரோகிதனைத்தான் தேடவேண்டும்.

## செயல் முறைக்கான சில குறிப்புக்கள்

(க) நிர்மாண ஊழியர் முதலாவதாகத் தம் வாழ்க்கையி லிருந்து தீண்டாமையை அறவே போக்கிவிடவேண்டும். பிறப் பினாலோ, செய்யும் தொழிலினாலோ, மேற்கொள்ளும் வேலை யினாலோ, வருகிற உயர்வு தாழ்வு பற்றிய எவ்வித நினைப்பும் அவர் மனத்தில் இருக்கலாகாது. தீண்டாதாருடன் சமமாக ஒரே பலகையிலோ, பாயிலோ, விரிப்பிலோ உட்கார அவர் மறுத்தலாகாது. ஹரிஜன ஊழியம் செய்யும்போது, அவர்கள் தம் அருகிலே வருவதுபற்றி அவருக்கு அருவருப்பு ஏற்பட லாகாது. தம் வீட்டில் ஹரிஜனரொருவரை வீட்டுவேலை செய்வ தற்கென்றே அமர்த்தியிருந்தபோதிலுங்கூட, அவரைத் தம் குடும்பத்தில் ஒருவராகவே பாவித்து நடத்திவரவேண்டும். உண்ணும் உணவும் குடிப்பதற்கான நீர் முதலியனவும் சுத்த மாயிருக்குமேயானால், அவைபற்றி அவர் தீண்டாமை பாராட்ட லாகாது; யார் கொடுத்தாலும் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

ஆனால், ஒரே தட்டில் கலந்து உண்ணவேண்டுமென்பதோ, ஒரே குவளையில் குடிக்கவேண்டுமென்பதோ இதன் பொருளன்று. இப்படி உண்பதும் குடிப்பதும் சுகாதாரத்துக்குக் கேடான பழக்கங்கள்; தம்முடைய சொந்த உற்றார் உறவினராயிருந்தாலும் அவர்களோடு இவ்விதம் உண்பதும் குடிப்பதும் கூடாது. இவ்விதச் சீர்திருத்தங்களைச் செய்யவேண்டுமானால், ஊழியருடைய குடும்பத்தினரும் நண்பர்களுமே இதைப் பலமாக ஆட்சேபிக்கக் கூடும்; இருந்தபோதிலும், மனத்தில் கோபமில்லாமலும், விரோதபாவமில்லாமலும், அவர் இந்த ஆட்சேபத்தை யெல்லாம் சமாளித்துக் கொள்ளவேண்டும். தீண்டாமை முதலிய விஷயங்களில் தாமே மனம் மாறிவந்த பிறகுங்கூட, மற்றவர்கள், தம் சொந்தக் குடும்பத்தினராயிருந்தபோதிலும் சரி, தம் அபிப்பிராயத்தையே பின்பற்றி நடக்கவேண்டுமென்று கட்டாயப் படுத்தக்கூடாது. பகுத்தறிவோடு உண்மையை எடுத்துக் காட்டுவதாலும், கொஞ்சங் கொஞ்சமாக மனத்தைக் கரைப்பதாலும், அவர் தமது அபிப்பிராயத்தை மற்றவர் ஏற்கும்படி செய்யலாம்; இவற்றினும் மேலாக, தமது சொந்த வாழ்க்கையின் தூய்மையாலும், சேவைக்கென்றே தம் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தலாலும், தம்மோடு பழகுபவர் அனைவரையும் தம்முடைய போக்குக்கு வரும்படி செய்ய முயலவேண்டும்.

(உ) தம்முடைய சொந்த வாழ்க்கையில் தீண்டாமைக்குச் சிறிதும் இடமில்லாதபடி செய்தபின், தம் நண்பர்கள் தங்கள் வாழ்க்கையிலிருந்து தீண்டாமையை அகற்றும்படி அவர் தூண்டுவது நியாயமாகும். மற்றவர்கள் உபயோகிக்கும் கிணற்றிலிருந்து ஹரிஜனங்கள் நீரெடுக்கவும், மற்றவர்கள் குளிக்கவும் துணி துவைக்கவும் உபயோகிக்கிற குளத்திலும் ஆற்றிலும் ஹரிஜனங்கள் குளிக்கவும் துணி துவைக்கவும் அனுமதிக்கும்படி அவர் பின்னர் தூண்டலாம். பள்ளிக்கூட அதிகாரிகளையும் சாதி ஹிந்துக் குழந்தைகளின் பெற்றோரையும் கண்டு பேசி, ஹரிஜனப் பிள்ளைகளையும் பள்ளிக்கூடங்களில் சேர்த்துக்கொள்ளும்படி எடுத்துச் சொல்லலாம். ஹரிஜனங்களுக்கு இருக்கக்கூடிய கேவலமான கட்டுப்பாடுகள் அனைத்தையும் போக்குவதற்கு அவர் இவ்விதம் பேருதவி செய்யலாம். கோவில் அர்ச்சகர்களையும் வழக்கமாய்க் கோவிலுக்குப் போகிறவர்களையும் இவ்விஷயத்தில் மன

மிரங்கச் செய்வதுதான் மிகவும் கடினமாகும். ஆயினும், ஹரி ஜன முன்னேற்றம் பற்றியும் வேறு சீர்திருத்தங்கள் பற்றியும் இடைவிடாது பிரசாரம் செய்வது நமது நிர்மாணத் திட்ட வேலை யில் முக்கிய பகுதியாகும். சட்ட மூலமாகவும் நியாய சபைகள் மூலமாகவும் பரிகாரம் கிடைக்க இடமுண்டானல், அவற்றின் உதவியையும் தேடலாம். மேலும், பெருந் துன்பத்துக்குள்ளா யிருக்கும் இந்த மக்கள் சார்பாகச் சத்தியாக்கிரகம் செய்யவேண் டிய சந்தர்ப்பங்கள் ஒருவேளை நேர்ந்தாலும் நேரலாம்.

(ஈ) இவ்வளவும் சாதி ஹிந்துக்கள் மனத்தை மாற்றுவதற் காகச் சொல்லியதாகும். ஆனல், ஹரிஜனங்களையே சீர்திருத்திக் கல்வியளிக்கும் வேலை இன்னும் முக்கியமானது. பன்னெடுங் காலமாக அவர்களை அடக்கிவைத்த காரணத்தால், அவர்கள் பெரிதும் ஒளி குன்றிவிட்டார்கள். இதனல், தாங்கள் மிகவும் தாழ்வானவர்கள் என்ற உணர்ச்சி அவர்களைப் பலமாய்ப் பிடித் திருக்கிறது; இதுபோக, செத்த பிராணிகளின் மாமிசத்தைத் தின்பது முதலான கெட்ட பழக்கங்கள் அவர்களிடை மலிந்து விட்டன; இவற்றையெல்லாம் போக்கவேண்டும். தீண்டாதாருக் குள்ளேயே உயர்வு தாழ்வும் தீண்டாமையும் உள்ளன; இவற்றை விட்டுவிடும்படி அவர்களுக்குச் சொல்லவேண்டும். அவர்கள் குப்பை வாரும் தொழில் செய்கிருர்கள்; இத் தொழிலும் கீழ்த் தரமான தொழிலன்று, கௌரவமான தொழில் என்று அவர் கள் எண்ணும்படி செய்யவேண்டும். தங்கள் உடலைப் பொறுத்த வரையில், சுகாதாரமான முறையில் வாழக் கற்பிக்கவும், தூயவாழ்வு நடத்துவதன் சிறப்பையும் அதன் அவசியத்தையும், அவர்கள் உணரும்படி செய்யவும் வேண்டும். அவசியமானல், நிர்மாண ஊழியர் குப்பைவாரும் வேலையைத் தாமே செய்ய முன்வரவேண்டும், தயங்கலாகாது; இப்படிச் செய்வதன்மூலம், எல்லாத்தொழிலும் கௌரவமானது, எந்தத் தொழிலும் கௌரவக் குறைவானதன்று என்பதை ஹரிஜனங்களுக்கு உணர்த்தலாம்; இதனேடு, குப்பைவாரும் தொழில் செய்துங் கூட தொழிலாளி துப்புரவான வாழ்க்கை நடத்தமுடியும் என் றும் காட்டலாம். சாதாரண மனிதர் குப்பை விஷயத்தில் கவன மில்லாமலிருப்பதாலும், அசுத்தமான பழக்க வழக்கங்களுடைய வராயிருப்பதாலும், குப்பை வாருபவர்களின் வேலை மிக்க அரு வருப்புத் தருவதாகிறது. கக்கூசுகளையும் சாக்கடைகளையும் கெடுக்

காமல் எப்படி உபயோகிப்பதென்பதை நிர்மாண ஊழியர் தாம் வாழும் பிரதேசத்திலுள்ள மக்களுக்கு எடுத்துச்சொல்லி, அவர்கள் இதுபற்றி அதிகக் 'கவனமுடையவர்களாயிருக்கச் செய்ய வேண்டும். வர்தா முறைப்படி யமைந்த குழிக் கக்கூசு வெட்டி உபயோகிக்கக் கூடுமானால், நல்லது; அதையே எல்லோரும் உபயோகிக்குமபடி செய்து, சுத்தமான மண்ணைப் போட்டு'மலத்தை மூடுமாறு நம்மவர்களுக்குக் கற்பிக்கவேண்டும். சில ஆசிரமங்களில், அங்கு வாழ்பவர்கள் இந்தக் குப்பை எடுக்கும் தொழிலைத் தாங்களே செய்கிறார்கள்; இப்படி இவர்கள் செய்யும் செயல், தீண்டாமையைப் போக்குவதில், மறைமுகமாகவேனும் பேருதவி செய்கிறது. சாதி ஹிந்துக்கள் தோல் பதனிடும் தொழிலை எவ்வித ஆட்சேபமுமில்லாமல் மேற்கொண்டு நடத்தலாம்; நடத்துவதன்மூலம் அந்தத் தொழிலுக்கே நல்ல அந்தஸ்து ஏற்படும் ; இந்த வேலையில் ஈடுபட்டுள்ள ஹரிஜனங்கள் தங்கள் தொழிலைத் துப்புரவாகவும், அதிக லாபகரமான முறையிலும் செய்ய இது வழிகாட்டியாயிருக்கும். குடியும், சூதாட்டமும் ஹரிஜனங்களைப் பீடிக்கும் கொடு நோய்களென்று சொல்லலாம்; இந்தத் துறையிலும் மிக்க சீர்திருத்தம் செய்ய இடமிருக்கிறது.

ஹரிஜன முன்னேற்றம் அல்லது தீண்டாமை விலக்கு என்ற இந்த வேலை வெற்றி பெறவேண்டுமானால், மேற்சொன்ன மூன்று துறைகளிலும் இடைவிடாது தீவிரமாய் உழைக்கவேண்டும்; அந்தத் துறைகளாவன: ஊழியர் தமது சொந்த வாழ்க்கையில் தீண்டாமையென்ற பாவத்துக்கு இடங்கொடாமை, மேல் வகுப்பினரென்று சொல்லிக் கொள்வோரிடையில் தீண்டாமை ஒழிப்புப் பிரசாரம் செய்தல், ஹரிஜனங்களுக்கென்றே தொண்டு செய்தல்.

(ச) ஹரிஜன சமூகத்தாருக்குரிய அரசியல் உரிமைகளையும் கடமைகளையும் பற்றி விவரமாக இங்கே சொல்வது அவசியமென்று நான் கருதவில்லை. மற்றெல்லா மக்களையும் போலச் சகல விஷயங்களிலும் அவர்களுக்கு உரிமையுண்டென்று சொல்வது மிகை.

(ூ) ஹரிஜனங்களுக்கென்று தனியான கிணறு, பள்ளிக்கூடம், மாணவர் விடுதி முதலியன ஏற்படுத்தப் பல முயற்சிகள் நடக்கின்றன; தனியான கோவில்கூடக் கட்டுகிறார்கள். இநதச் செயல்கள் உண்மையில் அவர்களோடு தோழமை பூண உதவமாட்டா ;

அவர்களை என்றும் தனித்து வைப்பதற்கே இவை கருவிகளாகும்; ஆதலால் இந்த முறையில் நாம் ஊக்கங் காட்டலாகாது. ஆயினும், வேறெந்த வசதியுமில்லாமல் ஹரிஜனங்கள் வாழ்க்கையில் கஷ்டப்படுகிறார்களென்று திட்டமாய் அறியும்போது, தாற்காலிகமாக மட்டும் இந்த முறையில் வேலை செய்வது குற்றமாகாது.

## 3. மதுவிலக்கு

குடியினாலும் லாகிரி வஸ்துக்களினாலும் விளையும் தீமைகளை இங்கே விவரிப்பது அவசியமில்லை. இந்தக் கொடிய பழக்கங்களுக்கு இரையானவனுடைய உடல் வலிமை அழிவதோடு கூட, ஒழுக்கத்திலும் அவன் மிகவும் இழிந்து போகிறான்.

குடியினாலும் லாகிரி வஸ்துக்களினாலும் விளையும் தீமையை எடுத்துக் கூறும் புத்தகங்கள் அனேகம் இருக்கின்றன. இந்தப் பழக்கங்களில் சிக்கித் துன்புறும் சகோதரர்களிடை தொண்டு செய்ய எண்ணுவோர் இப்புத்தகங்களை வாங்கிப் படிக்கவேண்டும். ஆனால், குடித்துக் கெட்டுப் போனவர்களோடு நெருங்கிப் பழகுவதுதான் புத்தகம் படித்துத் தெரிந்துகொள்வதைவிடப் பல மடங்கு அதிகப் பயனுடையதாயிருக்கும்; நிர்மாண ஊழியர் இவ்விதம் பழகுவதைக் கடமையாய்க் கொள்ளவேண்டும். குடிகாரர்களுக்கு, தங்களோடு நெருங்கிப் பழகிக் கைதூக்கிவிடவல்ல தொண்டர்களே தேவை. குடிகாரர்களுடைய ஜீவனம், அவர்கள் வாழ்கிற சூழ்நிலை, குடும்பங்கள் படுகிற அவதி, பட்டினி, வீட்டில் எப்போதும் காண்கிற துயரம் ஆகியவற்றை வைத்து, மதுவிலக்கு ஸ்தாபனங்களும், ஊழியர்களும் மிக நன்றாய் பிரசாரம் செய்யமுடியும். நிழற் படங்களின் துணைகொண்டோ, சினிமாப் படங்களின் துணைகொண்டோ பிரசாரம் செய்யலாம். குடிகாரனுடைய உடல்நலம் குடியினால் எப்படிக் கெட்டுப்போகிறது, அவன் உடலின் ஒவ்வோரங்கமும் எப்படி வலி குன்றி வருகிறது, அவனது நரம்புக் கட்டு எப்படித் தளர்ந்து போகிறது, எப்படி மன அடக்கத்தை அவன் அடியோடு இழந்து உடல் சோர்ந்து ஒழுக்கமும் கெட்டுப் போகிறான், அவன் குடும்பம் எப்படிப் பட்டினி கிடக்க நேர்கிறது என்றெல்லாம் இப் படங்கள்

மூலம் காட்டலாம். குடிகாரன், குடியால் வரும் தீமையை உணரச் செய்யும்பொருட்டு, அவனுடைய ஜீவனத்துக்கும் குடும்ப வாழ்க்கைக்கும், குடிப் பழக்கமில்லாத மற்றொருவனுடைய ஜீவனத்துக்கும் குடும்ப வாழ்க்கைக்கும் உள்ள பேதத்தைக் கதை மூலம் சொல்லலாம், அல்லது சினிமாப் படத்தின் மூலம் காட்டலாம். குடிப்பவர்கள் குடிப்பழக்கத்தை விட்டு விலகச் செய்யும் பொருட்டு, கெடுதியில்லாத பான வகைகள் தரலாம் ; சங்கங்கள் ஏற்படுத்தி அங்கு அவர்கள் உல்லாசமாகப் பொழுதுபோக்குவதற்குக் கேளிக்கைகள் முதலிய வசதி செய்து தரலாம் ; ஓய்வு நேரத்தில் அவர்களோடு பேசிப் பழகலாம் ; இவை யாவும் கிரியாம்சையில் செய்யக்கூடியவை. இந்த வேலைக்குப் பொருள் வசதி தேவை, தக்க ஸ்தாபனங்களே இதை நன்றாய் நடத்த முடியும் என்பது வாஸ்தவம் ; எனினும், தனிப்பட்ட ஊழியர் குடிகாரர் வீடுதோறும் போய், அவர்களோடு பழகுவதன் மூலம் அவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாகிவிட்டால், அவரே அரிய சேவை செய்யமுடியும்.

## 4. கதர்

காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பி வந்த காலம் முதல், கதரானது பொதுமக்கள் கவனத்தைப் பெரிதும் கவர்ந்து வந்திருக்கிறது. கதரைப்பற்றி எழுதப்பெற்ற புத்தகங்கள் ஏராளம் ; அது சம்பந்தமாக நடந்தேறிய வேலையும் அதிகம் ; ஆகவே, கதர் எவ்வளவு அவசியமென்பதையும், அதன் சக்தி எவ்வளவு அபாரமானது என்பதையும் பற்றி நான் இங்கு விரித்துக் கூறவேண்டியதில்லை. கையால் நூற்று, கையால் நெய்யும் தொழிலுக்கும் அதனோடு சம்பந்தப்பட்ட மற்றத் தொழில்களுக்கும் புத்துயிரளிப்பதற்கான இப்போதைய இயக்கம் இந்திய வாழ்க்கையில் அடிப்படையாயுள்ள இரண்டு அம்சங்களை ஆதாரமாய்க் கொண்டது. இந்திய மக்களில் நூற்றுக்கு எண்பது பேர் பயிர்த் தொழில் செய்து வருகிறார்கள், அல்லது பயிர்த் தொழிலையே நம்பியிருக்கிறார்கள் ; ஆனால், இந்தத் தொழிலுக்காகக் குடியானவர் தம் நேரம் முழுமையும் செலவிடுவதில்லை ; ஆகவே, அவருக்கு ஓய்வு நேரம் மிகுதி. இந்த ஓய்வு நேரத்தை வேறேதேனுமொரு துணைத் தொழிலில்

உபயோகித்துக் கொள்ளலாம். கையால் நூற்றல், நெய்தல் என்ற தொழில் இதற்கேற்றதாகும் ; இது கிராமத்துக் குடியான வருக்கு வேண்டிய உடை தருகிறது. அது மட்டுமல்லாமல், அவருக்குக் கிடைக்கிற சொற்ப வருவாயையும் சற்றே அதிகமாக்க உதவுகிறது. வேறு தொழிலில் இதைப் பார்க்கிலும் அதிகமான வருவாய் பெறக்கூடியவர்கள் அந்தத் தொழிலை விட்டுவிட்டு நூல் நூற்றலை மேற்கொள்ளவேண்டுமென்று யாரும் சொல்லவில்லை, நூற்றல் ஒரு முக்கியமான துணைத்தொழிலேயொழிய, தனித் தொழிலன்று.

தமக்காகவே நூல் நூற்றுக் கதர் நெய்து கொள்வது போலவே, விற்பனைக்காகவும் கதர் தயார் செய்யலாம். விற்பனைக்குரிய கதரென்பது தாங்களே நூற்காதவர்களுக்குத்தான். இன்னும் உறுதியும் மேன்மையும் வாய்ந்த நூல் தயாரிக்கும் நோக்கத்துடன் அதற்கான கருவிகளைச் செம்மையாக்க முயற்சி நடந்துவருகிறது. இம் முயற்சியால் விளைந்த அபிவிருத்தி ஆச்சரியகரமாயிருக்கிறது. கதரில் இப்போது எத்தனையோ ரகங்கள் கிடைக்கின்றன ; இவை ஒருபுறமிருக்க, சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்குமுன் முதன்முதல் உண்டான கதர்த் துணியின் நெசவோடு இப்போதுள்ள கதர் நெசவின் நயத்தை ஒப்பிட்டுப் பார்த்தால், என்ன அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறதென்பதை யாரும் எளிதில் உணர்ந்து கொள்ளலாம். துணி விஷயத்தில் பலருக்குப் பலவிதமான விருப்பங்களிருக்கலாம் ; எவருக்கும் விருப்பமான முறையில் இப்போது துணி கிடைக்கிறது. ஆனால், மில் துணியோடு கதர்த் துணி போட்டி போடமுடியாது ; போட்டி போடுவதும் அதன் நோக்கமன்று. நாட்டுப்புற மக்களிடத்தில் அன்புடையவர்களும், இந்தியா சுதந்திரம் பெறுவதில் விருப்ப முடையவர்களும், கதர்த் துணி விலையதிகம் என்பதைக் கவனிக்காமல், வேறு துணி உபயோகிப்பதை நிறுத்தி, கதர் ஒன்றையே வாங்கி உடுத்தவேண்டும். அகில பாரத சர்க்கா சங்கமானது அனேக உற்பத்திக் கிளைகளையும் விற்பனைக் கிளைகளையும் ஏற்படுத்தி யிருக்கிறது ; நிர்மாண ஊழியரொவ்வொருவரும் தம்மை இக் கிளைகளின் வளர்ச்சிக்காக உழைப்பவரென்று கருதவேண்டும். ஒவ்வொரு குடும்பத்தையும் கதர்த்துணிதான் கடைத்தேறச் செய்து கைதூக்கிவிடவல்லது ; இந்தத் தத்துவத்தை வீடுதோறும்

எடுத்துச் சொல்லும் திறமை வரும்பொருட்டு, அவர் கதரின் பொருளாதாரத் தத்துவத்தையும், கதரின் தர்மத்தையும் நன்றாக உணர்ந்து கொள்ளவேண்டும். தாம் வாழுமிடத்தில் கதர்மீது அன்பை வளர்த்து, எங்கும் கதரே பரவும்படி அவர் செய்வாரானால் கதர் நிலையங்களுக்கு மிக்க நன்மையுண்டு ; பல நிலையங்களில் ஏராளமான துணி கையிருப்பில் தங்கிப்போய், மூலதனமெல்லாம் துணியாக முடங்கிக் கிடக்கிறது. இந்த நிலைமை அப்போது இராது.

விற்பனை சம்பந்தமாக ஓர் எச்சரிக்கை செய்யவேண்டும். நம்மவர்களில் எளியவர்களாயும் தாழ்ந்த நிலையிலும் இருப்பவர்களுக்கு வழி காட்டுவதும், கௌரவமான ஒரு வேலை செய்து நேர்மையாக வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய வருவாய் பெறும்படி செய்வதுமே இந்தக் கதரியக்கத்தின் பிரதான நோக்கமாகும். ஆகவே, உண்மையான கதர்த்துணி என்பது இந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு இது நிறைவேறத் துணை செய்வதாகும். இந்த நோக்கம் நிறைவேறும்பொருட்டு அகில பாரத சர்க்கா சங்கமானது, கூடிய சீக்கிரத்தில், நூல் நூற்பவர்களுக்கு தினம் எட்டு மணிநேரம் வேலைசெய்தால் குறைந்த பட்சம் எட்டணாக் கூலியாவது தருவது என்று அவர்கள் கேட்காமலே முடிவு செய்தது ; இந்த முடிவு பொதுவாக முதலாளிகள் சங்கங்களிலுள்ள வழக்கத்துக்கு எல்லா வகையிலும் மாறானதாகும். இந்த நோக்கம் இன்னும் கைகூடவில்லை. ஆயினும், முன்னமே ஒரு நாளைய கூலி ஓரணா என்றிருந்தது சில வருஷங்களுக்குமுன் மூன்றணாவாக்கப்பட்டது ; இதன் பயனாய்க் கதர் விலை அதிகமானபடியால் விற்பனை குறைந்து போகுமென்று ஊழியர்கள் அஞ்சினார்கள் ; உண்மையில், அப்படி விற்பனை குறையவில்லை ; எனினும், அனேகர் இன்றும் நூல் நூற்பவர்களையும் நெய்பவர்களையும் தங்கள் சொந்த லாபத்தை உத்தேசித்து ஏமாற்றி வருகிறார்கள். கதர் விற்பனை செய்யும் தனி மனிதர்களும் ஸ்தாபனங்களும், நூற்பவர்களுக்கும் நெய்பவர்களுக்கும் குறைந்த பட்சக் கூலியேனும் கொடுத்தால்தான் கதர் விற்பனைக்கான அத்தாட்சிப்பத்திரம் கொடுப்பது என்று அகில பாரத சர்க்கா சங்கம் தீர்மானித்திருக்கிறது ; இருந்தபோதிலும், அனேகர் இந்தத் தொழிலாளிகளுடைய வருந்தத்தக்க ஏழைமை

நிலையைத் தங்கள் சொந்த லாபத்துக்குப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்; இவர்களுக்கு மிகவும் சொற்பக் கூலியே கொடுத்து, கையால் நூற்று நெய்த துணி தயாரித்துச் சர்க்கா சங்க விற்பனை விகிதத்தைவிடக் குறைந்த விலையில் விற்கிறார்கள். ஆகவே, இந்த விதம் சர்க்கா சங்கத்தின் அத்தாட்சிப்பத்திரம் பெறாமல் விற்பனையாகும் கதர்த்துணியைப் பொதுமக்கள் வாங்கலாகாதென்று எல்லோரையும் எச்சரிக்கை செய்வது நிர்மாண ஊழியர்களின கடமை.

விற்பனைக்காகக் கதர் உற்பத்தி செய்வதை ஒழுங்கான முறையில் அமைத்துப் பெருக்கி வரவேண்டும்; ஆனாலும், கையால் நூற்று நெய்த துணியை உபயோகித்தால்தான் நம் கிராமங்களின் செல்வ நிலை உண்மையாகவே உயரும் என்று மக்களுக்கு உணர்த்தி எல்லோரையும் நூற்கச் செய்தால்தான் நம்மவர் அனைவரும் ஒருவர் பாக்கியில்லாமல் கதர் உடுத்துகிற நிலைமை ஏற்படும். நூற்பவரொருவர் நூற்பதில் சுமாரான திறமையுடையவராயிருந்தால் மணிக்கு 400 கெஜம் நூற்கமுடியும்; அதாவது, தினம் ஒரு மணி நேரம் நூற்றால் மாதத்தில் 12,000 கெஜம் நூற்கலாம். நூலின் தரமானது, உபயோகிக்கிற பட்டையின் நயத்தையும் நூற்பவரின் திறமையையும் பொறுத்தது. இருந்தாலும், நூற்கிற நூலின் நம்பர் சாதாரணமாக 10 முதல் 12 க்குள் இருக்குமென்று வைத்துக்கொண்டோமானால், 12,000 கெஜம் நூலுக்கும் சுமார் 4 சதுர கெஜம் கதர்த்துணி கிடைக்கும். ஆகவே, தினம் ஒரு மணி நேரம் வீதம் வருஷ முழுமையும் ஒருவர் நூற்றால் 48 சதுர கெஜம் துணிக்கு வேண்டிய நூல் நூற்றுவிடலாம். நம் நாட்டில் எல்லோரும் உபயோகிக்கிற துணி தலைக்கு வருஷமொன்றுக்குச் சராசரி 16 சதுர கெஜம்தான் தேறும். இவ்விதமாக, சாமானியத் திறமையுடையவர் நூற்றால், அவர் மூன்று பேர் துணிக்கு வேண்டிய நூல் கொடுக்கமுடியும். பயிர்த்தொழில் செய்பவர்களும், வேறு வகையில் சுகமான வாழ்க்கை நடத்துவோரென்று சொல்லப்படுபவர்களும் தினந்தோறும் நூற்பதில் ஒரு மணி நேரம் செலவிடுவது கஷ்டமான காரியமன்று. இதன் பயனாய்த் தேசத்துக்கு ஏற்படும் லாபம் மிகப் பெரியது. மில் துணி 16 கெஜத்துக்கு, குறைந்தது ரூ. 4 ஆவது கொடுக்கவேண்டியிருக்கும். (இப்போதுள்ள அகவிலை காரணமாக இத் துணி

ரூ. 12 ஆவது ஆகும்.) நம்முடைய மக்களுக்கு வருவாய் மிகமிகக் குறைவு. இவ்விதம் துணிக்காக நான்கு ரூபாயேனும் செலவு செய்யாமல் மிஞ்சுமானால், இதுவே பெரிய லாபமாகும்; மேலும், துணி விஷயத்தில் சொந்தத் தேவையைத் தாமே பூர்த்திசெய்துகொள்வதனால், மக்களிடம் நல்வாழ்க்கையும் ஒப்புரவும் வளரும். ஐந்துபேரடங்கிய குடும்பத்தில் நாள் தவறு மல் ஒரு மணி நேரம் ஒருவரேனும் நூற்பாரானால் குடும்ப முழுமைக்கும் துணி கிடைக்கும்.

நிர்மாண ஊழியர் ஒவ்வொருவரும் தம் சொந்தத் தேவைக்கு வேண்டிய துணி முழுமைக்கும் தாமே நூற்றுக்கொள்ள வேண்டும். தக்கிளியிலும், ராட்டையிலும், வில் ராட்டையிலும் அவருக்கு நன்றாய் நூற்கத் தெரியவேண்டும். பருத்தி எடுத் தல், அதைச் சுத்தம் செய்தல், அரைத்தல், பஞ்சு வெட்டுதல், பட்டை போடுதல் முதலான நூற்றல் சம்பந்தமான எல்லா வேலைகளும் அவருக்குப் பூர்த்தியாய்த் தெரிந்திருக்கவேண்டும். தாம் நூற்க உபயோகிக்கும் கருவிகளான ராட்டை, வில்ராட்டை முதலியவற்றில் ஏதேனும் பழுது நேரிட்டால் அதையெல்லாம் சரிபண்ணத் தெரியவேண்டும். தாம் உபயோகிக்கும் கருவிகள் யாவற்றையும் நன்றாக வேலைசெய்யக்கூடிய முறையில் துப்புர வாக வைத்திருக்கவேண்டும். நூற்றல் வேலையில் தமக்குள்ள நுட்பமான அறிவு, ஆர்வம், தகுதி ஆகியவற்றாலும் தாமே இடைவிடாது செய்துவரும் வேலையாலும் அவர் அனேகம் பேரை நூல் நூற்கும்படியும், கதர் அணியும்படியும் செய்யமுடியும்; எவ்வளவுதான் பிரசாரம்செய்தாலும், விவாதம்செய்தாலும், இவ்வளவு நிறைந்த பலன் ஏற்படமுடியாது. நெசவுத் தொழிலும் அவருக்கு நன்றாய்த் தெரிந்திருக்கவேண்டும். கூலிக்கு நூற்கும் வேலை பற்றிய ஏற்பாடுகளைச் சர்க்கா சங்கமே கவனித்துக்கொள்ளட்டும் என்று விட்டுவிடலாம். அவரவருக் குரிய சொந்தத் தேவை பூர்த்தியாகும் நோக்கத்துடன் நூற்ற லுக்கு வேண்டிய முயற்சிகளைச் செய்வதே அவருடைய பிரதான வேலையாகும். இந்த வேலைக்கு மூலதனம் எதுவும் தேவை இல்லை. நிர்மாண ஊழியருக்கு இதுபற்றி என்னென்ன திறமை அமையவேண்டும் என்பதை மேலே கூறினேம். இவற்றோடு கூட, தாம் அறிந்ததை மற்றவர்களுக்குக் கற்பிக்கும் திறமையும் அவருக்கு இருந்தால் போதும். எல்லா ஊழியர்களும் தமக்குக்

கிடைத்த சந்தர்ப்பங்களையும், தாம் வாழும் இடத்தின் நிலைமையையும் அனுசரித்து, ஏற்ற ஒரு வேலைத் திட்டம் தயாரிக்கலாம். ஆறு மாத காலத்தில் கதர்த் துணி சம்பந்தப்பட்டமட்டில் சொந்தத் தேவைக்கு வேண்டிய நூல் தயாரித்துக்கொள்பவர்களாயும், தம்மைப்போலவே நூற்பதில் திறமையும் ஆர்வமும் உடையவர்களாயும் உள்ள 12 பேரைத் தயார் செய்யவேண்டுமென்று அவர் உறுதி கொள்ளவேண்டும். இவ்வுறுதி இருக்குமானால் பல பேர் கதர் நூற்கவும், உடுக்கவும், பலரைத் தூண்டிவிடும் வகையில் அவர் பெருஞ் சேவைசெய்தவராவார். பருத்தி வளராத கிராமமோ, பணம் கொடுத்து வாங்க முடியாத கிராமமோ ஒன்றுகூட இல்லை. தனிப்பட்ட விவசாயி ஒவ்வொருவரும் தமது சொந்தத் தேவைக்கு வேண்டிய அளவாவது பருத்தி தயாரிக்கும்படி தூண்டவேண்டும். நம் நாட்டில் எல்லா இடங்களிலும் வேலை கிடைக்காமல் நெசவாளர் அவதிப்படுகிறார்கள். இந்த நிலைமையையெல்லாம் நிர்மாண ஊழியர் பயன்படுத்திக்கொண்டு தம் வேலையைச் சாதிக்கமுடியும். கிராம வாழ்க்கை இன்று அளிக்கிற தோற்றத்தை நாம் அடியோடு மாற்றியமைக்க வேண்டுமானால், கதர்த் தொழிலில் உண்மையான நம்பிக்கையும், ஆர்வமும், அறிவும், திறமையுமே தேவை.

## 5. கிராமக் கைத்தொழில்கள்

கிராமத் தொழில்கள் எல்லாவற்றிலும் தலைசிறந்தது பயிர்த் தொழில் என்பது வெளிப்படை; பயிர்த் தொழிலே நம் உணவுக்கு வேண்டிய பொருள்கள் எல்லாவற்றையும் கொடுக்கிறது ; துணி நெய்வதற்கு மூலப்பொருளான பருத்தியும் தருகிறது. கைத்தொழில் என்னும்போது, இங்கே பயிர்த் தொழில் போன்ற பெருந் தொழிலை நாம் சொல்லவில்லை. கையால் பல வகைப் பொருள்களைச் செய்வதாகிய கைத் தொழிலையே குறிப்பிடுகிறோம். இன்று கிராமங்கள் பெரிதும் சீர்கெட்டுவிட்டன ; பயிர்த் தொழிலில்கூட நம் மக்களுக்குச் சிரத்தையும் இல்லை ; இத் தொழில் லாபகரமாகவும் இல்லாது போகிறது ; இவற்றுக்கெல்லாம் காரணம் கைத் தொழில்கள் நசித்துப்போனதேயாகும். பயிர்த் தொழில் செய்யும் விவசாயி

ஆறு மாதத்துக்கும் அதிகமாகவே சோம்பேறியாகத்தான் காலம் கழிக்கிறான்; பயிர்த் தொழில் எப்படி லாபம் தரும்?

மேலே கதர் என்ற அங்கத்தில், விவசாயிக்குள்ள ஓய்வு நேரத்தில் எப்படி அவர் நூல் நூற்றுக் கதர் நெய்வது பயனுடையதாகும் என்று பார்த்தோம். கிராமங்களுக்கே உரிய கைத்தொழில்களை மீண்டும் தலையெடுக்கச்செய்து அவற்றை நன்றாய்ப் போற்றி வந்தால், கிராமங்கள் தங்கள் தேவைகளைத் தாங்களே பூர்த்தி செய்துகொள்ளும். இந்த நோக்கம் நிறைவேறும்பொருட்டு, காந்தியடிகள் அகில இந்திய கிராமக் கைத்தொழிற் சங்கத்தை ஏற்படுத்தினார். இந்தச் சங்கத்தின் பிரதான நோக்கம் எப்படி நிறைவேறும் என்பதையும் கிராமக் கைத்தொழில்களைத் தலையெடுக்கச் செய்வதனால் நாட்டுப்புற மக்களின் உடல்வலிமையும், பொருள் வசதியும், நல்லொழுக்கமும் எப்படி மேம்படும் என்பதையும் இனி ஆராய்வோம்.

தானியங்கள் எல்லாம் வயலில் விளைகின்றன. கோதுமையை அரைத்து மாவாக்கவேண்டியிருக்கிறது. நெல்லைக் குற்றி உமி நீக்கி அரிசியாக்கவேண்டியிருக்கிறது. பயறு முதலிய தவசங்களை உடைத்துத் தோல் போக்கவேண்டியிருக்கிறது. முற்காலத்தில் நாட்டுப்புறங்களில் மக்கள் இந்த வேலைகளைத் தங்கள் தங்கள் வீட்டிலேயே செய்துவந்தார்கள். ஆனால் இப்போதோ, பழைய காலத்து உரலுக்கும் இயந்திரத்துக்கும் பதிலாக, நெல் அரைக்கும் மில்லுகளும், மாவரைக்கும் மில்லுகளும் ஏராளமாய் ஏற்பட்டுவிட்டன. இவற்றால் எங்குப் பார்த்தாலும் வேலை இல்லாத் திண்டாட்டம் பெருகியிருக்கிறது. மேலும், இதனால் உணவிலுள்ள வைட்டமின் என்று சொல்லுகிற உயிர்ச் சத்து எல்லாம் குறைந்து, நம்முடைய உடல்நலமும் சீர் கெட்டுவிட்டது. எண்ணெய் விஷயத்திலும் இதுவே உண்மை.

நம் உணவில் எண்ணெயும் முக்கியமானது. ஆகவே, எண்ணெயிலுள்ள வைட்டமின் குறைந்துபோகும்படி விடக்கூடாது.

இதுபோலவே நம் தினசரி உணவில் சர்க்கரையும் ஓர் முக்கியமான அம்சம். கரும்பு பயிரிடுவது எளிது; அனாதி காலமாக நம் கிராமங்களிலிருந்த *கரும்பாலைகளிலிருந்து மக்களுக்கு வேண்டிய சர்க்கரை முழுமையும் கிடைத்துவந்தது. ஆனால் இக்காலத்தில் இதற்கும் மில்லுகள் ஏற்பட்டுவிட்டன.

---

*கரும்பாலையைக் கம்பர் 'கருப்பேந்திரம்' என்று குறிப்பிடுகிறார்.

வேறொரு வகையிலும் நமக்கு எளிதில் செமிக்கத்தக்க சர்க்கரை கிடைத்துவந்தது. அதுவே, தேனீக்கள் சேகரித்து வைக்கும் தேன். ஒரு கஷ்டமும் இல்லாமல், ஒரு வித உழைப்பு மில்லாமல்கூட தேனீ வளர்க்கலாம்.

காய்கறிகளும், பழங்களும் நம் உணவில் முக்கியமான பகுதியாகும். இவற்றையும் கிராமங்களில் எளிதில் பயிரிட்டுக கொள்ளலாம், கிராமங்களில்தான் பயிரிடவேண்டும்.

கடைசியாகக் குறிப்பிடத்தக்கவை, பாலும் அதிலிருந்து கிடைக்கும் நெய் முதலான பொருள்களும். இதுபற்றி, ஆடு மாடுகளை நன்றாய்ப் பேணி உயர்ந்த ரகமாக வைத்துவரும் முறையும் பால், வெண்ணெய், நெய் முதலியவற்றைக்குறித்த தொழில் முறையும் நன்றாய்த் தெரியவேண்டும். பின் வரும் விஷயங்களைச் சிறப்பாய்க் கவனிக்கவேண்டும் :

1. நெல், பயறு முதலான தானிய தவசங்கள், பருத்தி, கரும்பு முதலியவற்றைச் சாகுபடி செய்யும் முறைகளை அபி விருத்தி செய்தல்.

2. நெல் குற்றவும், பயறு முதலியவற்றை உடைக்கவும், அரைக்கவும், பழங்காலத்து உரல், இயந்திரம் (திரிகை) முதலியவை மீண்டும் தலைஎடுக்கச் செய்தல்.

3. எண்ணெய் விதைகளிலிருந்து எண்ணெய் ஆட்டு வதற்குச் செக்கை உபயோகத்துக்குக் கொண்டுவருதல்.

4. கரும்பிலிருந்து சாறு பிழிவதற்கான பழைய ஆலையை யும் வெல்லம் காய்ச்சும் பழைய முறையையும் மீண்டும் வழக்கத்துக்குக் கொண்டுவருதல்.

5. தேனீ வளர்க்கும் தொழிலை அறிவியல் ரீதியாக அபிவிருத்தி செய்தல்.

6. ஆடுமாடுகளை வளர்த்துப் பெருக்குவதற்கும் பால் முதலியவற்றைப் பெருக்குவதற்கும் அறிவியல் முறைகளை மேற் கொள்ளுதல்.

7. காய்கறி உற்பத்தி, பழ உற்பத்தியைப் பெருக்குதல்.

8. குப்பையையும், கழிவையும் செல்வமாக்குதல். இதற்கு உதாரணமாக நல்ல எருத் தயாரிப்பதைக் குறிப்பிடலாம். மலம், சாணம் முதலியன, காய், பழம் முதலியவற்றின் தோல்,

உணவில் வீணாய்ப்போகும் பகுதி, தழை, சாம்பல், செத்த பிராணிகளின் உடல், எலும்பு முதலான பல வஸ்துக்கள் இதற்கு மிகவும் பயன்படும்.

9. பயிர்த் தொழிலுக்கு உபயோகிக்கும் கலப்பை முதலான எல்லாக் கருவிகளையும் அபிவிருத்தி செய்து அவற்றைக் கிராமங்களிலேயே பெருவாரியாகத் தயாரித்தல்.

உணவுக்கும், உடைக்கும் அடுத்தபடியாக நாம் கவனிக்கத் தக்கது இருப்பிடம். சிலசமயம் வாழ்க்கையின் சௌகரியத்தை உத்தேசித்து உணவையும் உடையையும் விட இருப்பிடத்தையே முக்கியமென்று பலர் கருதுகிறார்கள். ஆனால், நம் வீடுகள் யாவும் கிராமத்தில் கிடைக்கும் பொருள்களை வைத்து, கிராமத்தில் கிடைக்கும் தொழிலாளரைக் கொண்டே கட்டி முடிக்க வேண்டும். கூடியவரையில் இப்படிச் செய்தால்தான் கிராமத்தின் செல்வநிலை சீர் கெடாமலிருக்கும். இயற்கையிலேயே ஒரு விதச் சிக்கனம் இருக்கிறது. இதை இந்த நவ நாகரிகக் காலம் மறந்துவிடுகிறது. பூமியில் மண்ணுக்குக் கீழே அமைந்துள்ள மண்படைகளில், நிலக்கரியோ மண்ணெண்ணெயோ இரும்புத் தாதுவோ வேறெந்த உலோகமோ அல்லது சுரங்கப் பொருளோ ஆழத்தில் ஏதேனும் ஒரு படை ஏற்படுவதற்கு லட்சக் கணக்கான வருஷங்கள் ஆகுமென்று தரைநூல் வல்லார் கூறுகிறார்கள். மண்ணிலிருந்து நிலக்கரியும் பலவகை உலோகங்களும் மண்ணெண்ணெயும் கணக்கில்லாமல் இன்று எடுத்துக் கொள்ளுகிறோம். ஆனால் மண்ணில் இவை மீண்டும் எப்படி உற்பத்தியாகும் என்பதுபற்றி நாம் சிறிதும் யோசிப்பதேயில்லை. பிரகிருதி இவ்விஷயத்தில் மிகவும் செட்டாய்த்தான் இருக்கிறது. ஆனால் நாமோ, பிரகிருதியின் காரியத்தில் அனாவசியமாய்த் தலையிடுகிறோம்; விஞ்ஞான நூலறிவு நமக்கு ஏற்பட்டுவிட்டதென்ற அகம்பாவத்தால், இயற்கையின் சரக்கறையைக் காலி செய்கிறோமே என்பது பற்றிச் சிந்திப்பதேயில்லை. உலகெங்குமே இன்று மண்ணிலிருந்து கிடைக்கிற எண்ணெய், கரி, உலோகம் ஆகியவற்றை நாம் ஊதாரித்தனமாய் உபயோகிக்கிறோம்; இப்படியே உபயோகித்து வருவோமானால், எவ்வளவு சீக்கிரத்தில் இயற்கையின் சரக்கறை தீர்ந்துபோகும் என்பதுபற்றித் தூரதிருஷ்டியுள்ள அறிஞர்கள் இப்போதே கணக்குப் போட

ஆரம்பித்துவிட்டார்கள். ஆனல், இந்தப் பிரசினையை ஆலைத் தொழிலுக்கு அடிமையாகிவிட்ட நாடுகளே முக்கியமாய்க் கவனிக்கவேண்டியவை. நம் கிராமப் பொருளாதார அமைப்பானது எந்தெந்த வஸ்துக்களை நாம் உபயோகிக்கிரும் என்பதைப் பொறுத்தது. உதாரணமாக, நாட்டுப்புற மக்கள் உபயோகிக்கும் விறகைப் பார்க்கலாம். மரமட்டைகளையும் துவரை வளார்களையும் நாம் அடுப்பெரிக்க உபயோகிக்கிரும். எனவே, நமக்குக் கிடைக்கும் விறகில் ஒருபோதும் தட்டு ஏற்படாது.

இதுபோலவே, வீடு கட்டும்போதும், நாம் உபயோகிக்கிற வஸ்துக்களில் எந்தெந்த வஸ்துக்கள் செலவழிந்து போனலும், மீண்டும் புதிதாய் எளிதில் உண்டாக்க முடியுமோ அத்தகைய வஸ்துக்களையே உபயோகிக்கவேண்டும். இந்த முறையில் கவனித்தால், காளவாயில் செங்கல்லும் ஓடும் சுடும்போது நிலக்கரி உபயோகிப்பது சரியன்று ; நிலக்கரியில்லாமலே இவற்றைச் சுட்டுக்கொள்ளவேண்டும். நிலை, சாத்து, கதவு, சரம், விட்டம், உத்தரம் முதலியவற்றுக்கு உபயோகிக்க நமக்கு மரங்கள் அளவில்லாமல் கிடைக்கின்றன. இரும்பு முதலியவற்றை உபயோகிப்பதாயிருந்தால், மிகவும் குறைந்த அளவுதான் உபயோகிக்கலாம். அதிகச் செலவில்லாமல் சௌகரியமாய் வாழ்வதற்கான வீடு கட்டிக்கொள்ளமுடியும். ஒருண்மையை இங்கு ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். உலகத்திலே மிக்க உன்னதமான கட்டிடங்களையும் காலத்தால் சிறிதும் கலங்காது நிற்கும் கட்டிடங்களையும் இப்படி எளிதில் கிடைக்கக்கூடிய வஸ்துக்களைக் கொண்டுதான் கட்டியிருக்கிருர்கள். நிலக்கரியோ சிமிட்டியோ எஃகோ உபயோகத்துக்கு வருமுன்னமேயே இவை எழுந்துள்ளன.

தினசரி உபயோகத்துக்கான இந்த வஸ்துக்கள் மிகவும் முக்கியமானவை, இன்றியமையாதவை. இவை போலவே அவசரமாய் மக்கள் வாழ்க்கைக்கு வேண்டிய வஸ்துக்கள் இன்னும் அனேகம் உள்ளன. ஊசி முதல் மோட்டார்கார், ரயில் வண்டி அல்லது கப்பல்வரையில், பேனு, மைக்கூடு, முதல் பெரிய அச்சகம்வரையில், கைவிளக்கு முதல் மின்சாரம்வரையில், இவை எத்தனையோ வகை. நம்முடைய தேவைகளிலே எவை வேண்டும் என்று அறிவோடு முடிவு செய்யவேண்டும் ; நாட்டுப்

புறங்களில் எவற்றை மிக நன்ருகவும் எளிதாகவும் அதிக அளவிலும் தயாரிக்க முடியுமென்று கவனிக்கவேண்டும். நாட்டுப்புறத்திலுள்ள தொழில் வினைஞர் எளிதில் செய்யக்கூடிய வஸ்துக்கள் நூற்றுக்கணக்கானவை உள்ளன. சிற்சில இடங்களில் சாமான் செய்வதற்கான மரம் முதலான மூலப் பொருள்கள் எளிதில் கிடைக்கும்; சிற்சில இடங்களில், குறிப்பிட்ட சில வஸ்துக்களை நெடுங்காலமாய்ச் செய்துவந்த கைத்திறமை பொருந்தியிருக்கும்; சீதோஷ்ணஸ்திதி முதலான பல காரணங்களை உத்தேசித்து அந்தந்த வஸ்துக்களை அந்தந்த இடத்தில் செய்வதே சௌகரியமாயுமிருக்கும். இவற்றையெல்லாம் நாம் தேடிக் கண்டு, இவ்விதக் கைத்தொழில்களுக்கு மிக்க ஆதரவு தரவேண்டும். உதாரணமாக, காகிதத்தொழிலையும் தோல் தொழிலையும் பார்க்கலாம். இந்த இரண்டு தொழில்களுக்கும் வேண்டிய மூலப்பொருள்களும் தொழிலாளிகளும் எல்லாக் கிராமங்களிலும் கிடைக்கிருர்கள். விழிப்பாயிருந்து நிலைமையை ஆய்ந்துசெய்யும் வினைத்திட்பந்தான் வேண்டும்; எல்லாவற்றையும்விட, அளவற்ற இயற்கைவளமும், மிகுதியான ஜனத்தொகையும், அதில் பெரும்பகுதி வேலையில்லாதவர்களாயும் பெற்றுள்ள நமது நாட்டில், எல்லோருக்கும் நிச்சயம் வேலைதர முடியும், வேலைகிடைக்கத்தான் வேண்டும் என்ற உறுதியான எண்ணமே இன்று தேவை. நமக்கு வேண்டிய சில காரியங்களைச் செய்வதற்கு, சில சமயம் ஆலைத்தொழில் முறை அவசியமானலும் ஆகலாம். ஆனல், நம் கிராமவாழ்க்கையும் கிராமப்பண்பும் கிராமக்கலையும் அழிந்துபோனதற்குக் காரணம் நம் கிராமக் கைத்தொழில்கள் பெரும்பான்மையும் நசித்துப்போனமைதான் என்பதை உணரவேண்டும். கிராம இந்தியாவுக்குப் புது வாழ்வு வரவேண்டுமானல், அக் கைத்தொழில்களுக்குப் புத்துயிர் அளிக்கவேண்டும். ஆகவே, காந்தியடிகள் கவிநயம் பொருந்த வருணித்துள்ளபடி, கதர்தான் நமது சூரியன்; இதைச்சுற்றியே மற்றக் கிராமக் கைத்தொழில்கள் என்று சொல்லத்தக்க கிரகங்கள் உலவுகின்றன. எனவே, கிராமங்களுக்குச் சேவை செய்ய எண்ணுவோர் அனைவரும் கூடிய வரையில் கிராமத்தில் செய்த பொருள்களையே உபயோகிக்க வேண்டும்; வேறு எவற்றையும் உபயோகித்தலாகாது.

## 6. துப்புரவு

கிராமத்துக்கு இன்று அவசியமாய் வேண்டிய பல அம்சங் களில், துப்புரவும் முக்கியமானது. எல்லோரும் இதை ஒப்புக் கொள்வார்கள். தங்கள் உடம்பையும், தாங்கள் வாழுமிடங்களே யும், தங்களைச் சுற்றியுள்ள இடத்தையும் சுத்தமாகவும் துப்புர வாகவும் வைத்துக்கொள்வது எப்படி என்று மக்களுக்குக் கொஞ்சமும் தெரிவதில்லை ; இதுபற்றி அவர்கள் கவலைப்படுவது மில்லை. இதன் பயனாக, அற்பநோய்களும் கொள்ளை நோய்க ளும் உண்டாகின்றன, பரவுகின்றன ; மக்களுடைய உடல் நலமும் வரவரச் சீர்கெட்டுப்போகிறது. " குப்பை இருந்தால் லக்ஷ்மி தங்கமாட்டாள் " என்றும், " சுத்தம் சோறுபோடும் " என்றும் நம்மிடையே பழமொழிகள் வழங்குகின்றன. இவற் றில் நிறைந்த பொருள் இருக்கிறது. இந்த லௌகிக விஷயங் களில்மட்டுமன்றி, ஒழுக்க நெறியிலும் ஆன்ம நெறியிலுங்கூட, இப் பழமொழிகள் உண்மையாகும்.

நிர்மாண ஊழியர் ஒவ்வொருவரும் துப்புரவான பழக்க வழக்கங்கள் உடையவராயிருக்கவேண்டும். அவருடைய உடம் பில் ஒவ்வொரு பகுதியும் சுத்தமாயிருத்தல் வேண்டும். அவ ருடைய துணிமணிகள் கொஞ்சமும் அழுக்கில்லாமல், அழகாக வைத்திருக்கவேண்டும்.

குப்பையென்பது, தனக்குரியதல்லாத இடத்தில் வந்து சேர்ந் துள்ள பொருள் என்று சொல்வதுண்டு ; இது மிகவும் பொருத்த மானதே. எந்தச் சாமானையும் எந்த இடத்திலும் போட்டுவைப் பது, வீட்டினுள்ளோ தாழ்வாரத்திலோ வீடுத்தோட்டத்திலோ அல்லது தெருவிலோ எச்சில் துப்புவது, மூக்கைச் சிந்துவது, வீட்டோரம் அல்லது சாக்கடைகளில், பொதுவான தெருக்களில் அல்லது நடைபாதைகளில், அல்லது ஆற்றங்கரை, குளக்கரை யோரத்தில் மலஜலம் கழிப்பது, கழித்ததை மண்போட்டு மூடா மல் திறந்தபடியே விட்டுப்போவது முதலானவை மிகவும் கெட்ட பழக்கங்கள் ; இவற்றை விட்டொழிக்கவேண்டும். இவற்றால் அயலில் வாழ்பவர்களுக்குப் பெருந்தொந்தரவு விளைவது தவிர, நோய்கள் உண்டாவதற்கும் இவை பிரதான காரணங்களாகும். மலம் முதலியவற்றைச் சரியானபடி பக்குவப்படுத்திச் சேமிக்க

வேண்டும். சேமிப்பதனல் இவை சிறந்த எருவாகும். மேற் சொன்னபடி விட்டுவிடுவதனுல் ஏராளமான செல்வம் நஷ்ட மாகிறதென்றுதான் சொல்லவேண்டும்.

துப்புரவில்லாமல் வாழ்வதாலும் சுகாதாரத்துக் கேதுவான பழக்கவழக்கங்கள் இல்லாமையாலும் என்ன அபாயம் விளைகிற தென்பதையும் இந்த வாழ்க்கையும் பழக்க வழக்கங்களும் எவ் வளவு அருவருப்பானவை என்பதையும், நாட்டுப்புற மக்கள் தங்கள் அறிவை உபயோகித்து உணரும்படி செய்யவேண்டும் ; செய்தால், கிராம சுகாதாரத்தை எளிதாக மிகவும் மேம்படச் செய்யலாம்.

இதபற்றிப் பின்வரும் முறைகளை மேற்கொள்ளலாம் :

(1) கிராமத்துக்குச் செல்லும் சாலையையும் கிராமத்து வீதி களையும் நாள்தோறும் பெருக்கிச் சுத்தம் செய்யவேண்டும். குப்பை எதையும் தெருவிலோ சாலையிலோ எறியக்கூடாது. குப்பையை அதற்கென்று ஏற்பட்டுள்ள குப்பைத்தொட்டியில் தான் போடவேண்டும் ; தொட்டி நிறைந்ததும் குப்பையைக் கொண்டுபோய் எருக்குழியில் கொட்டிவிடலாம். பொதுமக்கள் நடமாடும் இடங்களில் யாரும், சிறுகுழந்தைகள் உள்பட மல ஜலம் கழித்தலாகாது. சாக்கடை நீரைத் தெருவில் விடலாகாது. இதைக் காய்கறித்தோட்டம், வாழைத்தோட்டம் முதலியவற் றில் பாயும்படி விடலாம்.

(2) வயல்களில் மலஜலம் கழிப்பது வழக்கமாயிருந்தால், கழித்தவுடனே சுத்தமான மண்ணைப்போட்டு மலஜலத்தை மூடி விடவேண்டும். இதைவிட நல்ல முறை சுலபத்தில் நகர்த்தக் கூடிய சிறு சக்கூசு கட்டிக்கொள்ளுதல். நான்கு மூலையில் நான்கு மூங்கில் அல்லது சவுக்குக்கழிகளை நிறுத்திச் சுற்றிலும் மூங்கில் தட்டியால் அல்லது தென்னங்கீற்றுல் நாற்புறமும் மூடித் தரையில் ஓரடி அல்லது இரண்டடி ஆழமும் ஓரடி அகல மும் உள்ள நீண்ட வாய்க்கால் தோண்டி அதன்மேல் அந்தக் கக்கூசைத் தூக்கி வைத்துவிடலாம். வாய்க்கால் பள்ளத்தில் மலம் விழுந்தவுடனே சுத்தமான மண்ணைப்போட்டு அதை மூடி விடவேண்டும். காலக்கிரமத்தில் அது மண்ணோடு கலந்து மட்கிப் போய் எருவாகிறது. பொதுமக்களுக்கு அருவருப்பாயிருந்து இன்று வீணாய்ப்போகிற இந்த வஸ்து எளிதில் ஏழை விவசாயிக் கேற்ற சிறந்த எருவாகிவிடும்.

(3) இதைப்போலவே மாட்டுச்சாணம், பிற குப்பை, காய்கறித் தோல், பழத்தோல் முதலியவற்றையும் எளிதாய் எருவாக் கலாம்.

(4) ஜலாதாரங்களாயுள்ள குளம் கிணறு முதலியனவ களேயும் ஆற்றங்கரைகளேயும் சுத்தமாயிருக்கும்படி கண்டிப் பாய் பார்க்கவேண்டும். குடிக்கவும் சமையல் செய்யவும் நீரெடுக்கிற குளங்களில் ஆடு மாடு குளிப்பாட்டுகிருர்கள், அழுக்குப் பாத்திரம் தேய்க்கிருர்கள், அழுக்குத் துணி துவைக் கிருர்கள். இதுபோலவே கெட்ட பழக்கங்களாலும், அறியாமை யால் வந்த அஜாக்கிரதையாலும், கிணற்று நீரையும், ஆற்று நீரையும் அசுத்தப்படுத்தும் வழக்கம் இருக்கிறது. இது சம்பந்தமாக நாட்டுப்புற மக்களுக்கு அறிவு புகட்டவேண்டும்.

(5) கிராமத்தின் ஆரோக்கியமென்பது தனிப்பட்ட ஒவ்வொரு வருடைய ஆரோக்கியத்தையும் பொறுத்திருக்கிறது. அசுத்த மான பழக்க வழக்கங்களுள்ளவர் ஒருவர் இருந்தாலும் அவர் மற்றெல்லோருக்கும் ஆபத்து விளேவிப்பவராகிருர். இதை நன்ருய் ஞாபகத்தில் வைக்கவேண்டும். இளேஞரான ஆடவரும் பெண்டிரும் சுகாதாரம்பற்றி நாட்டுப்புற மக்களுக்கு நல்லறிவு புகட்டுவதற்கு எற்ற தொண்டர் குழாமாகக் கூடவேண்டும். ஊழியர் தாங்களே தோட்டி வேலே செய்து காட்டவேண்டும். தாம் ஒரு வேலேயைச் செய்து காட்டுவதே பிரசாரத்துக்கு மிகவும் சிறந்த வழியாகும்.

## 7. ஆதாரக் கல்வி

சிறப்பாக இந்தியக் கிராம வாழ்க்கைக்குப் பொருத்தமா யிருக்கும்படி காந்தியடிகள் நமக்கு வகுத்துத் தந்தது ஆதாரக் கல்வி முறையாகும். இன்றைய எழுத்துப் படிப்பு முறையால் எவ்விதப் பயனுமில்லே. இந்த முறையிலிருந்து நீங்கி ஒவ்வொரு குழந்தைக்கும் எதேனும் ஒரு தொழில் மூலமாக அறிவைப் புகட்டுவதே இப்புதிய கல்வி முறையாகும். குழந் தையினிடம் புதியது படைப்பதற்கான திறன் இயற்கையாகவே இருக்கிறது. இத்திறமையைச் சிறந்த முறையில் பயன்படுத் திக்கொள்வது இக்கல்வி முறையின் நோக்கம். இந்த முறை

யானது அவனுடைய அறிவுக்குப் பயிற்சி தருவதுடன்கூட அவனுடைய கண் முதலான ஞானேந்திரியங்களையும், கை முதலான கர்மேந்திரியங்களையும் செம்மையாக உபயோகிக்கப் பயிற்சி தருகிறது. குழந்தைகளிடத்தில் அன்புடையவர்களும் குறித்த தொழிலில் நிபுணர்களுமான ஆசிரியர்கள் கிடைத்து அவர்கள் சரியான முறையில் இக்கல்வித் திட்டத்தை நடத்துவார்களானுல், குழந்தையின் உடல் வளர்ச்சியும் மனவளர்ச்சியும் நம் இன்றைய பாடசாலைகளில் ஏற்படும் வளர்ச்சியைவிடப் பலமடங்கு மேலாயிருக்கக் காண்போம். அறிவோடு இந்தக் கல்வித் திட்டத்தை நடத்திவந்தால் இது தனக்காகும் செலவைத் தானே வகித்துக்கொள்ளும் என்பது காந்தியடிகளின் கருத்து. பாடசாலையில் பிள்ளைகள் உற்பத்திசெய்யும் பொருள்களை அக்கம் பக்கத்தில் விற்கமுடியும் ; அல்லது அரசாங்கமே அவற்றை விற்பனை செய்யலாம். சரியானபடி அவற்றைச் செலவழிக்க ஏற்பாடு செய்வது அரசாங்கத்தின் கடமையாகும். ஆரம்பக் கல்வியை விரிவாய்ப் பரப்புவதற்கு இன்றுள்ள பெரிய தடை, அதற்காகச் செலவு செய்வதற்குப் போதிய பணவசதியில்லை என்பதாகும். சமாளிக்கமுடியாத இந்தப் பெரிய தடையானது மேற்சொன்ன முறையால், அதாவது இப்புதிய கல்வித் திட்டம் கல்விக்கான செலவைத் தானே வகித்துக்கொள்ள வல்லதாயிருப்பதால், நீங்கிவிடுகிறது. தொடக்கத்தில் கிராமத்துக்குப் பெரிதும் ஏற்ற கைத்தொழிலாக நூல் நூற்றலைத்தான் கொண்டிருக்கிருர்கள் ; மேலும், சாஸ்திர ரீதியாக மற்றத் தொழில்களில் கிடைத்துள்ள அறிவைவிட இத்தொழிலில் அதிக அறிவும் செயல் நுட்பமும் கைவந்துள்ளன. ஆனுல், செய்யக்கூடிய தொழில் இது ஒன்றுதானென்பதில்லை. இவ்விதக் கல்வி முறையில் ஆர்வமுள்ளவர்கள் ஹிந்துஸ்தானி தாலிமி சங்கத்தார் இது சம்பந்தமாக வெளியிட்டுள்ள அறிக்கைகளையும் புத்தகங்களையும் படித்தறியவேண்டும். சங்கத்தாருக்கு எத்தனையோ தடைகளும் கஷ்டங்களும் இருக்கின்றன : இருந்தும், சமீபத்தில் அவர்கள் வெளியிட்டுள்ள அறிக்கையிலிருந்து அவர்களால் எவ்வளவு சாதிக்கமுடிந்ததென்று அறியும்போது இது மிக்க ஊக்கமளிப்பதாய் இருக்கிறது. தொழில் செய்வது மூலமாய்க் கல்வி பயிற்றுவதும் அறிவு ஊட்டுவதுமான முறைதான் மிகவும் மேலானதென்று உலகெங்குமுள்ள கல்வி நிபுணர்கள் கண்

டிருக்கிருர்கள் ; இந்தியாவைப் பொறுத்தவரையில் இந்தக் கருத்துக்குச் சிறப்பான பொருள் உண்டு. இந்தத் திட்டத்தை நடத்தி வெற்றிபெறுதல் மிகவும் அவசியம். இதற்குத் தகுந்த பயிற்சியும் உற்சாகமும் பொருந்திய ஆசிரியர்கள்—ஆடவரும் பெண்டிரும்—பலர் தேவை.

## 8. வயதுவந்தோர் கல்வி

இந்திய மக்கள் தொகையில் நூற்றுக்கு எழு அல்லது எட்டுப் பேர்தான் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் ; இது பெரிதும் வருந்தத்தக்க நிலைமை. தவிர, வெறும் எழுத்துப் படிப்பு கல்வி யாகாது. எனவே, நூற்றுக்கு 95 பேர் கல்வியற்றவர்கள் என்று தான் சொல்லவேண்டும். ஆனல், எழுத்துப் படிப்பு இல்லாதவர்கள்கூட, சிறந்த நாகரிகப் பண்புள்ளவர்களாயிருக்கலாம் ; எனினும், எழுதவும் படிக்கவும் அறிவது ஒருவர் அறிவை வளர்த்துப் பிறருடைய அறிவையும் அவர் தெரிந்து பயன்பெற உதவுகிறதென்பது வெளிப்படை. வயது வந்தோர் கல்வி என்பது எண்ணும் எழுத்தும் கற்பிப்பதோடு மட்டும் நின்றுவிடாது. வாழ்க்கையில் பயனுள்ள முக்கியமான பொது விஷயங்கள் பலவற்றையும் கற்பிக்கவேண்டும்.

நிர்மாண ஊழியர் ஒவ்வொருவரும் தாம் வாழுமிடத்தைச் சுற்றியுள்ள மக்கள் அனைவரிடையும் படிப்பின்மையைப் போக்கி எழுத்தறிவு உண்டாக்கவேண்டும். வயதுவந்தோருக்குக் கல்வி பயிற்றுவதற்குத் தகுந்த நேரம் மாலைநேரந்தான். ஆகவே, இதற்கு விளக்கு வசதி தேவை. புத்தகங்கள் அவசியமில்லை. ஒரு சிறு பலகையிலோ மண் சுவரிலோ, முன் காலத்தைப்போல, நன்ருய்க் கரியைப் பூசிக் கரும்பலகையாக உபயோகிக்கலாம். இதுவும் ஒரு சிறு சாக்கட்டியும் இருந்தால் எழுத்துப் படிப்புக் கற்பிப்பதற்குப் போதுமானது ; வெகு சீக்கிரத்தில் எழுத்தறிவு வந்துவிடும். இதற்கென்று பயனுள்ள படங்கள் முதலியன தயாரித்து விற்கிருர்கள். அவசியமானல் சொற்ப விலைக்கு அவற்றை வாங்கிக்கொள்ளலாம். ஆனல் அவை முக்கியமல்ல. ஊழியரிடத்தில் ஆர்வமும் ஊக்கமும் இருப்பதே முக்கியமானது. கல்வி பயில்வதில் கூட்டு முயற்சி

மிகவும் பயனுடையது. சில பேர் படிக்கவும் எழுதவும் கற்றுவிட்டார்களானல் சிறு புத்தகசாலையொன்று அமைக்கலாம்; மெல்ல மெல்ல, தகுந்த புத்தகங்களை இதில் சேர்த்து ஒரு தினசரிப் பத்திரிகையும் தருவிக்கலாம்.

வாய்மொழி மூலமாக மக்களுக்கு எவ்வளவோ பொது அறிவு ஊட்டமுடியும். முற்காலத்தில் ஹிந்துக்கள் தங்கள் புராணங்களையும் சாஸ்திரங்களையும் வாய்மொழி மூலமாகவே தான் பாராயணம் செய்துவந்தார்கள்; முஸ்லிம்களும் தங்கள் வேதமான மிலாத் ஷெரீப் என்ற புத்தகத்தை வாய்மொழி மூலமாகத்தான் பாராயணம் செய்தார்கள். இது மிகவும் பயனுள்ள வழி. கதா காலட்சேபங்கள், பஜனை, மிலாத் என்பவை மூலமாக நம்மக்கள் தங்கள் சமய அறிவு பெறுகிருர்கள். சரித்திரம், விஞ்ஞான சாஸ்திரம், உலக விவகாரம் முதலியவை பற்றி அவசியமாகத் தெரியவேண்டியதெல்லாம், வாய்மொழியாகவும் சொல்லலாம்; ஒருவர் படித்து அனேகர் கேட்டும் தெரிந்து கொள்ளலாம். ஆனல், இது சம்பந்தமாக ஊழியர்கள் மற்றவர்களுக்கு அறிவு புகட்ட முற்படுமுன் தாங்கள் திட்டமான அறிவு பெற்றிருக்க வேண்டும். நம்மக்களிடையில் பிரஜாவுணர்ச்சி அல்லது குடிமைப் பண்பு ஓங்குவதற்கும், கூட்டாகப் பொதுவேலையில் ஈடுபடும் பண்பு ஏற்படுவதற்கும், வயதுவந்தோருக்குக் கல்வி பயிற்றும் வேலை அரிய சந்தர்ப்பம் அளிக்கிறது. பிரஜாவுணர்ச்சியும் கூட்டுச் சமூகப் பண்பும், கிராமப் புனரமைப்பில் மிகவும் முக்கியமான அம்சங்களாகும்.

## 9. பெண்ணுரிமை

பெண்ணென்ருலே சக்தி, அதாவது எல்லா விதமான ஆற்றலும் பிறக்கு மிடம், ஆற்றலுக்கு ஆதாரம் என்பது ஹிந்துக்களுடைய பழைய சம்பிரதாயம். ‘மனிதருடைய பண்புகளில் சிறந்த பாதிப் பண்புகள் பெற்றவள்’ என்று ஆங்கிலத்தில் பெண்ணைக் குறிப்பது வழக்கம். ஆனல், வாழ்க்கையில் அவளுக்கு எவ்வளவு உன்னதமான ஸ்தானம் உண்டோ, அல்லது என்ன ஸ்தானம் பெற அவளுக்கு உரிமை

இருக்கிறதோ, அந்த ஸ்தானம் இன்றைய சமூகத்தில் அவளுக்குக் கிடைப்பதில்லை ; நெடுங்கால சம்பிரதாயமாக வந்துள்ள சில சமூகப் பழக்கங்களும் கொள்கைகளுமே இந்தத் துர்ப் பாக்கிய நிலைக்குக் காரணம். சமூகத்தில் சரிபாதியினரான பெண்களை அடக்கி வைத்தால் எந்தச் சமூகமும் உண்மையாக முன்னேற முடியாது என்பதை உணர வேண்டும். குழந்தைக்கு முதல்முதலாகத் தாயிடமிருந்து தான் அறிவு உண்டாகிறது. அறியாமையில் மூழ்கி அடக்கி வைக்கப்பட்டுள்ள பெண்களையுடைய சமூகத்தில் இத்தாய்மாரிடமிருந்து உத்தம குணங்கள் பொருந்திய பிள்ளைகளும் பெண்களும் தோன்றுவார்களென்று எதிர்பார்க்க இடமில்லை. ஆகவே, பெண்கள் கீழ்ப்பட்டவர்கள் என்ற எண்ணத்தை நம் மனத்திலிருந்து அடியோடு அகற்றி எல்லா வகையிலும் ஆண்களோடு சரி நிகர் சமானம் என்ற நியாயமான உரிமையை அவர்களுக்கு வழங்க வேண்டும். ஆடவர் வேலை அவ்வளவையும் பெண்கள் செய்ய வேண்டும், அல்லது பெண்கள் வேலை அவ்வளவையும் ஆண்கள் செய்ய வேண்டும் என்பது இதன் கருத்தன்று. இயற்கையாயுள்ள மனப் போக்கையும் தடைகளையும் நாம் புறக்கணிக்க முடியாது. இவை போக, வேறெவ்விதமான வேறுபாடோ நிர்ப்பந்தமோ இருக்கலாகாது.

பெண்கள் சம்பந்தமாக இயற்கைக்கு முரணாகவும் அநியாயமாகவும், என்னென்ன தடைகளும் பழக்க வழக்கங்களும் உண்டோ, எவை சமூகத்துக்குக் கேடு விளைவிக்கின்றனவோ, அவற்றை யெல்லாம் நீக்கும் வேலையில் ஊழியர்கள் ஈடுபட வேண்டும் :

(க) முட்டாக்கு முறையை ஒழிக்க வேண்டும்.

(உ) பொது வேலைகள் அனைத்திலும் ஆடவரோடு சமமாகப் பெண்களும் சேர்ந்து ஈடுபட வேண்டும்.

(ங) பாலிய விவாகம் ஒழிய வேண்டும்.

(ச) பலதார மணத்தைக் குறைத்துக் குறைத்து முடிவில் இது அடியோடு இல்லாமல் போக்கிவிட வேண்டும்.

(ரு) விதவைகள் விவாகம் செய்துகொள்ள விரும்பினால் அதற்கு எல்லா வகையிலும் ஆதரவளிக்க வேண்டும்.

(சூ) சட்டப்படி பெண்களுக்குள்ள குறைகளையும் தடைகளையும் போக்க முயலவேண்டும்.

(எ) படிப்பு விஷயத்தில், பையன்களைப் போலவே பெண்களுக்கும் சமமான சந்தர்ப்பமளித்து, ஜீவனம் நடத்துவதற்கு வருவாய் தேடத்தக்க திறமை பெறச் செய்யவேண்டும்.

(அ) பெண் ஊழியர்களே பெண்களுக்குச் சேவை செய்ய முடியும். வயதுவந்த பெண்களிடையே கல்வி பயிற்றுவதும் நூல் நூற்கக் கற்பிப்பதும் மிக முக்கியமான அம்சங்கள். நூற்றல் என்பது பெண்ணுக்கே உரிய சிறப்பான வேலை. குடும்பத்தில் இதன் மூலமாகப் பொருள் வசதிபெற்று, கௌரவமான ஸ்தானமும் அவள் வகிக்க முடியும்.

(கூ) வைத்தியத் தொழில் ஆசிரியத் தொழில் நோயாளர் பணிவிடை ஆகிய தொழில்கள் பெண்களுக்கே சிறப்பாக உரியவை. இவற்றை ஏற்குமாறு பெண்களைத் தூண்டவேண்டும். வேறு பல கைத்தொழில்களிலும் அவர்களுக்குப் பயிற்சியளிக்கலாம்.

(க0) நிர்மாண வேலை எதிலுமே, ஊழியர் முதல் சீர்திருத்தத்தைத் தம் வீட்டில்தான் தொடங்க வேண்டும். பெண்ணுரிமையும் இப்படித்தான். இப்படிச் செய்தால்தான் தாம் யாரோடு சம்பந்தப்படுகிறாரோ அவர்களெல்லாம் இதுபற்றிக் கொண்டுள்ள மனப்பான்மையை மாற்ற இயலும்.

## 10. உடல்நலம்

இது பற்றிய சில குறிப்புக்களைத் துப்புரவு என்ற ஆறும் பகுதியில் காணலாம். உடலையும் உள்ளத்தையும் துப்புரவான நிலையில் வைத்து வருவதற்கு இன்றியமையாத சில அம்சங்களை இங்கு வலியுறுத்துதல் நலம். கிரமமான பழக்க வழக்கங்கள், ஆரோக்கியம் தரத்தக்க அளவில் அமைந்த சீரான உணவு, * தினசரி உடற்பயிற்சி, உழைப்பு முதலியன மிகவும் அவசியமானவை ; இவற்றினும் பார்க்க, தன்னடக்கம் பொருந்திய வாழ்க்கையே இன்றியமையாதது.

* உணவைப்பற்றி ஆராய்ந்தவர்கள், உணவில் என்னென்ன சத்துக்கள் என்னென்ன அளவில் பொருந்தியிருந்தால் உடலுக்கு மிக்க நலந் தரும் என்பதை வரையறுத்திருக்கிறார்கள். இந்த வரையறைக்குப் பொருத்தமாக அமைந்த உணவுதான் ‘ சீரான உணவு ’ என்பது.

ஒழுங்கான பழக்க வழக்கங்கள் நம்மில் பலருக்கு இல்லை; உழைப்பு, உறக்கம், உணவு முதலானவற்றில் கிரமமான நேரத்தை அனுசரிக்கும் வழக்கம் நமக்கில்லை. நாம் உண்பதில் நாவுக்கு ருசியாயிருக்கிறதா என்று தான் பார்க்கிறோம். உடலுக்கு நலந் தருவதா என்பதை நாம் கவனிப்பதேயில்லை. உயிர் வாழும்பொருட்டுத்தான் உண்டு உடலோம்ப வேண்டும் என்பதை மறந்து விடுகிறோம். ஏழை மக்களைப் பொறுத்த வரையில் சீரான உணவென்பது ஒருவேளை சாத்தியமில்லாது போகலாம்; ஆனால், செல்வர்களும் நடுத்தரச் செல்வ நிலையுடையவர்களும் தங்கள் வாழ்க்கையில் சீரான உணவுபற்றி விசேஷ கவனம் செலுத்த வேண்டும். போதிய ஊட்டம் தரத்தக்க உணவில்லாமல் ஏழை மக்கள் நோய்வாய்ப்படுகிறார்கள். செல்வர்களோ, மிதமிஞ்சிய உணவு உண்டு நோய்வாய்ப் படுகிறார்கள். நாம் ஒவ்வொருவரும், நம்முடைய தேவைக்கு ஒத்த முறையில் நமது உணவைச் சீர்படுத்திக்கொள்வது, முடியாத காரிய மன்று. சமையல் எளிதாயிருந்தால், உணவையும் நாம் எளிதாகவே செமிக்க முடியும். அரிசி ஒன்று, கம்பு கேழ்வரகு சோளம் முதலியன, துவரை பயறு முதலியன ஆகிய மூன்றும் சீரான முறையில் சேர்ந்ததுதான் பூர்த்தியான உணவு. இந்த உணவில் தான் வைட்டமின் என்ற உயிர்ச்சத்தும் பிறவும் உடலுக்கு வேண்டிய அளவு இருக்கின்றன என்று பலரும் சொல்லியிருக்கிறார்கள். நாட்டுப்புறங்களில் கத்தரி, அவரை, பூசணி, கீரை, வெங்காயம் முதலிய பலவகையான காய்கறிகளையும், மா, வாழை, பப்பாளி, சீமைத் தக்காளி, கொய்யா, சப்போட்டா முதலிய பழ வகைகளையும் எளிதில் பயிரிடமுடியும். பாலும் எளிதில் கிடைக்கும். மேற்கூறிய அரிசி சோளம் பயறு என்பவற்றோடு இவற்றையும் சேர்த்துக் கொண்டால், மிகவும் ஆரோக்கியமான நல்ல உணவாகும்.

உடலை வருத்திக் கடின வேலை செய்பவர்களுக்கு வேறெந்த உடற் பயிற்சியும் தேவையில்லை. ஆனால், ஓரிடத்திலிருந்தபடியே உடல் வருந்தாமல் உழைப்பவர்களுக்கு ஒழுங்கான உடற்பயிற்சி அவசியமானது. நமது கலாசாலைகளில் பயிலும் இளம் பிள்ளைகள் உடலுக்குப் பயிற்சி தருவதை அடியோடு மறந்து விடுகிறார்கள்; இதன் பயனாய் அவர்கள் உடலும் உள்ளமுமே பழுதடைகின்றன. உடற்பயிற்சி என்பது தனியாகப் போய்ச்

செய்ய வேண்டிய தன்று. பயனுள்ள ஏதேனு மொரு தொழில் செய்துவரும்போதே வேண்டிய அளவு உடற்பயிற்சியும் ஏற்படுமானல், அதுவே சிறந்த உடற்பயிற்சி யென்பது தெளிவு. ஆனல், எல்லோருக்கும் இவ்விதம் நேர்வது முடியாது. ஆகவே, அவரவருக்கு ஒத்த முறையில் யோகாசனங்களோ சூரிய நமஸ்காரமோ செய்வதும், ஆரோக்கியகரமான ஆட்டங் களில் ஈடுபடுவதும் நலந்தரும்.

எளிய உணவு, துப்புரவான வாழ்க்கை, கிரமமான உடற் பயிற்சி என்பவற்றல் உடலுக்கு வளம் உண்டாவது மட்டுமல்ல, உள்ளத்திலும் எழுச்சி பிறக்கும். துப்புரவான வாழ்க்கைக்குத் தன்னடக்கம், அதாவது புலனடக்கம், அவசியமானது. சீரான உணவையே உண்டு, எவ்வளவு தான் ஒருவன் உடற்பயிற்சி யும் செய்துவந்தபோதிலுங்கூட, தீயொழுக்கம் தலைப்பட்டு, தன்னிச்சைகளை அடக்காமல் வாழ்க்கையை நடத்துவானுனல், அவனை ஆரோக்கிய முடையவனென்று கருதமுடியாது. மன மடங்காமல் இச்சையை அடக்குதல் இல்லை. மனத்தின் தூய்மை என்பது, அவரவர் உண்ணும் உணவையும், செய்யும் உடற் பயிற்சியையும், வாழும் வாழ்க்கையையும், பழகும் தோழரை யும், படிக்கும் புத்தகத்தையும் பெரிதும் பொறுத்திருக்கிறது. ஆகவே, உணவிலும் உடற்பயிற்சியிலும் எவ்வளவு கவனம் வேண்டுமோ அவ்வளவு கவனம், தோழரைத் தேர்வதிலும், புத்தகம் படிப்பதிலும் வேண்டும். உடலும் உள்ளமும் செம்மையாக உள்ளவர் மற்றவர்களையும் தம் வசப்படுத்தி அவர்களுக்கு வழிகாட்ட முடியும். ஆனல், இந்தச் செம்மை யில்லாதவரைச் சுற்றி எங்கும் தீய பழக்க வழக்கங்களே மலிந்துவிடும். ஆதலால், நிர்மாண ஊழியர் சீலம் நிறைந்த வாழ்க்கையே வாழவேண்டும்; வாழ்ந்தால்தான், துப்புரவு, சீலம் என்ற தத்துவங்களை எங்கும் பரப்பி, தம்மோடு வாழ்பவர்களிடையே பொருளும் இன்பமும் பெருகும்படி செய்ய இயலும்.

## 11. தாய்மொழி

அன்னிய மொழியாகிய ஆங்கில மொழி மூலமாய் நமக்கு இதுகாறும் கல்வி பயிற்றிவந்ததனுலும், படித்தவர்கள் அதையே அறிவு பரப்புவதற்குரிய கருவியாகக் கொண்டிருந்ததனுலும், இந்தியா பெரிதும் நஷ்டமடைந்திருக்கிறது. சிறு பிள்ளை அன்னிய மொழி யொன்றைக் கற்பதில் ஏற்படுகிற சிரமம் மிகப் பெரிது. இதனுல், அவன் கற்கும் விஷயத்தை மறந்து விட்டு, அதற்குக் கருவியாயுள்ள மொழியிலேயே முழு மனத்தையும் செலுத்துகிருன். தாய்மொழி மூலமாய்க் கல்வி போதிப்பதுதான் சிறந்தது என்பதை யாரும் இன்று மறுக்க மாட்டார்கள். ஆகவே, அந்தந்தப் பிரதேசங்களில் வழங்கும் தாய்மொழிதான் அந்தந்த மக்கள் கல்வி கற்பதற்கும் கருத்துக்களை வெளியிடுவதற்கும் உரிய மொழி என்பது தெளிவு. மனிதன் வளர்ச்சி பெறுவதற்கும், அவனது நாகரிகத்தைப் பேணுவதற்கும், அவன் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளை வெளியிடுவதற்கும் கருவியாயுள்ள தாய்மொழியை வளர்ப்பது அவசியமானது. தாய்மொழியில் விரிவான இலக்கியம் உண்டு. காலத்தால் வரும் நாசத்தை யெல்லாம் கடந்து இவ் விலக்கியம் நின்று நிலவியிருக்கிறது. மக்கள் வாழ்க்கையின் உள்ளப் பண்பையும் உயிர்ப் பண்பையும் மேம்படச் செய்திருக்கிறது. எனவே, நெடுங்காலமாக வளர்ந்துவந்த இந்த அருஞ் செல்வத்தை நாம் நன்கு பாதுகாப்பதோடுகூட, பல வகையாலும் அதைப் பெருக்குவதும் நமது கடமையாகும்.

## 12. நாட்டுப் பொதுமொழி

நம்முடைய நாடு ஒரு விரிந்த கண்டம். இதற்குள் பல மாகாணங்களிடையே பொதுக் காரியங்கள் நடைபெறவும், தேச முழுமைக்கும் பொதுவான விவகாரங்கள் நடைபெறவும், பொது மொழி யொன்று அவசியமானது. இந்தத் தேசிய மொழியையே 'ராஷ்டிர பாஷை' (நாட்டுப் பொதுமொழி) என்று சொல்லுகிரும். இம் மொழி, எல்லோரும் எளிதில் புரிந்துகொள்ளத் தக்கதாகவும் கற்றுக்கொள்ளத்தக்கதாகவும் இருக்கவேண்டும். வட இந்தியா முழுமையும் உள்ள மக்களும் மத்திய இந்தியாவிலுள்ள மக்களும் ஒரு பொதுமொழியைச் சரியாக உச்சரிக்கத்

தெரியாவிட்டாலுங்கூட, பெரும்பான்மையும புரிந்துகொள்ளு கிறார்கள்; இந்த மொழியிலுள்ள வார்த்தைகளில் அனேகம் நம் மாகாணங்களில் வழங்கும் நாட்டுமொழிகளிலும் வழங்கு கின்றன. இந்தப் பொதுமொழியை 'ஹிந்துஸ்தானி' என்று சொல்லுகிறோம். இந்த மொழியால் இரண்டு சௌகரியங்கள் உள்ளன. ஒன்று, இந்திய மக்களில் பாதிப் பேர் இதைப் புரிந்து கொள்கிறார்கள்; மற்றது, இம் மொழியிலுள்ள சொற்களில் பல, கொஞ்சமாகவோ அதிகமாகவோ நம் நாட்டு மற்ற மொழிகளி லும் வழங்கிவருகின்றன. இந்த மொழி நம் நாட்டுப் பொது மொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதில் வியப்பில்லை. நிர்மாண ஊழியர் அனைவரும் இந்த மொழியில் சுமாரான அறிவு பெறுவது கடமையாகும். இந்த மொழியின் பெயரைப் பற்றிப் பலத்த விவாதங்களும் அபிப்பிராயபேதங்களும் உள்ளன; அவற்றைக் குறித்து நமக்குக் கவலையில்லை. இம் மொழிக்கு இருவகை எழுத்துக்கள் (அல்லது லிபிகள்) உள்ளன; தேவநாகரி எழுத்தில் எழுதுவதை 'ஹிந்தி' என்றும், பாரசீக எழுத்தில் எழுதுவதை 'உருது' என்றும் சொல்லுகிறோம். எல்லோரும் ஹிந்துஸ்தானி மொழியை இந்த இரண்டு வகை எழுத்துக் களிலும் எழுதவும் படிக்கவும் அறியவேண்டும்.

இவ்விதம் சொன்னதனால், மாகாணங்களில் வழங்கும் தாய் மொழிகளைக் கற்பதும் ஹிந்துஸ்தானியைக் கற்பதும் ஒன்றுக் கொன்று முரண்படும் என்று கருதுவது சரியாகாது. உண்மை யில், இரண்டும் ஒத்தே வளரவேண்டும். ஒவ்வொன்றுக்கும் தனியான காரியமிருக்கிறது. ஒன்று மற்றொன்றுக்கு நல்ல முறையில் துணைபுரிந்து, அதை வளர்த்துத் தானும் வளர்ந்து வரவேண்டும். எல்லோருக்கும் தாய்மொழியில் புலமை யிருப்பது மிக்க அவசியம்; அதனோடுகூட, வட இந்தியர் ஒரு தென்னிந்திய மொழியைக் கற்றுக்கொள்வதும், தென்னிந்தியர் ஹிந்துஸ்தானி மொழியைக் கற்றுக்கொள்வதும் நலமாகும்.

## 13. பொருளாதார சமத்துவம்

இன்றைய சமூகத்தின் செல்வநிலையில் மிகுந்த ஏற்றத்தாழ்வு இருக்கிறதென்பதை யாரும் மறுக்கமுடியாது. உலகத்தில் சில நாடுகள் மற்றவற்றைவிட அதிகச் செல்வம் படைத்திருக்

கின்றன ; இருந்தும் ஒரே தேசத்தில் ஒரு சமூகத்தார் மற்றச் சமூகத்தாரைவிடச் செல்வநிலையில் பெரிதும் தாழ்ந்தோ அல்லது உயர்ந்தோ இருக்கிறார்கள் ; தனி மனிதர்களிடையிலும், ஒருவர் மிக்க செல்வராயும் மற்றவர் மிக்க வறியவராயும் இருக்கிறார்கள். இங்கிலாந்தும் அமெரிக்காவும் இந்தியாவைப் பார்க்கிலும் அளவற்ற செல்வம் படைத்தவை. இந்தியரொருவருக்குக் கிடைக்கிற சராசரி வருஷ வருமானம் ரூ. 50 ; இதே முறையில் கணக்கிட்டுப்பார்த்தால், ஆங்கிலேயன் வருமானம் ரூ. 1,800 ; அமெரிக்கன் வருமானம் ரூ. 3,000 ; இப்படியிருக்கிற அந்தத் தேசங்களில் கூட, வேலை கிடைக்காத பருவங்களில், அரசாங்கம் வேலையில்லாதாருக்குக் கொடுக்கிற பிச்சையை வாங்கித்தான் ஏழைத் தொழிலாளி பிழைக்கவேண்டியிருக்கிறது. ஆனால், அவர்களுக்குப் பக்கத்திலேயே அந் நாடுகளில் கோடீசுவரர்களும் வாழ்கிறார்கள். அதேபோல, இந்தியாவிலும் மாட மாளிகைகளுக்குப் பக்கத்தில் ஓட்டைக் குடிசைகளுமிருக்கின்றன. இதில் வித்தியாசம் என்னவென்றால், நம் நாட்டில் மாட மாளிகைகள் குறைவு, ஓட்டைக் குடிசைகள் ஏராளம். பல நாடுகள் உலகத்திலுள்ள செல்வமனைத்தையும், வசதியுள்ள பிரதேசங்களனைத்தையும், தாங்கள் கைப்பற்றி விடவேண்டுமென்று போட்டியிட்டதன் பயனாய்த்தான், உலகத்தில் யுத்தங்கள் உண்டாயின, இப்போது நடந்த கொடிய யுத்தமும் உண்டாயிற்று என்று நாம் அறிவோம். மக்கட்சமூகமும் வாழ்க்கையின் போக்கும் இன்றுள்ள மாதிரியே இருக்கிறவரையில் இவ்விதப் போர்கள் நிச்சயம் பெருகத்தான் பெருகும். ஆதலால், உலகத்தில் அமைதியும் இன்பமும் குடிகொள்ள வேண்டுமானால், இன்றுள்ள ஏற்றத் தாழ்வுகள் நீங்கவேண்டும். ஆயுதம் தாங்கிய புரட்சியின் துணைகொண்டு, இந்த நோக்கத்தை நிறைவேற்றப் பல முயற்சிகள் நடைபெற்றிருக்கின்றன. இம் முயற்சிகளால் இதுவரை கைகூடிய பயனானது, இந்தப் பயனை உண்டு பண்ணிய புரட்சியாகிய சக்தி நீங்கிவிட்ட பின்னரும் நிலவுமா என்பது இனித்தான் தெரிய வேண்டும்.

செல்வநிலையில் ஒருநாளும் கெடாத, நிலையான சமத்துவமென்பது, வெளியிலிருந்து மற்றவர்கள் உண்டுபண்ணுவதன்று ; இது அகத்திலிருந்தே எழவேண்டும் ; அதாவது, தான் எல்லாவற்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டும், பிறரை

வஞ்சித்தேனும் தான் வாழவேண்டும் என்ற எண்ணம் மனிதனிடத்தில் குடிகொண்டிருக்கிறது ; இந்த எண்ணத்தைத் தானாகக் கட்டுப்படுத்தினால்தான் அந்த நிலையான சமத்துவம் எழ முடியும். மனப்போக்கில் இத்தகைய மாறுதல் வேண்டுமானால், தனி மனிதருடைய உள்ளத்தைத் தக்கபடி பண்படுத்த வேண்டும். இதைத் தேச முழுமையும் பொருந்தும்படியான அளவில் மேற்கொள்வது பெரிதும் கஷ்டமான வேலை என்பதில் சந்தேகமில்லை. எனினும், தேச முழுமையும் இவ்விதம் மக்களைப் பண்படுத்தும் முயற்சியை மேற்கொண்டால், மக்களிடத்திலுள்ள இந்த மனப்போக்கு மாறுவது உறுதி. அஹிம்சையின்மீது எழுந்த சமூகத்தில்தான் பண்பட்ட மனம் உதிக்கமுடியும். மக்கள் அனைவரும் ஒரேவித இயல்பினராய் அமையவில்லை ; வினைத்திட்பமோ, அறிவோ, வேலைத் திறமையோ எல்லோருக்கும் இயற்கையில் ஒரே மாதிரி அமைவதில்லை. இவ்விதம் அமைந்த இயற்கைத் தாரதம்மியங்களோடு கூடச் சமூகத்தில் பிறப்பினாலும் கல்வியினாலும் சம்பாத்தியத்தினாலும் செயற்கையாக ஏற்படுகிற சௌகரியங்களும் அசௌகரியங்களும் சேர்ந்து, ஏற்றத் தாழ்வுகளை இன்னும் பெரிதாக்குகின்றன. ஹிம்சைமூலமாய்ச் சமூகத்தில் செயற்கையாயுள்ள ஏற்றத் தாழ்வுகளைப் போக்கிவிடலாம் ; ஆனால், மனிதருக்கு இயற்கையாக அமைந்துள்ள ஆற்றலை ஹிம்சை முறையால் சமமாக்க இயலாது. இந்த ஆற்றலை இரண்டு விதமாக உபயோகிக்கலாம் ; ஒன்று, தனி மனிதருடைய நன்மைக்காக உபயோகிப்பது ; மற்றொன்று, அனைவருக்கும் சேவைசெய்ய உபயோகிப்பது. ஹிம்சை அல்லது பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்ட சமூகமானது, இந்த ஆற்றலைத் தனி மனிதருடைய லாபத்துக்கென்றே உபயோகிப்பது இயற்கை ; அல்லது அவர் எந்தச் சமூகத்தை அல்லது தேசத்தைச் சேர்ந்தவரோ அதன் நன்மைக்கென்றே உபயோகிக்கும். ஆனால், அஹிம்சை அல்லது அன்பை அடிப்படையாகக் கொண்ட சமூகமானது அந்த ஆற்றலை அனைவருடைய நன்மைக்காகவும் உபயோகிக்கும். ஆனால், இப்படிப்பட்ட சமூகம் இன்னும் ஏற்படவில்லை ; இனித்தான் ஏற்படவேண்டும். இப்போதுள்ள ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்துக் குறைத்து, முடிவில் அன்பு வழியில் அவற்றை அடியோடு போக்கிவிட வேண்டும். இது எவ்விதம் நடைபெறும்?

தனி மனிதர்களே இதை மேற்கொள்ள வேண்டும்; எல்லோரும் சமம் என்ற இந்தத் தத்துவத்தைத் தங்கள் வாழ்வின் மூலமாகப் பரப்பவேண்டும். நம் உடல் நலமும் இன்பமும் நம்மிடமுள்ள செல்வத்தால் வருவன, செல்வத்தைப் பொறுத்தன என்ற தப்பான அபிப்பிராயம் இருக்கிறது; இது போக வேண்டும். நம்மிடமுள்ள செல்வத்தில் நமக்கு அவசியம் வேண்டியவற்றுக்காகக் குறைந்த அளவு செலவு செய்து கொண்டு, மிகுதியுள்ளதைப் பொதுஜன நன்மைக்கென்று வைத்திருப்பதுதான் நீதியாகும்; இதை நாம் உணரவேண்டும். எளிய வாழ்வும் உயர்ந்த சிந்தனையும் உண்மையில் நம்மைக் கைதூக்கிவிடுகின்றன; குறிப்பாக, நிர்மாண ஊழியர் அனைவரிடத்தும், போதுமென்ற மனமும் எளிய வாழ்வும் நிலவுமானால், இவை எங்கும் பரவும். செல்வத்தாலும் பிறப்பாலும் சமூகத்தில் உண்டான கௌரவமும் பதவியும் மறைந்து, சீலத்தாலும் சேவையாலுமே கௌரவமும் பதவியும் விளையவேண்டும்.

நமது லக்ஷ்யம் இவ்விதம் ஆரம்ப நிலையில் இருக்கும்போது, அரசாங்கமானது மேற்கூறிய ஏற்றத்தாழ்வுகளை நீக்குவதற்கு ஆதரவளிக்கும் முறையில் இதற்கு அனுகுணமான சட்டங்களை இயற்றி வரிகளையும் விதிக்கலாம்; இவ்விதம் செய்வது நம் நோக்கம் கைகூட உதவுவதாகும். ஆனால், அஹிம்சையில் எழுந்த சமூகத்தில் அரசாங்கம் தலையிடுவது மிகவும் அபூர்வமாயிருக்கும். நம் நாடு நம் வசமில்லாத இன்றைய நிலையில், நம்மாலான வரையில் நாமாகச் செய்யக்கூடியதைச் செய்து வரவேண்டும்.

முதலாளிகளாயுள்ளவர்களும் தொழிற்சாலை அதிபர்களும் தங்கள் தொழிலாளிகளுக்குச் சௌகரியமான கூலியும், வாழ்க்கைவசதிகளும் செய்துகொடுப்பது நம் நோக்கம் நிறைவேறுவதற்கு அனுகூலமாயிருக்கும்; உதாரணமாக, தொழிலாளிகளுக்கு ஆரோக்கியம் தரத்தக்க நல்ல உணவு கிடைப்பதற்கான வழிசெய்வது, குடியிருப்பதற்கு நல்ல இடங்கள் அமைப்பது, பிள்ளைகளுக்கு ஏற்ற கல்வி வசதியும் பொழுதுபோக்குக்கான விளையாட்டு வசதியும், அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் வாழ்க்கையில் இன்பமேற்படுவதற்கான பிற வசதி

களையும் செய்வது ஆகியவற்றைக் குறிப்பிடலாம். அந்த முத லாளிகள் இன்னும் தாராள நோக்கத்துடன், தங்களுக்குக் கிடைக்கும் லாபத்தில் தொழிலாளிகளுக்கும் ஒரு பங்கு கொடுக்க லாம். மேலும், தங்கள் சொந்தத் தேவைக்குப் போதுமானதை எடுத்துக்கொண்டு, லாபத்தில் மிச்சமுள்ளதைத் தேசத்துக்கே கொடுத்துவிடலாம். ஜமீன்தார்கள் தங்கள் குடியானவர்களி டத்தில் நியாயமாகவும் அன்போடும் நடந்து கொள்ள வேண் டும் ; அதிகமாய்க் கிடைக்கும் வருவாயைக்கொண்டு குடியான வர்களுக்கு வேண்டிய ஜீவாதாரமான காரியங்களைச் செய்து தர வேண்டும். வக்கீல்கள் டாக்டர்கள் முதலியோருக்கும் மேற் சொன்னது பொருந்தும். நிதி மிகுந்தவரெல்லாம் தங்களிடம் அதிகமுள்ள பொற்குவையை ஏழை மக்களின் நன்மைக் கென்றே பயன்படுத்துவார்களானால், எங்கும் சமதர்மம் நிலவுகின்ற புதிய சமூக அமைப்பு உண்டாகத் தொடங்கிய தாகக் கருதலாம். ஆனால், ஓர் உத்தம சமூகத்தில் தொழிலா ளிக்கு என்ன சௌகரியங்கள் கிடைக்குமோ அந்த அளவில் செல்வராயுள்ளவர் தம் செலவுகளையும் கூடிய வரையில் நிறுத் திக்கொள்ள முயல்வதுதான் முக்கிய காரியம்.

## பொதுக் குறிப்பு

காந்தியடிகள் தம் நிர்மாணத்திட்டத்தில் குறிப்பிட்டுக் கூறிய பதின்மூன்று அம்சங்களையும் பற்றிய திட்டமான யோசனை களை இதுவரையில் பார்த்தோம். இவை போக, மேலும் கவனிக் கத்தக்க சில அம்சங்கள் உள்ளன. அவை ஓரளவுக்கு மக் களைத் திரட்டி அமைப்பதைப் பற்றியவை. இந்தப் பதின்மூன்று திட்டங்களையும் நிறைவேற்றுவதற்குப் பின்வரும் குறிப்புக்களும் மிக்க உபயோகமாயிருக்கும்.

சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபடும்படி மக்களைத் திரட்டி ஒன்று படுத்துவது முக்கியமான முதல் தர நிர்மாண வேலையாகும். காங்கிரஸாகிய ஸ்தாபனமிருக்கிறது. இது பொது. இதுபோலவே விவசாயிகளையும் தொழிலாளரையும் மாணவரையும் திரட்டித் தனி ஸ்தாபனங்கள் அமைக்கலாம். இந்த ஸ்தாபனங்களில் ஒன்று செய்துவரும் வேலையானது சில சமயம் மற்றொன் றும் செய்து வருவதாயிருக்கலாம் ; இருப்பினும், இவை அஹிம்சையை அடிப்படையாகக் கொண்டிருக்குமானால் எவ்வித

முரணும் நேராது. செய்து வரும் வேலையில் ஏதேனும் அபிப்பிராய பேதமோ வேற்றுமையோ தோன்றினுலுங்கூடச் சிறிதும் மனக்கசப்பு உண்டாகாதபடி அதைப் போக்கிக்கொள்ள லாம். இவற்றை யெல்லாம்பற்றி இங்கே சற்று விவரமாகச் சொல்வது பொருந்தும்.

காங்கிரஸ் ஸ்தாபனத்தில் எல்லா வகுப்புக்களையும் மதங்களை யும் இனங்களையும் சேர்ந்த மக்கள் அங்கத்தினரா யிருக்கிறார் கள். அதன் கொள்கையை ஏற்றுக்கொண்டு வருஷாந்தச் சந்தாவாகிய நாலணுவைச் செலுத்துகிறவர் எவரும் அதில் அங்கத்தினராகலாம்; காங்கிரஸ் அமைப்பு விதிகளில் கண் டுள்ள நிபந்தனைகளையொட்டி அவர் நடந்து வருகிறவரையில், காங்கிரஸின் கமிட்டிகள் அல்லது தேர்ந்தெடுக்கிற பதவிகள் எவற்றுக்காகவும் தேர்ந்தெடுக்கப் பெற அவர் உரிமையுள்ளவ ராகலாம். வகுப்போ, மதமோ, இனமோ, ஆண் பெண் என்ற வேற்றுமையோ காரணமாக எவ்விதத் தடையுமில்லை. உழைக் கவும் சேவை செய்யவும் எல்லோருக்கும் நிறைந்த சந்தர்ப்பம் கிடைக்கும்; இவற்றின்மூலம் எவரும் காங்கிரஸ்காரர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரராகலாம். காங்கிரஸ் ஸ்தாபனமானது, ஒவ்வொருவரும் மனப்பூர்வமான சுய இச்சையோடு வந்து சேர்ந்த ஸ்தாபனமாகும்; காங்கிரஸின் முடிவுகளை அனுசரித்து அங்கத்தினர் நடக்கவேண்டுமென்று அவர்களைக் கட்டாயப் படுத்துவதற்கு அங்கத்தினர்களுக்குள் நிலவும் பொது அபிப் பிராயத்தின் பலத்தைத் தவிர வேறு எந்தப் பலமும் கிடை யாது. எல்லாவற்றிலும் மேலான பலம், காங்கிரஸ்காரருடைய சொந்த மனவலிமையும் மனவுறுதியுமே. ஆகவே, காங்கிரஸ் ஸ்தாபனத்தை எவ்விதப் பழிச் சொல்லுக்கும் தப்பெண்ணத் துக்கும் இடமில்லாமல் வைத்திருப்பது காங்கிரஸ்காரர் ஒவ்வொரு வருக்குமுரிய கடமையும் பொறுப்புமாகும். அங்கத்தினர் பட்டியலில் போலியாக அங்கத்தினர் பெயரைச் சேர்க்கக்கூடாது. தேர்தல்களில் ஒழுங்கீனமான முறைகள் எவையும் கையாளக் கூடாது. ஆனால், துரதிஷ்டவசமாக இக் குறைகள் யாவும் இன்று இல்லை யென்று சொல்லமுடியாது. இவை காங்கிரஸ் ஸ்தா பனத்தை பலவீனப்படுத்தி, அது பெரும்பயன் விளைவிப்பதற்குப் பாதகம் செய்கின்றன; ஆதலால், இக் குறைகளைப் போக்க உதவுவது காங்கிரஸ்காரர் எல்லோருக்குமுரிய கடமையாகும்.

காங்கிரஸ் ஸ்தாபனம், அதன் காரியங்கள், அதன் கொள்கைகள் ஆகியவற்றினிடம் பொதுமக்களின் கவனம் எப்போதும் சென்று கொண்டே யிருக்கிறது ; பொதுவாக இந்தக் கவனத்தில் குறைகள் பல மடங்கு பெரியனவாகவே தோற்றுகின்றன. பொது மக்களிடத்திலும் காங்கிரஸின் சொந்த அங்கத்தினரிடத்திலும் காங்கிரஸ் என்றால் என்ன நம்பிக்கை ஏற்படக் கூடுமோ அந்த நம்பிக்கை யொன்றுதான் காங்கிரஸுக்குரிய பலமாகும் ; ஆகவே, காங்கிரஸில் எவ்வித லஞ்சமும் ஏமாற்றும் தலைகாட்டக்கூடாது. அங்கத்தினர்களை நேர்மையான முறையில் சேர்க்கவேண்டும் ; தேர்தல்களில் எவ்வித மோசடிக்கும் இடங் கொடுத்தலாகாது ; இவற்றைக் கவனிப்பது காங்கிரஸ்காரருடைய கடமை ; தவிர, பொதுமக்களைப் பாதிக்கக்கூடிய பிரசினைகள் எழும்போது, எவ்வித அச்சமும் தாட்சண்யமும் இல்லாமல், கட்சி உணர்ச்சியினாலோ, சாதி பற்றியோ, வகுப்பு வாதத்தாலோ மனம் திரியாமல், அந்தப் பிரசினைபற்றிப் பொருத்தமுடைய நியாயமான முடிவுக்கு வருவதில் அவர்கள் உதவி செய்யவேண்டும். ஏனெனில், எல்லாக் கட்சியினருடைய நம்பிக்கைக்கும் மரியாதைக்கும் பாத்திரமாகக் காங்கிரஸ் நடந்து கொண்டால்தான், தேசிய ஸ்தாபனமென்ற தன்மையோடு கம்பீரமாகத் தலை நிமிர்ந்து நிற்கமுடியுமென்பதை எல்லோரும் ஞாபகம் வைக்கவேண்டும். இதுபற்றியே காங்கிரஸ் ஸ்தாபனம் முழுமையுமோ அல்லது அதன் அங்கங்களில் மிகத் தாழ்ந்ததான ஓர் அங்கமோ தன் அடிப்படையிலிருந்து சிறிது வழுவி விட்டாலுங்கூட, அதன் தேசியத் தன்மை தொலைந்து அதன் புகழும் குன்றிவிடும் ; எவ்வளவோ நன்மை செய்வதற்கு அதற்கிருக்கும் சக்தி யெல்லாம் நீங்கிவிடும்.

## 14. விவசாயிகள்

விவசாயிகளும் அவர்களை அடுத்து வாழ்வோரும் நம்நாட்டு ஜனத்தொகையில் சுமார் 85 சதவிதம் இருக்கிறார்கள். காந்தியடிகள் கூறிய நிர்மாணத்திட்டம் இவர்களுக்கு உதவி செய்யப் பயன்பட்டாலன்றி, அதனால் எவ்வித நன்மையுமில்லை. கிராமங்களில் செய்யும் வேலையெல்லாம் இவர்களுக்கு நன்மை தர வேண்டும். தொடங்குகிற சேவையில் இவ்வளவு பெருந்

தொகையினரான மக்களின் நன்மையைப் புறக்கணித்தாலும சரி, அந்த நன்மைக்கு இடையூறு நேர்ந்தாலும்சரி, அந்தச் சேவை உண்மையான நிர்மாண சேவையென்று சொல்லமுடியாது. இந்த அங்கங்களின் கருத்தை விவேகத்தோடு உணர்ந்தால், விவசாயிகளுக்குச் செய்கிற உண்மையான சேவையென்பது இந்த அங்கங்களின் நோக்கத்தைச் செவ்வையாய்த் தெரிந்து நிறைவேற்றுவதுதான் என்பது எளிதில் புலனாகும். இந்த விதமாகப் பார்க்கும்போது, விவசாயிகளுக்குத் தனியான ஸ்தாபனம் அவசியமில்லை. அவர்கள் காங்கிரஸில் பெருந்தொகையினராகச் சேர்ந்து அதைத் தங்கள் சொந்த ஸ்தாபனமாக்கிக் கொள்ளவேண்டும். காங்கிரஸ் இன்று மிகுந்த ஆற்றல் வாய்ந்த ஸ்தாபனம்; ஆனால், இது விவசாயிகளுக்கு உதவி செய்து அவர்களைப் பாதுகாக்கா விட்டால் அந்த ஆற்றலை இழந்துவிடும். விவசாயிகளுக்கு உதவி செய்வது சம்பந்தமாக விவரமான சில யோசனைகள் கூறுவது இங்கு உபயோகமாயிருக்கும்.

இக் காலத்தில் விவசாயிகளுக்குத் தங்கள் நிலச்சுவான்தார்களிடமும் அரசாங்கத்தாரிடமும் திட்டமான குறைகளிருக்கின்றன. இவற்றை அவசரமாய்க் கவனிக்கவேண்டும்; சுயராஜ்யம் வந்தபிறகு இவற்றுக்குப் பரிகாரம் தேடலாமென்றிருக்க முடியாது. எங்கெங்கு இத்தகைய குறைகள் உண்மையாகவே இருக்கின்றவோ அங்கெல்லாம் நிர்மாண ஊழியர் தம்மையும் ஒரு விவசாயி யென்றே பாவித்து, தக்க பரிகாரம் தேடுவதில் விவசாயிகளுக்கு உதவிசெய்யவும் வழிகாட்டவும் வேண்டும்; இது அவர்களுடைய முக்கிய கடமை. அஹிம்சையை ஆதாரமாகக் கொண்டு இருதிறத்தாருக்குமிடையில் பேச்சு வார்த்தை நடந்தால், அனேகமாய்த் தக்க பரிகாரம் கிடைத்துவிடும்; பேச்சு வார்த்தை முறிந்துபோய்விட்டால், சட்டமறுப்புச் செய்யவோ, குத்தகையேனும் வரியேனும் செலுத்த மறுக்கவோ, குடியானவர்களுக்கு உரிமையுண்டு. குறை எவ்வளவுக்கெவ்வளவு அதிகம் பேருக்கு ஏற்பட்டிருக்கிறதோ அவ்வளவுக்கு அவர்களுடைய கோரிக்கையும் நியாயமென்று கருதலாம். இந்த இயக்கத்தை அஹிம்சை முறையில் நடத்தும் பட்சத்தில், சீக்கிரத்தில் வெற்றி கிடைப்பது உறுதி.

வேறு சில துன்பங்களையும் விவசாயிகள் சமாளிக்கவேண்டிவரு கிறது. தங்களுக்குள் அடிக்கடிச் சச்சரவு செய்துகொண்டு, நியாய சபையில் வியாச்சியந்தொடங்கி தங்களையே நாசம் செய்துகொள் ளுகிறார்கள். நிர்மாண ஊழியர் தம்முடைய சேவைமூலமாக விவசாயிகளுடைய நம்பிக்கைக்கும் மரியாதைக்கும் பாத்திர ராகும்பட்சத்தில் சச்சரவுகளையெல்லாம் தீர்த்துவைப்பதும், வியாச் சியமே எழாதபடி செய்வதும் அவருக்கு எளிதாகும். உழ வருக்கும் நிலச்சுவான்தாரருக்கும் ஏற்படும் சில்லறைச் சச்சர வுகளுக்கும் இதுவே பொருந்தும்.

ஆனால், உழவர்களை எந்த ஸ்தாபனமும் அரசியல்பற்றியோ வேறெந்தக் காரணங்கள் பற்றியோ தன் சொந்தக் காரியம் நிறைவேறுவதற்குக் கையாளாக உபயோகிக்கக்கூடா தென்பதை இங்கு வலியுறுத்திச் சொல்லவேண்டும். காங்கி ரஸ்காரர் விவசாயிகளுக்குச் சரியானமுறையில் சேவை செய் வார்களானால், விவசாயிகள் காங்கிரஸின் நேர்மையையும் ஆற்றலையும் அதனால் விளையும் பயனையும் உணர்ந்து, தாங்க ளாகவே காங்கிரசில் வந்து சேர்வார்கள். இப்படி அவர்கள் சேர்ந்து விசுவாசத்தோடிருப்பது நிலைத்து நிற்கும், சுயநல மற்றதாயிருக்கும்; ஆகவே, அவர்கள் சொந்த நன்மையை நோக்கமாக வைத்துள்ள ஓர் அரசியல் ஸ்தாபனத்தில் சேரும் படி சொன்னாலும் அவர்களுக்கென்று தனியான ஒருஸ்தாபனம் ஏற்படுத்தினாலும், அதனிடத்தில் எவ்வளவு விசுவாசமுடை யவர்களாயிருப்பார்களோ, அதைவிட இந்த விசுவாசம் மிக்க சிறப்புடையதாகும்.

கூட்டுறவுமுறையில் சாகுபடிசெய்யும் ஏற்பாட்டை விவசாயிக ளிடையே வழக்கத்துக்குக் கொண்டுவருவதன்மூலம் மிக முக்கிய மானதும் பெரும்பயன் தருவதுமான சேவைசெய்ய இடமுண்டு. நிலப்பரப்பு மிகவும் சிறியதாகிவிட்டால், பயிர்த்தொழில் செய்து லாபமில்லை. ஆனால், வாரிசு பாத்தியதையைக்குறித்து இன்றுள்ள சட்டங்களின்படி நிலத்தைத் துண்டுதுண்டாகப் பங்குபோடுவதைத் தடைசெய்ய வழியில்லை. இருந்தாலும், தனிப்பட்ட சிலர் ஒன்றுசேர்ந்து கூட்டுச்சாகுபடி செய்வது நல்லது. ஒவ்வொருவரும் உழைத்து தம்முடைய வீதப்படி வரும் லாபத் தையும் பங்கிட்டுக்கொள்ளலாம். இதுவே நல்ல முறை. அன்

றியும் பயிர்த்தொழிலை அபிவிருத்தி செய்வதற்கான சில முறைகளுக்கு ஏற்படும் அதிகச் செலவை ஒருவரே செய்ய முடியாது; இச்செலவைப் பலர் கூட்டாகச் சேர்ந்து செய்து பயனையும் கூட்டாக அனுபவிக்கலாம். உழவுமாடுகள் சம்பந்தமாகவும் இதே போன்ற முறையைப் பின்பற்றலாம். கூட்டுறவு முறையில் பயிர் செய்வது சம்பந்தமாக மிகவும் பயனுள்ள வழியில் வேலைசெய்வதற்கு அதிக இடமிருக்கிறது.

இவ்விதமாக விவசாயிகள் சம்பந்தமான சேவை மிகவும் முக்கியமானது. ஆகவே, காங்கிரசில் அயல்நாட்டு விவகாரங்கள் முதலியவற்றுக்குத் தனித் தனி இலாகாக்களிருப்பதுபோல, விவசாயிகளுக்காகவும் ஒரு தனி இலாகா இருப்பது நல்லது

## 15. தொழிலாளர்

தொழிற்சாலைகளில் வேலையிலமர்ந்துள்ள தொழிலாளர் ஒரு தனி வர்க்கம்; இந்த வர்க்கம் தொழிலாளர் சங்கங்களாக ஒன்றுசேர்ந்திருக்கிறது. குடியானவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இது மிகவும் சிறிய கூட்டந்தான். ஆனால், ஆலைத் தொழில்முறை நடைபெறும் பெரிய பட்டணங்களில் இந்த வர்க்கம் மிகுதியாய் இருப்பதால் இந்த வர்க்கத்தாரை யணுகி அவர்களை ஒன்றுசேர்த்து ஸ்தாபனமாக்குவது எளிதாயிருக்கிறது. இவர்கள் இயந்திரங்களையும் அவற்றின் உபகரணங்களையும் கையாளுகிறார்கள்; இவ்வேலைக்கு அறிவு தேவை; ஆகவே, குடியானவர்களைவிட, இந்த வர்க்கத்தாரனைவருக்கும் அதிக அறிவிருக்கிறதென்று பொதுவான அபிப்பிராயமேற்பட்டிருக்கிறது. தொழிலாளருடைய நலத்தை உத்தேசித்து, அவர்களனைவரையும் ஒன்றுசேர்த்து ஸ்தாபனம் அமைப்பதில் கெடுதல் ஒன்றுமில்லை. ஆனால், இவர்களை அரசியல் காரியங்களுக்காக உபயோகித்துக்கொள்ளக்கூடாது. விவசாயிகள் விஷயத்தில் கூறியதுபோல, நிர்மாணத் திட்டம் இவர்களுக்கு நன்மையே தரும். இதை இவர்களிடையே நடத்தவும் வேண்டும். தொழிலாளர்களுக்கு அவர்கள் செய்யும் வேலைசம்பந்தமாக நியாயமான சௌகரியங்கள் பெறவும், பிற வாழ்க்கை வசதிகள் பெறவும் தொழிற்சங்கங்கள் இருப்பது அவசியம்; ஆனால், சில சமயம் வீண் தொந்தரவுசெய்வதற்காக வேலைநிறுத்தம்

செய்யும்பொருட்டென்றே இச்சங்கங்கள் உண்டாகின்றன. முதலாளி நியாயத்துக்குக் கட்டுப்பட மறுத்தாலும் சிறிதேனும் விட்டுக்கொடுக்க மறுத்தாலும் வேலைநிறுத்தங்கள் அவசியமாகலாம். ஆயினும், நியாயம் பெறும்பொருட்டு மற்றெல்லா முறைகளையும் பின்பற்றிப் பார்த்துப் பயனில்லையென்று கண்டால் தான் கடைசியில் வேலைநிறுத்தத்தை மேற்கொள்ளலாம். தொழிலாளரிடையே சிறந்த ஊழியர்கள் சேவைசெய்து வழி காட்டுவது மிக்க அவசியமாகும். காந்தியடிகள் ஸ்தாபித்த ஆமதாபாத் தொழிலாளர் சங்கமானது மற்றத் தொழிலாளர் அனைவருக்கும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகுமென்று காந்தியடிகள் கூறுகிறார். அதன் சரித்திரம் என்னவென்றும் அமைப்புவிதிகள் என்னவென்றும் நிர்மாண ஊழியர் நன்றாய் ஆராய்ந்து, சாத்தியமான இடத்திலெல்லாம் அத்தகைய சங்கங்களை ஏற்படுத்த முயலவேண்டும்.

## 16. ஆதிக்குடிகள்

ஆதிக்குடிகளைப் பொறுத்த பிரசினையானது தீண்டாதார் பிரசினை போன்றது. இதற்கான சேவைசெய்வதற்கு ஊக்கமும் சேவையில் ஆர்வமும் நிறைந்த தொண்டர்படை தேவை. இந்தியாவில், காடுகளிலும் மலைப்பிரதேசங்களிலும் நாட்டின் வெவ்வேறு பாகங்களில் வாழ்ந்துவருகிற ஆதிக்குடிகள் பெருந் தொகையினர் இருக்கிறார்கள். அவர்களை ஆதிவாசிகள் என்றும் சொல்லுகிறோம். கல்வியில் அவர்கள் மிகுந்த தாழ்ந்த நிலையில் இருக்கிறார்கள்; அவர்களுடைய செல்வநிலையோ மிகவும் கேவலமான நிலையிலிருக்கிறது. அவர்களிடையில் கிறிஸ்தவப் பாதிரிகள் கல்வி சம்பந்தமாக நல்லவேலை செய்திருக்கிறார்கள்; எனினும், செய்யவேண்டிய வேலை இன்னும் அதிகம் இருக்கிறது. நம்மவர்கள் அவர்களைக் கவனிக்கவேயில்லை; எனவே, கல்விசம்பந்தமான வேலையும், வாழ்க்கையை மேம்படுத்தும் பணியும் அவர்களிடைசெய்வது அவசியமாகிறது. இவ்வேலைகளை விரிந்த அளவில் செய்யவேண்டும். ஹரிஜனங்களிடையே செய்யும் சேவையைப்போலவே இவர்களிடையும் சேவைசெய்யவேண்டும்.

## 17. குஷ்டரோக நிவாரணம்

## 18. மாணவர்

மாணவர் தொகுதி ஒரு முக்கியமான தொகுதி. இவர்களிடையும் வேலைசெய்வது அவசியம். ஆனால் இந்த வேலை முழுமையும் வேறுவிதம். மாணவர் ஒரு தனியான வர்க்கம் என்று சொல்லமுடியாது; இவர்களுடைய நலன்கள் மற்றொரு வர்க்கத்தாருடைய நலன்களோடு முரண்படுவதில்லை. ஆகவே, இவர்களுடைய நலன்களை கவனித்துப் பாதுகாத்துவருவதற்குத் தனியான ஒரு ஸ்தாபனம் உண்மையில் தேவையில்லை. கல்வியதிகாரிகள் பொதுஜன ஊழியர்கள்; அவர்கள்வசம் ஒப்புவித்த பிள்ளைகளை, உடல்பற்றியும் அறிவுபற்றியும் ஒழுக்கம்பற்றியும் ஆரோக்கியம் வாய்ந்த, திறமையுடைய பிரஜைகளாக ஆக்குவதே ஆசிரியர்களுடைய கடமை. ஆகவே, விவசாயிகள் சபை அல்லது தொழிற்சங்கம்போன்ற அமைப்புடைய ஒரு ஸ்தாபனம் மாணவர்களுக்கு அவசியமில்லை. ஆனால், நமது நாடு இன்றிருக்கிற நிலைமையில், பொதுஜன ஊழியர்கள் என்ற தொடருக்குள்ள உண்மையான கருத்தின்படி பார்த்தால், கல்வியதிகாரிகள் பொதுஜன ஊழியர்களல்ல. இவர்கள் அரசாங்கத்தின் ஊழியர்கள். அரசாங்கத்தின் நன்மை இன்று தேசத்தின் நன்மையோடு ஒத்திருக்கவில்லை. பிரிட்டிஷ் அரசாங்கம் அளிக்கிற கல்வி, குறித்த ஒரு நோக்கத்துக்காகத்தான் ஏற்பட்டிருக்கிறது; மாணவர்களிடை சிலசமயம் தேச ஆர்வம் நிறைந்து ததும்புகிறது; ஆசிரியர்களோ தேசத்துக்கு விரோதமான அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டிருக்கிறார்கள். எனவே, இவ்விரு திறத்தாருக்கும் போராட்டம் ஏற்படுகிறது. மாணவர்கள் தங்கள் கல்விக்காகவும் வாழ்க்கையின் எதிர்கால நன்மைக்காகவும் அரசாங்கத்தையே நம்பியிருக்கிறவரையில், அரசாங்கத்தோடு போரிட அவர்களால் முடியாது. தவிர, அரசாங்கப் பாடசாலைகளில் படித்துவருகையில் மாணவர் யாரேனும் அரசியலில் ஈடுபட்டுக் கிளர்ச்சிசெய்தால் அவர்களுடைய கல்வி இன்னும் கீழ்நோக்கிப் போய்விடுகிறது. ஆகவே, மாணவர்களுக்குரிய ஸ்தாபனம் என்பது தேசத்தின் குறைகளுக்காகப் போரிடும் பொருட்டோ அவற்றுக்குப் பரிகாரம் தேடும்பொருட்டோ ஏற்பட

இயலாது ; ஆனல், இன்றுள்ள கலாசாலைகளில் கற்பிக்கும் கல்வி முறையிலுள்ள குறைகளை அகற்றும்பொருட்டே அவை ஏற்படவேண்டும். அந்த ஸ்தாபனம், மாணவர்களைத் திறமை வாய்ந்த பிரஜைகளாக ஆக்குவதை நோக்கமாய்க் கொள்ள வேண்டுமே தவிர, அரசியல் போராட்டங்களில் கலந்துகொள் வதை நோக்கமாய்க் கொள்ளலாகாது. இதனல், இந்திய சுதந்திர இயக்கத்தில் மாணவருக்கு எவ்விதப் பங்குமில்லை யென்று கருதலாகாது. அவர்களுக்கு நிறைந்த பங்குண்டு ; ஆனல், மாணவர் என்ற முறையில், குறிப்பிட்ட சம்பவங்களையும் தற்காலம் நடந்துவருகிற சம்பவங்களையும் நன்ருய் ஆராய் வதிலும், போராட்டத்தில் நேர்முகமாய்க் கலந்துகொள்வதை விட்டுவிட்டு இதற்கென்றே தங்களைத் தயார்செய்து கொள் வதிலும், நல்ல உபயோகமான முறையில் தாங்கள் படிக்கும் காலத்தைச் செலவழித்தால், தங்கள் கடமையை அவர்கள் இன்னும் வெற்றிகரமாகச் செய்யமுடியும். யாருக்கேனும் சுதந்திரப் போராட்டத்தில் பங்கெடுத்துத்தான் ஆகவேண்டும் என்ற வேகம் அளவுகடந்து போய்விட்டால், அவர்கள் அரசாங்கக் கல்வி ஸ்தாபனங்களிலிருந்து விலகி, தேச சேவையில் ஈடுபட வேண்டும். அப்படி ஈடுபடும்போது, மாணவர் ஸ்தாபனங்களில் அவர்கள் அங்கத்தினராயிருக்க முடியாது. எனினும், மற்றவர் களைப் போலவே மாணவர்களும் இந்த நிர்மாணத் திட்டத்தைச் செயலில் பின்பற்றலாம். இதிலுள்ள பல அங்கங்கள்பற்றி அவர்கள் சிறப்பான வேலை செய்யமுடியும். பல வகுப்பினருக்கு மிடையேயுள்ள வேற்றுமை, பொருமை, அவநம்பிக்கை என்ற நச்சுமரத்தை நிச்சயம் அவர்கள் வேரோடு பிடுங்கி எறிய முடியும். தங்களிடையே தீண்டாமை உணர்ச்சி ஏதேனுமிருந்தால், அதையும் அடியோடு அகற்றலாம். நூல் நூற்றலுக்காகத் தினம் சிறிது நேரம் செலவழிக்கலாம் ; நூற்கும் கருவிகளை அபிவிருத்தி செய்வதற்குத் தங்கள் அறிவையும் யந்திரத் திறமையையும் பயன்படுத்தலாம் ; கதரைத் தவிர வேறெந்தத் துணியையும் அவர்கள் அணிவதற்கு நியாயமேயில்லை. மாலையில், வயதுவந்தோருக்குக் கல்வி பயிற்றவும், படிப் பின்மையைப் போக்கவும், ஓய்ந்த நேரத்தில் சிறு பகுதியைச் செலவழிக்கலாம். தாய் மொழியில் சிறந்த புலமை பெறவும், ஹிந்துஸ்தானி மொழியைக் கற்றுக்கொள்ளவும் அவர்களுக்கு

விசேஷ வசதிகள் உள்ளன. சமூகச் சீர்திருத்தத்தில் அவர்கள் உதவி செய்யலாம். தங்களுடைய சொந்தக் குடும்பங்களில் பெண்களின் நிலைமை சம்பந்தப்பட்ட வரையில் இப்போதுள்ள மனப்பான்மையை முடிந்தவரையில் மாற்றலாம். எளிமையும் திருப்தியும் தங்கள் வாழ்க்கையில் நிலவும்படி செய்து, இதையே பொருளாதார சமத்துவம் என்ற லக்ஷ்யத்துக்குத் தோற்று வாயாக ஆக்கலாம். தங்கள் கோடை விடுமுறைக் காலத்தில் கிராமங்களில் சேவை செய்துவரலாம். இந்தத் திட்டங்களையும், இவற்றைப் போன்ற பிற நிர்மாணத் திட்டங்களையும் செய்து வருவதில் மாணவர் தங்கள் நேரத்தையும் கவனத்தையும் செலுத்துவார்களானால், இந்த வேலையால் அதிகாரிகளுடனோ பெற்றோருடனோ எவ்வித அபிப்பிராயபேதமும் ஏற்படாது. அல்லாமலும், இந்தச் சேவையின் மூலம், வாழ்க்கையில் நேர் முகமான அறிவும், பயனுள்ள மக்கள் தொடர்பும் பெறுவதற்கு அரிய சந்தர்ப்பங்கள் ஏற்படும். இவை அவர்களுடைய பிற்கால வாழ்வில் சமயத்தில் உதவி, சுதந்திர நாட்டின் பிரஜைகள் என்ற முறையில் அவர்கள் பின்னர் செய்யவேண்டி வரும் அரும்பெரும் காரியங்கள் செய்ய உதவியாகவும் இருக்கும். இந்தத் துறையில் அமைத்து நடத்திவருகின்ற மாணவர் ஸ்தாபனம் இப்போது நாட்டுக்கு மிகவும் அவசியமானது; இது மாணவர் அனைவரையும் சேவை என்ற பொதுப் பணியில் ஒன்றுபடுத்தும். மாணவர்களுடைய அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாகி, அவர்களிடையில் இன்றுள்ள ஒற்றுமையின்மையையும் போக்கி, ஒற்றுமையும் ஒழுங்குமுறையும் குடிகொள்ளும் படி செய்யவல்ல ஆர்வம் நிறைந்த ஊழியர் இப்போது தேவை. ஊழியரிடத்தில் எவ்வித கோபதாபமோ, விருப்பு வெறுப்போ இருக்கக்கூடாது. அவர் சிறிதும் சுயநலம் அற்றவராய் இருக்கவேண்டும். சில சமயம் மக்களிடையே திடீரென்று ஊக்கம் பெருகி விரைவில் அது மறைந்தும் போகலாம். அல்லது அளவில்லாத சோர்வு சில சமயம் குடி கொள்ளலாம். இவற்றால் அவர் கலங்கலாகாது. மன உறுதியும், நம்பிக்கையும் நிறைந்தவராய் இளம்பிராயத்தவர்களின் போக்கை யறிந்து அவர் சேவை செய்யவேண்டும்.

## முடிவுரை

காந்தியடிகள் எழுதிய நிர்மாணத் திட்டமானது, நிர்மாண வேலைக்கும், சுதந்திரப் போராட்டத்துக்கும், எவ்வளவு நெருங்கிய தொடர்பு இருக்கிறதென்று தெளிவாய் விளக்குகிறது. இந்தியாவிலுள்ள எந்த இந்தியரும், அவருடைய அரசியல் அபிப்பிராயம் எவ்விதம் இருந்தபோதிலும், அவர் எந்த வகுப்பைச் சேர்ந்தவராய் இருந்தபோதிலும், தம் நாடு பூரண சுதந்திரமடையவேண்டுமென்று விரும்பாதவரில்லை. இந்தத் திட்டத்திலுள்ள எந்த ஓர் அம்சமும் விவாதத்துக்கிடமானது என்று சொல்லமுடியாது. இது அனைத்தையும் தனக்குள்ளே அடக்கி இருக்கிறது. இந்த வேலையில் நமக்குள் சாமானியமாயுள்ளவரும், மிக்க திறமைசாலியாயுள்ளவரும், தம்முடைய திறமை முழுமையும் பொலிவதற்கான சந்தர்ப்பத்தைக் காணலாம். ஆடவருக்கும், பெண்களுக்கும், இளைஞருக்கும் முதியவருக்கும், எல்லோருக்கும் இது பொருந்துவதாகும். உண்மையில் பெண்களே இந்த வேலையில் பெரும் பங்கு கொள்வார்களென்று நாம் கருத இடமுண்டு. எவ்வளவு விரைவில் இந்தியா தனது உன்னதமான நிலைமையை அடைய முடியுமோ அவ்வளவு விரைவில் அடையும்படி வேலை செய்வதற்கான ஊக்கத்தை இத் திட்டம் அனைவருக்கும் தரும் என்றும், அறிவும், ஆற்றலும், பக்தியும், பலமுங்கொண்டு எல்லோரும் உழைப்பார்களென்றும் நான் எதிர்பார்க்கிறேன்.

---

# அனுபந்தம்

## 19. பசுபாலனம்

(அல்லது கோ-சேவை)

கோ-சேவை என்ற தொடர் மிகவும் சிந்தனை செய்து தேர்ந்தெடுக்கப்பட்டது. கோ ரக்ஷை என்பதில் அடங்கிய கருத்து நாம் பசுவைக் காப்பாற்றுகிறோம் என்பதாகும். இது வேண்டா மென்று கருதியே சேவை என்ற சொல்லை உபயோகிக்கிறோம். ஹிந்துவுக்குப் பசுவே தாய். உண்மையில் பசு அப்படித்தானிருக் கிறது. அமெரிக்கர் ஒருவர் பசுவை 'சுபிட்சம் தரும் அன்னை' என்று வருணித்தார். அது பொருத்தமான வருணனை. மேலை நாட்டில் மாட்டின் இறைச்சியை உண்கிறார்கள் என்பது வாஸ் தவம். அங்கு மனிதனுக்கு நன்மையும் சுகமும் தரும் பிரா ணிகள் எல்லாவற்றிலும் பசுவே மிகவும் உயர்ந்ததென்று கருதுகிறார்கள். நம் நாட்டில் பசுவின் பால் இன்றி மனிதன் வாழ முடியும் என்று நாம் நம்புவது அருமை.

ஆடு மாடுகளைப் பாதுகாப்பது முக்கிய அம்சம். இந்திய நாட் டுக்கே இது உயிர்நாடி. பசுவை வணங்குகிற நாம் பசுவினத்தை யும் அதன் சந்ததியையும் அலட்சியம் செய்வது மிகவும் பரி தாபகரமானது. பசுவை நாம் கொல்லமாட்டோம். ஆனால், அதைச் சித்திரவதை செய்வது வாஸ்தவம். இன்று ஆடு மாடு கள் மக்களுக்குப் பெரும் சுமையாகிவிட்டனவென்றும் அவற்றைக் கொன்றுவிட்டால் மனிதனுக்கு நல்லதென்றும் அனேகர் பேசுகிறார்கள்.

இந்தியாவிலுள்ள முக்கிய பிரசினைகளில் பசுபாலனம் ஒன்று. பேச்சினாலும், பணத்தினாலும் இந்தப் பிரசினையைத் தீர்க்கமுடி யாது. பசுபாலன அறிவுடைய நிபுணர், பலர் இந்த வேலைக்குத் தங்களை அர்ப்பணம் செய்யவேண்டும். பணம் படைத்தவர்கள் சேவையுணர்ச்சியோடு இதில் ஈடுபட வேண்டும். சுயலாபமும் சுரண்டலும் இதில் கூடாது. பிரசினை பெரிதென்று இதில்

கவலைப்பட வேண்டியதில்லை. அவரவர் மற்றவர்களைப்பற்றிக் கவலைப்படாமல் தாம் செய்யக்கூடியதைப் பூர்த்தியாகச் செய்தால் இந்தப் பிரசினை தீர்வது உறுதி.

* * * * *

பசுபாலனத்தைச் செல்வ நிலையின் தேவையை மட்டும் ஆதாரமாக வைத்து நாம் முடிவு செய்வதாய் இருந்தால் பரிபாலனச் செலவுக்குக் காணாதபடி பால் கறக்கிற பசுக்களையும், பால் மறத்தவை, வயதானவை முதலியவற்றையும் சிறிதும் யோசிக்காமல் கொன்றுவிட நேரும். இந்த நிலை கருணையற்ற நிலை. இதற்கு இந்தியாவில் இடமில்லை. அப்படியானால் போதிய அளவு பால் கொடுக்க முடியாதவை பரிபாலனச் செலவுக்குக் கட்டாதவை முதலான மாடுகளை என்ன செய்வது? இவைகளைக் கொல்லாமல் வைத்துக்காப்பது எப்படி? இக் கேள்விக்கு நான் கீழே விடை தருகிறேன் :—

1. பசுவுக்கும் அதன் சந்ததிகளுக்கும் மனிதன் (ஹிந்து) தான் செய்யவேண்டிய கடமையைச் செய்தல். செய்தால் நம்முடைய ஆடுமாடுகள் உலகத்துக்கே பெருமைகொள்ளத் தக்கனவாய் இருக்கும். இன்று நிலைமை இதற்கு மாறாய் இருக்கிறது.

2. பசு வளர்த்தல் பசு இனப்பெருக்கம் பற்றிய சாஸ்திர முறைகளைக் கற்றுக்கொள்ளுதல். இன்று இதுபற்றி அறியாமையே நிலவுகிறது.

3. காளைகளுக்கு இன்று காயடிக்க உபயோகிக்கிற குரூரமான முறையைக் கைவிட்டு மேலை நாட்டில் உபயோகத்திலுள்ள ஹிம்சையில்லாத முறையை உபயோகித்தல்.

4. வயதான பிராணிகளைப் பராமரிப்பதற்கென்று இந்நாட்டில் ஏற்பட்டுள்ள கால்நடைக் கொட்டில்களில் எவ்விதத் திட்டமும் இல்லாமல் அறிவில்லாத முறையில் இந்த வேலை கொஞ்சமும் தெரியாத மக்கள் செய்துவருகிறார்கள். இந்த நிலைமையை நாம் முழுமையும் சீர்திருத்தவேண்டும்.

5. இந்த அடிப்படையான வேலைகள் செய்தால் இந்த நாட்டிலுள்ள முஸ்லிம்கள், தங்கள் சகோதரர்களான ஹிந்துக்களை உத்தேசித்து, இறைச்சிக்காக மாட்டைக் கொல்வதுபோன்ற செயல்களை விட்டுவிட வேண்டுமென்று தாங்களாகவே உணர்வார்கள்.

இதுவரை கூறியவற்றின் அடிப்படையில் ஒரு கருத்து இருக்கிறது. அதுவே அஹிம்சை, உயிர்களிடத்து அன்பு. முடிவான இந்தத் தத்துவத்தை உணர்ந்தால் மற்றவற்றை உணர்வது எளிது. அஹிம்சை உள்ள இடத்தில் அளவற்ற சகிப்பு, மனவமைதி, விவேகம், தன்னலத் தியாகம் ஆகியவை இருக்கின்றன. பசுபாலனம் எளிதன்று. அன்னிய ஆட்சியை இந்தியாவிலிருந்து அகற்றுவதைவிட இது கஷ்டமானது.

* * * * *

கறவைப் பசுக்கள் அல்லது கடாரிகள் போக மற்றவற்றை நிலம் உழுவதற்கு உபயோகிக்கலாமா என்று 1915 ஆம் வருஷம் முதலே என்னைக் கேட்டு வருகிறார்கள். இவற்றை நிலம் உழுவதற்கு உபயோகப்படுத்தினால் கெடுதலில்லை என்றுதான் அன்றுமுதல் எண்ணி வருகிறேன். கெடுதலுக்கு மாறாக உழைப்பினால் அவை இன்னும் பலமடைந்து அதிகப் பால் கறக்குமென்று நம்புகிறேன். இந்த நன்மை எப்போது வரக்கூடுமென்றால் மாட்டைத் தனக்குத் தோழனாகப் பாவித்தால்தான். நம் நாட்டில் நடத்துவதுபோலக் கொடுமையாக நடத்துவது கூடாது. எந்த மாடு நமக்குச் சேவை செய்கிறதோ அந்த மாட்டினிடம் நமக்குச் சினேகபாவமிருக்கவேண்டும். உயிருள்ளது எதுவும் தன் ஜீவனத்துக்கு உழைத்தேயாகவேண்டும். ஜீவன உழைப்பு அபிவிருத்திக்கு இடமானது. மனிதனையோ, பிராணியையோ இது ஒருபோதும் தாழ்த்துவதில்லை.

உபயோகமற்ற மாடுகளைக் கொன்றுவிடலாமா என்பது மற்றொரு கேள்வி. பசுக்கொலையைச் சட்டத்தால் நிறுத்திவிடமுடியாது. நல்ல அறிவு, கல்வி, கருணை இவைகளே இந்த அநீதியை நிறுத்த முடியும். பூமிக்குப் பாரமாய் இருக்கும் பிராணிகளைக் காப்பாற்றுவது கஷ்டம். மனிதன் பூமிக்குப் பாரமாகிவிட்டால் அவனைக் காப்பாற்றுவதும் கஷ்டம்தான்.

* * * * *

காளைகளைக் காயடிப்பது நியாயமா என்று ஒருவர் கேட்கிறார். இது நியாயமில்லை என்றால் காட்டுப்பசுவை நாட்டுப்பசுவாக்கி வைத்திருப்பதுவும் நியாயமில்லை. அன்றியும், நாகரிகத்தின் போக்கானது பிராணிகளை மனிதன் அடக்கி ஏவல் கொள்

ளும்படி செய்துவிட்டது. ஏவல் கொள்வதில் கருணை காட்டுவது எப்படி என்பதே கேள்வி. இதுபற்றி மூன்று விதமான அபிப் பிராயங்கள் இருக்கின்றன. ஒன்று பிராணிகளை உபயோகிக்காமல் அவை செய்யும் வேலைக்கு வேறு சக்தியை உபயோகிக்கலாம் என்பது. இரண்டு, பிராணிகளுடன் தோழமை பூண்டு சகோதர பாவத்துடன் அவைகளை உபயோகித்துக்கொள்வது. மூன்று, மனிதன் சுய நலத்துக்குப் பிராணிகளை உபயோகிக்காமல் அவரவர் தம் சொந்தச் சக்தியையும் மற்றவர்கள் விரும்பி அறிவோடு செய்கிற உதவியையும் உபயோகித்துக்கொள்வது.

இதில், மூன்றுவது கருத்து எனக்கு உடன்பாடு. அறிவும் அன் பும் பொருந்திய மனித சக்தியை உபயோகித்தால் பிராணி களில்லாமலே பழ உற்பத்தி செய்யலாம். சுமாராகச் சோளச் சாகுபடியும் செய்யலாம். தென் ஆப்பிரிக்கா டிரான்சுவாலில் சட்ட மறுப்புக் கைதிகள் என்ற முறையில் நாங்கள் ஒரு நகர சபையின் பூந்தோட்டம் அமைக்க வேண்டியிருந்தபோது கல்தரையானபடியால் கலப்பை அங்குப் பயன்படவில்லை. குந்தாலியால்தான் நாங்கள் கொத்த வேண்டியிருந்தது.

முதல் கருத்து பயனற்றது, மனித குலத்துக்கே கேடானது என்று சொல்லுவேன். மற்ற இரண்டையும் ஏற்ற அளவு நாம் அனுசரிக்கலாம். காயடிப்பதைத் தவிர்க்க முடியாது. ஹிம் சையற்ற முறையில் இதைச் செய்யவேண்டும்.

* * * * *

ஹிந்து மதம் பசுக்கொலை கூடாதென்று ஹிந்துக்களுக்கே கட்டளையிட்டது, உலகத்துக்கல்ல. பக்தியால் வரும் கட்டுப்பாடு அகத்திலிருந்து உதிக்கவேண்டும். புறத்திலிருந்து வருவது நிர்ப்பந்தம். நிர்ப்பந்தம் என்பது சமயக்கொள்கைக்கு விரோத மானது. இந்தியாவில் இருப்பவர்கள் ஹிந்துக்கள் மாத்திர மல்ல. முஸ்லிம், பார்சி, சிக்கியர், கிறிஸ்தவர், யூதர் அனை வரும் இருக்கிறார்கள். ஹிந்துக்கள் மதத்துக்கு விரோதமானது என்றால், இந்திய நாட்டில் சட்டபூர்வமாக ஏன் பசுவதை யைத் தடுக்கவேண்டுமென்பது எனக்கு விளங்கவில்லை. நான் ஐம்பது வருஷமாக பசு வழிபாடு செய்பவன். பசுவுக்கு இந் திய வாழ்க்கையில் நிரந்தரமான இடமுண்டு. முஸ்லிம் மக் களுடைய மனத்தை ஹிந்து சகோதரர்கள் கவர்ந்தால் இவர்கள்

மனம் புண்படாமலிருக்க வேண்டி அவர்கள் பசுவதையைத் தவிர்க்கலாம். கிலாபத் இயக்க காலத்தில் இது நடைபெற்றிருக்கிறது. இப்போதும் ஏன் அப்படி நடக்கக்கூடாது ?

ஹிந்துக்கள் பசுவைக் கொல்லவில்லை என்றால் கொலைக்குச் சமமான காரியம் செய்கிறார்கள். சரியான தீனி போடாமல், பாதுகாக்காமல், கறவை மறத்தவுடனே மாட்டை விற்றுவிடுகிறார்கள். இந்த மாடு கசாப்புக்கடைக்குப் போகிறது என்பதை இவர்கள் அறிய வேண்டாமா ? அதிக விலை கொடுப்பவனுக்கு இவர்கள் இதை விற்கிறார்கள். மாடுகள் கப்பலேற்றி அன்னிய நாடுகளுக்குப் போகின்றன. அங்கு மாட்டிறைச்சியின் சாரம் வடித்துக் கண்ணாடியில் அடைத்து மருந்தென்று நமக்குத் திரும்பி வருகிறது. டாக்டர் யோசனையைக் கேட்டு நம் நாட்டில் வைதிகர் தங்கள் குழந்தைகளுக்கு வாங்கிக் கொடுக்கிறார்கள். இவர்களும் பசுக்கொலை என்ற பாதகத்துக்கு உடந்தையல்லவா ? மேலும், தாறு போட்டு நம்மவர்கள் மாட்டை எவ்வளவோ துன்புறுத்துகிறார்கள். இந்த நிலையில், சட்டம் வந்து தங்கள் பசுவைக் காப்பாற்ற வேண்டுமென்பது பொருந்தாது. மேலும், இந்தியாவில் மாட்டுச் செல்வம் முழுவதும் ஹிந்து மக்கள் வசமே இருக்கிறது. எந்த நாட்டிலும் மாடுகள் இவ்வளவு கீழ்த்தரமான நிலையில் இல்லை. இங்கிலாந்தில் மக்கள் மாட்டிறைச்சியை உண்டபோதிலுங்கூட எவ்வளவோ உயர்தரமாக மாடுகளை வளர்த்து வைத்திருக்கிறார்கள். ஆகவே, பெரும் செல்வமாகிய மாட்டுச் செல்வத்தை நாமே பாதுகாத்துக்கொள்ளவேண்டுமே தவிர, சட்டத்தின் உதவியை நாடக்கூடாது.

* * * * *

பாலிலிருந்து நெய் எடுக்கும் தொழில் முக்கியமான கிராமத் தொழில். தாவர நெய் என்றும், வனஸ்பதி என்றும் இன்று வழங்குகிற கட்டி எண்ணெய் மக்களை ஏமாற்ற உதவுகிறது. கோ பூஜை செய்பவர்களுடைய பேராசையால்தான் இந்தக் கேடு விளைகிறது. வனஸ்பதி என்பதற்கு இங்கு இடமில்லை. எண்ணெயிலுள்ள கேடான இயல்பைப் போக்கலாம். ஆனால், அதைக் கட்டியாக்கவோ நெய் போன்ற தோற்றமுடைய தாக்கவோ அவசியமில்லை. யோக்கியமான உற்பத்தியாளன் போலிவேலையில் இறங்கமாட்டான். கடையெங்கும் இன்று போலிகள் மலிந்து

விட்டன. திருட்டு நாணயம் செய்பவனுக்குக் கடுமையான தண்டனை கிடைக்கும். அப்படியானால் காசைவிட நெய் மிகவும் அதிக மதிப்புடையதாய் இருக்கும்போது, போலி நெய் செய்பவனைத் தண்டிக்கவேண்டாமா ?

## 20. இயற்கை வைத்தியம்

நம் உடம்பு பஞ்ச பூதச் சேர்க்கையாலானது. இவற்றுள் காற்று முதன்மையானது. மனிதன் உணவில்லாமல் பல வாரம் உயிர் வாழலாம் ; நீரில்லாமல் கொஞ்சநேரம் இருக்கமுடியும் ; காற்றில்லாமல் சில நிமிஷநேரங்கூட இருக்க முடியாது. ஆதலால் கடவுள் எங்கும் காற்றுக் கிடைக்கும்படி செய்திருக்கிறார். உணவுப்பஞ்சம், தண்ணீர்ப்பஞ்சம் ஏற்பட்டிருக்கின்றன, காற்றுப்பஞ்சம் ஏற்பட்டதில்லை. இப்படியிருந்தும், நாம் வீட்டினுள் கதவையும், ஜன்னலையும் மூடிக்கொண்டு படுத்துறங்குவதால், கடவுள் கொடுத்த அரிய வரப்பிரசாதமாகிய சுத்தமான நல்ல காற்றை விலக்கிவிடுகிறோம். திருடர் வரக்கூடுமென்ற பயமிருந்தால் இரவில் கதவுகளை அடைக்கலாம் ; ஆனால் ஒருவன் தன்னையே ஏன் உள்ளே வைத்து அடைத்துக் கொள்ளவேண்டும் ?

சுத்தமான காற்றைச் சுவாசிப்பதானால், திறந்த இடத்தில் வெளியே படுக்கவேண்டும். ஆனால், வெளியே எங்கும் அழுக்கும் தூசியும் நிரம்பிய காற்றே உலவுமானால், இதிலும் பயனில்லை. நாம் படுத்துறங்கும் இடத்தில் இவ்வழுக்கும் தூசியும் இருத்தலாகாது. தூசியும் குளிரும் முகத்தில் படாத வண்ணம் சிலர் முகத்தை மூடிப் படுத்துறங்குகிறார்கள். இது நோயினும் கேடான பரிகாரமாகும். அன்றியும், வாயால் மூச்சு விடுகிற தவறான பழக்கம் பலரிடம் இருக்கிறது. உணவை உட்செலுத்துவதே வாயின் வேலை ; இது மூச்சுவிடும் கருவியன்று. மூக்கின் வழியே உட்செல்லும் காற்றை, மூக்கு அழுக்கின்றி வடிகட்டிச் சுத்தமாக்கி அனுப்புகிறது. இக்காற்று கொஞ்சம் வெப்பமடைந்து உட்செல்லுகிறது.

கண்ட இடமெல்லாம் எச்சில் துப்பியும், குப்பை கூளங்களை எறிந்தும் அசுத்தம் செய்பவர் மனிதனுக்கும் தெய்வத்துக்குமே துரோகம் செய்தவராகிறார். மனித உடம்பு ஈசன் உறையும் ஆலயம். இவ் வாலயத்தினுள் நுழையவிருக்கும் காற்றில் அசுத்தத்தைச் சேர்ப்பவர் ஆலயத்தையே அனுசாரமாக்குகிறார். அவர் ராமநாமத்தைச் செபிப்பது வீண்.

* * * * *

இயற்கை வைத்தியம் மிக்க எளிமையாயிருப்பதோடு செலவுக்கு இடமில்லாமலும் இருக்கவேண்டும். இவ் வைத்தியம் முழுமையும் கிராமத்திலேயே நடைபெறவேண்டும். கிராமத்தில் கிடைக்காத பொருள்களைத் தருவித்துக்கொள்ளவேண்டும். இவ் வைத்தியத்துக்கான வசதி தளவாடங்களைக் கிராமத்தாரே அமைக்க வேண்டும்.

இயற்கை வைத்தியம் என்பது வாழ்க்கைபற்றிய மனப்போக்கிலேயே ஒவ்வொருவரிடமும் வரவேண்டிய முன்னேற்றமாகும். ஆரோக்கியம்பற்றிய இயற்கை விதிகளையொட்டி அவர் தம் வாழ்க்கையை நடத்துகிறார் என்பது இதன் பொருள். மருத்துவச் சாலையிலிருந்து செலவில்லாமல் இலவச மருந்து பெறுவது இயற்கை வைத்தியமாகாது; இப்படி இலவச வைத்தியம் பெறுபவன், தருமம் பெறுகிறான். இயற்கை வைத்தியத்தை ஏற்பவன் பிச்சை யேற்கமாட்டான். தன்முயற்சியே தன் மரியாதையை வளர்க்கும். இவன் தன் உடம்பில் சேர்கிற நஞ்சையெல்லாம் நீக்க வழிதேடுகிறான்; பிற்காலத்திலும் நோய் வராமலிருக்க வழி தேடிக்கொண்டு எச்சரிக்கையாயிருக்கிறான்.

இயற்கை வைத்தியத்தில் நடுநாயகமாயுள்ளது ராமநாம ஜெபம். ஒருவருக்கு வரும் எல்லா நோயையும் இது தீர்ப்பதானால் இந்த ஜெபம் இதயத்திலிருந்து எழவேண்டும்..

இயற்கை வைத்தியத்தில் பிரதான பாகம் நாரத்தம்பழச் சாறல்ல; சரியான உணவும் சீரான உணவுமே பிரதானம். இன்று நம்மைப்போல நம் கிராமங்கள் முழுமையும் தரித்திர

நிலையிலுள்ளன. போதிய காய்கறி, பழம், பால் உண்டாக்கு வதே இயற்கை வைத்தியத்தில் முக்கிய வேலை. இதற்குச் செலவிடுகிற நேரம் வீணல்ல. இதனால் கிராமங்களுக்கும் இந்தியா முழுமைக்குமே நன்மை.

* * * * *

இயற்கை வைத்தியத்துக்கே நடுநாயகம் என்று நான் கூறுகிற ராமநாம ஜெபம், மூடநம்பிக்கைக்கு விரோதமானது. நாவினால்மட்டும் நாம பாராயணம் செய்வது வைத்தியமாகாது. ராம நாமம் இதயத்திலிருந்து வரவேண்டும். கடவுளிடம் மனப்பூர்வ மான பக்தியும் அவர் வகுத்த நெறிபற்றிய அறிவும் இருந்தால், வேறு உதவி இல்லாமலே நோய் நீங்கும். அந்த நெறியாவது, உடம்பின் பூரண ஆரோக்கியத்துக்கு உள்ளத்தின் பூரண ஆரோக்கியம் அவசியம் என்பதுதான். ஆரோக்கியமான மனம் ஆரோக்கியமான இதயத்திலிருந்து உண்டாகிறது. இது டாக்டர் வந்து ' ஸ்டெதாஸ்கோப் ' என்ற கருவி வைத்துப் பரிசோதிக்கிற இதயமல்ல. இது ஈசன் கோயிலாகக் கொண்ட இடமாகிய நினைப் பவர் இதயம். ஈசன் வீற்றிருக்கிற நெஞ்சத்தில் தீய கருத்துச் சிறிதும் புக இடமிராது என்பார்கள். தூய சிந்தையுள்ள இடத் தில் நோய் புகாது. இந்த நிலை வருவது ஒருவேளை அருமை யாகலாம். ஆனால், இதை உணர்வதுதான் இந்த நிலை அடைவ தற்கு முதல்படி. இதற்கான முயற்சி செய்வது அடுத்தபடி யாகும். இதுவரையில் மனிதன் கண்டறிந்த எல்லா இயற்கை நியதிகளையும் அனுசரித்து நடப்பது அவசியமான மாறுதலைத் தோற்றுவிக்கும். இந்த விதிகளைக் கவனிக்காமல் விளையாடி விட்டுத் தூய நெஞ்சம் படைக்கமுடியாது. தூய நெஞ்சமிருக்கு மானால், ராமநாமம் இல்லாவிட்டாலும் பாதகமில்லை. இதுவே உலகத்துப் பெரியோர் அனைவரும் சென்ற நெறி.

* * * * *

நான் தென் ஆப்பிரிக்காவில் இருந்தபோது மலச்சிக்கல், தலைவலி முதலிய தொந்தரவுகள் எனக்கு இருந்துவந்தன. அவற்றுக்குப் பரிகாரமாக உணவை ஒழுங்குபடுத்திக்கொண்டு பேதி மருந்துமட்டும் உண்டுவந்தேன். உடம்பு சுமாராய்

இருந்தபோதிலும், பூரண ஆரோக்கியம் இருந்ததென்று சொல்ல முடியாது. எப்போது பேதி மருந்திலிருந்து விடுதலை கிடைக்குமென்று நான் ஏங்கியது உண்டு.

கூனி என்பவருடைய இடுப்புஸ்நானம் முதலியவைகளைச் செய்துபார்த்தேன். சொற்ப பலன் இருந்தாலும் மலச்சிக்கல் பூரணமாக நீங்கவில்லை. அந்தச் சமயம் ஜஸ்ட் என்பவர் எழுதிய 'மீண்டும் இயற்கை வாழ்வு' என்ற புத்தகத்தைப் பார்த்தேன். அதில் அவர் களிமண் வைத்தியத்தைக் குறிப்பிட்டிருந்தார். இதை நான் செய்து பார்த்தபோது ஆச்சரியகரமான பலன் ஏற்பட்டது. களிமண் சிகிச்சை முறை என்றால் வயிற்றின்மேல் ஒரு மெல்லிய துணியைப் போட்டு அதன்மேல், பற்று போடுவதுபோல, சுத்தமான ஈரக் களிமண்ணைப் போடுவதாகும். இதை நான் படுக்கும்போது வயிற்றில் போட்டுக்கொண்டு விழித்த உடனே இரவிலேனும் காலையிலேனும் நீக்கிவிடுவது வழக்கம். பல நண்பர்களுக்கும் இச் சிகிச்சையைச் செய்திருக்கிறேன். நல்ல பலன் ஏற்பட்டிருக்கிறது. இன்னும்கூட நான் இதைச் செய்துகொள்வதோடு, என் தோழர்களுக்கும் செய்வதுண்டு.

மருந்து சாப்பிடுவது அவசியமில்லை என்றே நான் கருதுகிறேன். ஆயிரம் பேர் வியாதியுள்ளவர்களில் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றென்பது பேருக்கு நேரப்படிக்கான உணவு, நீர், களிமண் சிகிச்சை, மற்ற வீட்டு வைத்திய முறைகளால் பூரண சுகம் வரும்படி செய்யலாம். எடுத்தவுடனே எந்தச் சிறு நோய்க்கும் வைத்தியரிடம் ஓடி மூலிகை மருந்தையும், ரசாயன மருந்தையும் விழுங்குகிறவன், தன் ஆயுளைக் குறைத்துக் கொள்வதோடு, தன் உடம்பைத் தான் ஆட்கொள்ள முடியாமல் தான் உடம்புக்கு அடிமையாகி, தன் மனிதத்தன்மையையும் இழந்துவிடுகிறான்.

* * * * *

நான் கூறுகிற இயற்கை வைத்தியம் கிராமத்தாருக்கு என்றே கூறுகிற திட்டமாகும். ஆதலால், இதில் எக்ஸ்ரே கருவி முதலியவற்றுக்கு இடமில்லை. இந்தத் திட்டத்தில், அதாவது இயற்கை வைத்தியத்தில், கொயினா பெனிசிலின்போன்ற மருந்துகளுக்கும்

இடமில்லை. உடலின் சுகாதாரமும் ஆரோக்கிய வாழ்க்கையுமே முக்கியமானவை. இவைகளே போதும். இவற்றில் எல்லோரும் திறமைபெற்றுவிட்டால் பிறகு நோய்க்கு இடமில்லை. இயற்கையின் விதிகளை எல்லாம் அனுசரித்து நோய் நீக்குவதில், மேலான மருந்தாகிய ராமநாமம் கூடவே இருக்கிறது. ஆனால், ஒருகணநேரத்தில் இந்த மருந்து பிரபஞ்சமெங்கும் பரவமுடியாது. இதனால் சிகிச்சை வரவேண்டுமென்றால் வைத்தியரே ராம நாம சக்தியின் உருவமாயிருக்கவேண்டும். அதுவரையில் பஞ்ச பூதங்களே போதுமானவை. அவையாவன: மண், நீர், தீ, காற்று, ஆகாசம். இயற்கை வைத்தியம் இவற்றோடு நின்றால் போதும். அவசியமானால் ஆங்காங்கு பயிராகிற மூலிகைகளை உபயோகித்துக்கொள்ளலாம்.

## சமக்ர கிராம சேவை

இன்றுள்ள நிர்மாணத்திட்டத்தில் 18 அங்கங்களிருக்கின்றன. அஹிம்சையின் சின்னமான ராட்டை இவற்றில் நடுநாயகமாக இருக்கிறது. ஆகவே, ஊழியர் அனைவரும் நூற்கவேண்டும், நூற்றலைப்பற்றி எல்லாம் தெரிந்திருக்கவேண்டும். ஊழியர் ஒருவர் காகிதம் செய்யும் தொழிலைத் தம் பிரதானத் தொழிலாகக் கொள்ளுகிறார் என்று வைத்துக்கொள்வோம். தம் ஜீவனத்தை அத்தொழிலைக் கொண்டே அவர் நடத்த வேண்டியவர். வேறு வேலை செய்வதற்கு அவருக்குக் கொஞ்சமும் நேரம் இராது. எனினும், அவர் ராட்டை மூலமாகவும் காகிதத்தொழில் மூலமாகவும் கிராமத்துக்கு என்ன செய்ய முடியுமோ அதைவிட அதிகமான சேவையைச் செய்வது சாத்தியந்தான். உதாரணமாக அவர் அந்த கிராமத்துக்கு வேண்டிய துப்புரவு சுகாதாரவேலை செய்யலாம். நோயுற்றவர்களுக்குப் பணிவிடை செய்யலாம். இதற்கு முழுப்பொறுப்பு அவர் ஏற்கமுடியாதபோது, கிராமத்தாருக்கு நோயுற்றோர் பணிவிடை பற்றிய அறிவு புகட்டலாம்.

மற்றோர் ஊழியர் ராட்டை வேலைமாத்திரம் தீவிரமாக மேற்கொண்டு அதன்மூலம் தம் ஜீவனத்தை நடத்த முடிவு செய்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர் அப்படிச்

செய்வது பொருத்தம்தான். ராட்டை சுற்றுவதனால் ஒருவர் தம் ஜீவனத்தை நடத்திக்கொள்வதோடுகூட அயலில் வாழ்ப வர்களுக்குப் பயனுள்ள ஊழியம் செய்யவும் முடியும் என்று நான் உறுதியாய் எண்ணுகிறேன். இதில் முக்கியமானது என்ன என்றால், ராட்டை சுற்றியபோதிலுங்கூட அதற்கும் அதிகப்படி யாகத் தமக்கு இருக்கவேண்டிய முக்கியமான வேலை எது, துணை வேலைகள் எவை என்பதை ஒவ்வொரு ஊழியரும் தாமே முடிவு செய்துகொள்ளவேண்டும். அவர் என்ன வேலை செய்வதா யிருந்தபோதிலும், அதை அறிவுத் திறனோடும் புத்திபூர்வமாக வும் அவர் செய்யவேண்டும். இவ்விதமாக அறிவுத்திறனோடு அவர் நூல் நூற்பதானால், நூற்பதற்கு முந்திய வேலை முறை களையும் பிந்திய வேலை முறைகளையும் அவர் பூர்த்தியாய் அறிய வேண்டும். எந்த வேலைகளில் அவர் தீவிரமாய் ஈடுபட விரும்பு கிறாரோ அதைப்பற்றிய முழு அறிவும் அவருக்கு வேண்டும். கூட, நிர்மாணத்திட்டத்தின் மற்ற அங்கங்கள் பற்றிய சுமாரான பொது அறிவும் அவருக்கு இருக்கவேண்டும். வான சாஸ்திரம் கற்பவர் மற்றச் சாஸ்திரங்களைப்பற்றிய பொதுவான அறிவு கொஞ்சமேனும் இல்லாமல் வான சாஸ்திர நிபுணராக முடி யாது. அதேபோல, தொண்டர் ஒருவர் நிர்மாணவேலையின் மற்ற அங்கங்களைப்பற்றி ஒன்றுமே தெரியாமல் இருக்கமுடியாது.

## சமக்ர கிராம சேவை என்பது யாது ?

பதினெட்டு அம்சங்கொண்ட நிர்மாணத்திட்டத்தில் சமக்ர கிராம சேவையும் அடங்குகிறது. சமக்ர கிராம சேவகர் ஒருவர் கிராமத்தில் வாழ்பவர் ஒவ்வொருவரையும் தெரிந்துகொண்டு, அவரவருக்குத் தம்மாலான சேவையைச் செய்யவேண்டும். எல்லா வேலையையும் அவர் தாம் ஒருவராகவே செய்யமுடியும் என்பது இதன் பொருளல்ல. மக்கள் தங்களுக்கு வேண்டிய வற்றைத் தாங்களே எப்படி செய்துகொள்வது என்பதைக் காட்டி அவர்களுக்குத் தேவையான பொருள்களையும் தேடிக்கொடுப்பார். தமக்குவேண்டிய உதவியாளரையும் அவரே பழக்கிக்கொள்வார். கிராமத்தாரை அவர் தம் அன்பினால் வசப்படுத்தி தம் துணையை அவர்கள் தேடும்படியும், தம் யோசனையைக் கேட்டு நடக்கும்படி யும் செய்வார்.

நான் ஒரு கிராமத்தில் போய்த் தங்குகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். அந்தக் கிராமத்தில் ஒரு செக்கு இருக்கிறது. அங்கு நான் மாதம் பதினைந்து அல்லது இருபது ரூபாய் சம்பாதிக்கிற சாமானிய வாணியனாக இருக்கமாட்டேன். இருந்தால், நான் வாணிய மகாத்மாவாக இருப்பேன். மகாத்மா என்ற வார்த்தையை நான் இப்போது வேடிக்கையாக உபயோகிக்கிறேன். என் கருத்து என்னவென்றால், நான் வாணிய வேலை செய்தாலும் மற்றவர்கள் என்னைப் பின்பற்றத்தக்க முன்மாதிரியாக இருப்பேன். கீதையும் கொரானும் தெரிந்த வாணியனாக இருப்பேன். ஊர்ப் பிள்ளைகளுக்குக் கல்வி பயிற்றத்தக்க அறிவு எனக்கு இருக்கும். ஒரு வேளை நேரம் இல்லாத காரணத்தால் நான் கல்வி போதிக்க முடியாமற்போகலாம். அப்போது கிராமத்தார் என்னிடம் வந்து தங்கள் பிள்ளைகளுக்குக் கல்வி போதிக்க ஏற்பாடு செய்யும்படிக் கேட்பார்கள். 'நான் ஒரு உபாத்தியாயரை வருவிக்கிறேன், அவர் செலவிற்கு நீங்கள் பணம் தரவேண்டும்' என்று நான் சொல்வேன். அவர்கள் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்வார்கள். அவர்களுக்கு நான் நூல் நூற்கக் கற்பிப்பேன். தறிகாரர் ஒருவர் வேண்டும் என்று அவர்கள் என்னை வந்து கேட்கும்போது, உபாத்தியாயரை நியமித்த மாதிரியே அதே நிபந்தனையின்மேல் அவர்களுக்கு ஒரு தறிகாரரைத் தருவிப்பேன். தங்கள் நூலை அவர்கள் துணியாக நெய்துகொள்ள இவர் கற்பிப்பார்.

கிராம மக்கள் வாழ்க்கையில் துப்புரவும் சுகாதாரமும் எவ்வளவு முக்கியம் என்பதை உணர்த்துவேன். மக்கள் என்னிடம் வந்து தோட்டி ஒருவன் வேண்டும் என்று கேட்கும்போது, 'நானே உங்களுக்குத் தோட்டியாக இருக்கிறேன், தோட்டிவேலையில் உங்கள் எல்லோரையும் பழக்குகிறேன்' என்று சொல்லுவேன்.

சமக்ர கிராம சேவை என்று நான் நினைப்பது இதுவே. இந்த நாகரிக யுகத்தில் நான் குறிப்பிட்ட லட்சணமுடைய வாணியன் அகப்படமாட்டான் என்று நீங்கள் சொல்லலாம். அது உண்மையானால் இந்த யுகத்தில் கிராமங்களை அபிவிருத்தி செய்ய முடியாது என்றே சொல்லுவேன். ருஷ்யாவிலுள்ள வாணியன் நிலையைப் பாருங்கள். எண்ணெய் ஆலைவைத்து

ஆடுபவனும் வாணியன்தான். அவனிடம் பணமிருக்கிறது. ஆனால், அவனுடைய பணம் எல்லாம் பலத்தால் வந்ததல்ல. அவனுடைய அறிவில்தான் உண்மையான பலமிருக்கிறது. உண்மையான அறிவுதான் உயர்ந்த மனோபலந் தருகிறது. அப்படிப்பட்ட அறிவுடையவன் யோசனையையே எல்லோரும் நாடு கிறார்கள். வினோபாவைப் பாருங்கள். அவரே சிறந்த வாணியர். உங்கள் சக்திக்கு இயன்றமட்டும் நீங்கள் எல்லோரும் அவருடைய முன்மாதிரியைப் பின்பற்றமுடியும்.

## மரங்கள் பயிரிடுதல்

நம் நாட்டில் மரங்களை அழித்த காரணத்தால் மழை குறைந்துபோயிற்று. பயிரிட்டவுடன் கொஞ்சநாள் நீர்விட்டுக் கவனித்தால் மரங்கள் பிறகு தாமே வளர்ந்துவிடும். மேலும், ஓர் ஏகரா நிலத்தில் உணவுத் தானியங்கள் பயிரிட்டுவரும் வருமானத்தைவிட மற்றோர் உணவுப் பொருளான பழந்தரும் மரங்கள் அதிக லாபம் கொடுக்கும். திறந்த இடங்களிலெல்லாம் காய்கறி பயிரிடுவது அவசியம். இப்படித் தோட்டத்திலும் தொட்டியிலும் காய்கறி பயிரிடுவது நல்ல பொழுதுபோக்கு என்பதன்றி, இது ஆரோக்கியகரமான வேலையும் ஆகும்.

———

## நிர்மாணத் திட்டம்

கதரபி விருத்தியும் கைத்தொழில் வளர்ச்சியும்,
மதவொற் றுமையும், மாதர் முன் னேற்றமும்,
மதியினை மயக்கும் மதுவினை விலக்கலும்,
புதுமுறைக் கல்வியும், பொதுஜனக் கல்வியும்,
நம்தாய் மொழியும், இந்திய மொழியும்,
ஊர்ச் சுகா தாரமும், உடற் சுகா தாரமும்,
ஹரிஜன சேவையும், சரிசம உடைமையும்,
வையம் வாழும் வகைசெயும் உழவர்,
குஷ்டம் என்னும் கொடுநோய் கொண்டோர்,
மலைவாழ் குடிகள், மாணவர் தம்மொடு,
தொழில்செய் மக்கள் துயரம் தீர்த்தலும்,
ஆய இப் பதினெண் அரும்பணி வாயிலாய்ச்
சர்வோ தய நற் சமுதா யத்தினை,
நிர்மாணம் செய நித்தமும் உழைப்போம்.

# பொருள் அகராதி

# ராம ராஜ்யம்

காந்தியடிகள் காண விரும்பும்
ராமராஜ்யம் எதுவெனக் கேளீர்!
பக்தர்தம் பாஷையில் புகருவதாயின்
இறைவனுடைய ஏகாதிபத்தியம்
இப்புவி மீது ஏற்படுவதுவே.
அரசியல் மொழியில் அதன் பொருள் யாதெனில்,
சர்வ ஜனங்களின் சம்மதம் பெற்ற
ஆட்சி முறையே அங்கு நடைபெறும்.
சுகவாழ்க்கையிலோ சொத்துரிமையிலோ
ஏற்றத்தாழ்வு ஏதுமங்கில்லை;
ஜாதிக் கொடுமையும், சமயப் பூசலும்,
பால் வேற்றுமையும், இனவேற்றுமையும்,
பண்டைக் காலப் பழங் கதையாகி
'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'
என்றே அங்குளோர் எண்ணியிருப்பர்.
மாநில முழுவதும் மக்களின் உடைமையாம்;
மக்களெல்லோரும் மன்னர்களாவர்.
எளிதாய் விரைவாய் எவர்க்கும் ஆங்கே
நிலை தவருத நீதி கிடைக்கும்;
எழுத்தில், பேச்சில் இறைவனைத் தொழுவதில்
சுதந்திரச் சோதி சுடர்விட் டொளிரும்;
'இத்தகை ராஜ்யம் ஏற்படுதற்கு
தத்தம் பணியைத் தாமே செய்திடும்
கடனறி மக்களே காரண' மென்ற
காந்திஜி வாசகம் கருத்திடைக்கொண்டு
இன்ப உலகம் இராம ராஜ்யம்
நிலைபெற அனைவரும் நித்தமும் உழைப்போம்.

—கோ. வே.